
9 JUL 1959
STATE LEGISLATURE MADRAS

# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Wednesday, the 11th February 1959.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS

*Beedi industry*

* *S.N.Q.* 1.—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the Government are aware of the crisis facing the beedi industry in the State due to import restrictions in Ceylon;

(*b*) whether any representation has been made by the Government to the Union Government for taking up the question with the Government of Ceylon; and

(*c*) what steps have been taken to give relief to beedi industry?

THE HON. SRI R. VENKATARAMAN: (*a*) Yes, Sir.

(*b*) Yes, Sir.

(*c*) The Government of India were requested to take sttps to restore the normal import quota of beedies from India to Ceylon. They have informed the State Government that they will do their utmost to see that the restrictions imposed by Ceylon are relaxed, if not fully removed.

SRI M. KALYANASUNDARAM: சிலோன் கவர்ன்மெண்ட் இந்த பீடி இறக்குமதியைக் கட்டுப்படுத்துவதற்கு என்ன காரணம்? இது சம்பந்தமாக நம்முடைய மத்திய சர்க்கார் சிலோன் சர்க்காரோடு செய்துகொண்ட ஒப்பந்த சமயத்தில் நம்முடைய ராஜ்யசர்க்காரினுடைய அபிப்பிராயத்தை கேட்டார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN: இப்பொழுது சிலோன் கவர்ன்மெண்ட் பீடி இறக்குமதியைக் குறைத்துக்கொண்டிருப்பது இந்தியா-சிலோன் ஒப்பந்தப்படி. ஒப்பந்தம் செய்துகொண்டபோது நம்மைக் கலந்தார்களா என்பதற்கு என்னிடத்தில் தற்போது தகவல் இல்லை. தனியாக கேள்வி போட்டால், பதில் சொல்லலாம்.

SRI S. LAZAR: இந்தத் தடை ஏற்பட்ட காரணத்தால் எந்த அளவுக்கு நாம் பாதிக்கப்பட்டிருக்கிறோம் என்று மதிப்பிட முடியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: 45 சத விகித பீடிகள் இப்பொழுது சிலோனுக்கு அனுப்ப முடியாமலிருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : இந்த பீடி இறக்குமதித் தடையின் காரணமாக எத்தனை தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பீடி எற்றுமதித் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்களிலே சுமார் பாதிப் பேர் பாதிக்கப்பட்டிருப்பார்கள் என்று சொல்லலாம் 45 சத விகிதம் எற்றுமதி தடைபட்டிருப்பதால்.

SRI T. T. DANIEL : Sir, may I know whether any measures have been taken by Government so as to render relief to the workers who have been thrown out of employment? Is it a fact that because the Central Government put some restrictions on the import of tobacco from Ceylon to India, the Ceylon Government have put restrictions on the import of beedis?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I wish to state in detail the position. By an agreement between India and Ceylon, the import of raw tobacco into this country was restricted. Actually in March 1958, dealers in tobacco in this State came and represented to me that even this import of tobacco which was permitted under the Indo-Ceylon agreement, namely, 1,500 candis of chewing tobacco, should be further restricted. I wrote to the Government of India at that time, and I was told that because of the Indo-Ceylon agreement, it was not possible to further restrict the import of chewing tobacco into this country. Now, as part of that agreement, the export of beedis from India to Ceylon is to be progressively reduced. For the year 1957–58, 20 lakhs of pounds were to be allowed. For 1958–59, 16 lakhs, 1959–60, 12·8 lakhs, 1960–61, 10·24 lakhs. In pursuance of this agreement, the Ceylon Government have progressively reduced the import of beedis into their State. The Government of India have now represented to the Ceylon Government that this restriction may be relaxed, because Ceylon is not really producing all the beedis that it wants.

SRI M. KALYANASUNDARAM : இம்மாதிரி தமிழ் நாட்டுப் பீடித் தொழிலைப் பாதிக்கக்கூடிய ஒரு ஒப்பந்தம் நடந்துகொண்டிருக்கிறது சர்க்காருக்கு ஒரு வருஷத்திற்கு முன்னதாக தெரிந்தாலும், ஏன் உடனே நடவடிக்கை எடுக்கவில்லை ? அதற்கான காரணங்கள் என்ன என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு தேசத்திற்கும் மற்றொரு தேசத்திற்கும் செய்து கொள்ளுகிற ஒப்பந்தம் மத்திய சர்க்காரைப் பொறுத்தது. அதுவும், நமக்கு புகையிலை இறக்குமதியைத் தடை செய்ய வேண்டுமென்ற ஒரு நிலைமை இருந்ததினால் நாம் சிலவற்றைத் தடை செய்தோம் ; அவர்கள் அதற்கு எதிரிடையாக சிலவற்றைக் குறைத்துக் கொண்டார்கள்.

SRI M. S. SELVARAJAN : இயல்பாகவே புகையிலை உபயோகிப்பது அநாகரீகம் என்று கருதி நமது ராஜ்யத்தில் பெரும்பாலோர் புகையிலை உபயோகிக்கப்பதை விட்டுவிட்டாலும்,பெரும்பாலும் புகையிலை உபயோகிப்போர் கேரளப் பிரதேசத்தார் என்பதையும் மனதிற்கொண்டு, யாழ்ப்பாணப் புகையிலை வருவதை அனுமதித்தாலும்கூட, இங்கிருந்து பீடி அங்கு போவதற்குத் தடை இல்லை என்று இலங்கை அரசாங்கம் கருதுமானால், அந்த அளவுக்கு இப்பொழுது ஒப்பந்தத்தை ரத்து செய்தால்கூட பாதகம் இல்லை என்பதைக் கருதி நம்முடைய அரசாங்கம் மத்திய சர்க்காருக்கு ஆலோசனை கொடுக்குமா ?

11th February 1959]

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, these are all questions which affect other States. I do not think that we, at any rate, can do anything about this. We have made representation to the Government of India, and they have taken it with the Ceylon Government.

Mr. SPEAKER : I also would like to add that in putting supplementary questions which affect other States hon. Members must know the limitations. Hon. Members must be careful to limit questions to the handicaps and difficulties of the Government without making any reference to whatever action the foreign Governments may take. So, when hon. Members put questions, they should remember this limitation.

Sri M. JAGANNATHAN : Sir, is there not any other country in the world besides Ceylon which might consume this 45 per cent of our beedis?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, I am thankful to the hon. Member for putting this question. There seems to be an impression in the public mind here that finding markets is the duty of the Government. In fact the trade ought to find markets. They should send people outside. There are traditional markets like Malaya, Indonesia, and other countries. They should try to expand the market. On the other hand, the moment there is some fall in export, they all complain to the Government and say that there are no markets for them. In all the countries of the world, markets are developed by the trade and not by Governments.

*National Development works*

* 201 *Q.*—Sri P. G. MANICKAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

தேசிய வட்டார அபிவிருத்தி வேலைகளைத் துரிதப்படுத்துவதற்காக சென்னை ராஜ்ஜியத்திலே நியமிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு டிப்டி கமிஷனர்களின் மேற்பார்வையின் கீழ் எத்தனை தேசிய வட்டார அபிவிருத்தி பிளாக்குகள் இருக்கின்றன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : The number of Blocks under each of the Deputy Development Commissioners is detailed below :—

1. Deputy Development Commissioner, Madras—42 Blocks.
2. Deputy Development Commissioner, Tiruchirappalli—35 Blocks.
3. Deputy Development Commissioner, Madurai—57 Blocks.
4. Deputy Development Commissioner, Coimbatore—39 Blocks.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, may I know the functions of these Deputy Development Commissioners and whether they periodically visit all these places? What exactly is the work of these people?

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, the overall supervision of the work that is going on in the various blocks is done by them. I may inform the hon. the Leader of the Opposition

that I am told that the tempo of the work has considerably increased after the appointment of the Deputy Development Commissioners.

SRI P. G. MANICKAM : ஒவ்வொரு டெபுடி டெவலப்மெண்ட் கமிஷனருக்கும் சில ஜில்லாக்கள் பிரித்துக் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால், தற்போது ஜில்லாக்களுடைய நிர்வாகம் ஜில்லாக் கலெக்டர்கள் மூலமாக நடை பெற்றுக்கொண்டு வருகிறது. இனிமேல் ஜில்லாக் கலெக்டர் மூலமாக நிர்வாகம் நடைபெறுமா ? அல்லது, டெபுடி டெவலப்மெண்ட் கமிஷனர் மேற்பார்வையின் கீழ் ஜில்லாக்கள் தோறும் ஸ்பெஷல் ஆபீசர்கள் நியமிக்கப்படுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜில்லாக் கலெக்டர்களுக்கு இப்பொழுது இருக்கும் வேலையையும் வைத்துக்கொண்டு, ப்ளாக்கிலே நடக்கும் வேலைகளையும் மேற்பார்வை பார்ப்பது என்பது மிகக் கஷ்டமாக இருக்கிறது. ஆகவே, சர்க்காருக்கு உதவியாக இருக்கும் முறையிலே தான் இந்த டெபுடி டெவலப்மெண்ட் கமிஷனர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறுகளே தவிர, கலெக்டருடைய பொறுப்பு இப்பொழுதும் கலெக்டரிடம்தான் இருக்கிறது.

SRI M. JAGANNATHAN : Sir, in view of the fact that though the tempo of the work has actually increased, the real work as such and the quantity of tht work as such in most of these places have not been increased, so far as my knowledge goes, will the Government consider the desirability of reducing the number of blocks placed under each of these Deputy Development Commissioners so that they may do effective supervision all right?

THE HON. SRI C. SUBRAMANIAM : I am only afraid that the knowledge of the hon. Member is rather poor. I would request the hon. Member to contact the committee which has been appointed, consisting of the Members of this House and the Council. They have visited the various blocks. If a reference is made to that committee, he will be able to get some useful information. I may inform him that even though there is still scope for improvement, we need not be dissatisfied with the work which is going on now.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : ப்ளாக் அட்வைசரி கூட்டங்கள், ப்ளானிங் போர்டு கூட்டங்கள், மற்ற எல்லா கூட்டங்களிலும் எல்லா அதிகாரிகளும் கலந்து கொள்ளும்போது இந்து மத பரிபாலன டிபுடி கமிஷனர் அவர்களும் கலந்து கொண்டால் பல விஷயங்களை சர்ச்சை செய்வதற்கு வசதியாக இருக்கும். ஆகவே அவர்களும் கலந்து கொள்ளுவதற்கு சர்க்கார் ஏதாவது உத்தரவு இடுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் கூட்டங்களில் மத விஷயமாக சர்ச்சைகள் நடைபெறுகின்றனவா என்பதை அறிவதற்கு நான் அந்தக் கூட்டங்களில் கலந்து கொள்வதற்கு இது வரையிலும் எனக்கு எந்த விதமான வாய்ப்பும் கிடைக்கவில்லை. ஆகவே மத விஷயமாக அங்கே சர்ச்சை செய்யப்படுகிறதா என்று எனக்குத் தெரியாது.

*Seed Potatoes*

* 202 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state the steps, the Agriculture Department has taken to supply good quality "Seed Potatoes" to potato growers?

11th February 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : ஐந்து மாதங்களுக்கு முன்னதாக இதே போன்ற ஒரு கேள்விக்கு பதில் அளிக்கும்போதும் உருளைக் கிழங்குகளை அந்நிய நாடுகளிலிருந்து தருவிக்க வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன என்று இதே போன்ற பதில் தான் கொடுக்கப்பட்டுள்ளது. அதே பதில் தான் இப்பொழுதும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனால் இதற்கு இவ்வளவு காலதாமதம் ஏன் என்பதை அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்நிய நாட்டு செலாவணிதான் இதற்கு முக்கிய இடையூருக இருக்கிறது. அதை சமாளித்துவிட்டு அதன் பிறகு அந்நிய நாட்டிலிருந்து விதைகளை வரவழைக்கவேண்டிய கவனம் செலுத்தப்பட்டுவருகிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : அந்நிய நாட்டு செலாவணியினால் இதற்கு காலதாமதம் ஏற்படுகிறது என்று சொல்லுகிறபடியால் இதை வரவழைப்பதற்கு முதல் இடம் கொடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா ? அதற்கு எவ்வளவு காலமாகும் என்பதையும் சொல்ல முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு போதிய இடமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. வற்புறுத்தப்பட்டும் இருக்கிறது. எப்படியும் இதைப் பெறலாம் என்ற நம்பிக்கையுடன் இந்த அரசாங்கம் இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : இப்பொழுது அதிகப்படியாக எட்டு விதைப் பண்ணைகளை ஆரம்பிக்கப்போவதாகச் சொல்லப்படுகிறது. அப்படி எப்பொழுது ஆரம்பிக்கப்படும் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றி பூர்வாங்க பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறது. இது முடிந்ததும் அது எடுத்துக் கொள்ளப்படும்.

*Baby food*

* 203 Q.—SRI K. SATTANATHA KARAYALAR :
SRI N. K. PALANISAMI :
SRI A. A. RASHEED :
} Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) whether the Government are aware that Ovaltine, Horlicks, and other Baby Foods are not available in the market at control rates; and

(b) if so, what steps have been taken in the matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) Does not arise.

SRI A. A. RASHEED : In view of the shortage of milk foods and baby foods, have the Government recommended to the Union Government an increased import of these foods?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir. Government have not made any such approach.

---

* Printed as Appendix I on page 146 infra.

[11th February 1959

SRI K. VINAYAKAM : Are the Government aware that there are very good substitutes for these baby foods, e.g., Alvitone for Ovaltine which is very nourishing and comparatively cheaper? What steps have been taken to encourage such indigenous products?

MR. SPEAKER : The hon. Member will be well-advised not to mention the names of particular products. He can make reference in a general way and not mention anything with a view to boosting particular products.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : This question has answered the previous question of the other hon. Member.

SRI S. LAZAR : இப்படிப்பட்ட உணவுப் பொருள்களை நமது மாகாணத்தில் உற்பத்தி செய்யும் நோக்கம் ஏதாவது அரசாங்கத்திற்கு இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இங்கேயே இப்படிப்பட்ட உணவு பொருள்களை உற்பத்தி செய்ய வேண்டுமென்ற நோக்கம் அரசாங்கத்திற்கு இருக்கிறது. அதைப் பற்றி பரிசீலனையும் செய்யப்பட்டு வருகிறது.

SRI N. K. PALANISAMI : ஏற்கெனவே உள்ள விலைக்கு அதிகப் படியாக 25 சத விகிதம் அதிக லாபம் வைத்து விற்கலாம் என்று சர்க்கார் உத்தரவு போட்டும் அதன்படி இது வரையிலும் இந்தக் குழந்தைகளுடைய உணவு பொருள்கள் சாதாரணமாகக் கிடைப்பதாக இல்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி இல்லை. அரசாங்கத்தினிடம் இருக்கும் தகவலின்படி அவ்விதம் விற்க வேண்டும் என்று உத்தரவு போட்டு அப்படி விற்கிறவர்களுக்குத்தான் லைசென்சு கொடுக்கப் படும் என்று சொல்லப்பட்டது. இதைப் பற்றி கலெக்டர் அவ்வப்போது அங்கங்கே மேற்பார்வை பார்க்க வேண்டும். அவ்வப்போது இதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டும், அப்படி விற்காவிட்டால் லைசென்சு ரத்து செய்யப்பட வேண்டும் என்று ஒப்பந்தம் செய்து கொண்டதன் பேரில் அப்படியே விற்று வருகிறார்கள். அதன் பிறகு விலை குறைந்து தான் இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : குழந்தைகளின் உணவு பொருள்களில் ஒன்றாகிய கொக்கோ நீலகிரி மலையில் நல்ல விதமாக பயிராகிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதனால் அங்கே குழந்தைகளின் உணவு பொருள்களை உற்பத்தி செய்யவும் இதை அதிகமாக பயிரிடவும் அரசாங்கம் முன் வருமா ?

MR. SPEAKER : இந்தக் கேள்வி மூல கேள்விக்கு சம்பந்தப் பட்டது இல்லை. அடுத்த கேள்வி.

*Railway Line to Dhanushkodi via Aranthangi—Karaikudi.*

*204 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

அரந்தாங்கி-காரைக்குடி மார்க்கமாக தனுஷ்கோடிக்கு ரயில் போக்கு வரத்து விரைவில் ஏற்படுத்த திட்டம் ஏதேனும் இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பியுள்ளதா ?

THE HON. SRI M BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. VEDARATHNAM : முஸ்லீம் யாத்ரா ஸ்தலமும், கிறிஸ்தவ யாத்ரா ஸ்தலமுமாகிய வேளாங்கன்னியும், இன்னும் ஏராளமான ஹிந்து யாத்ரா ஸ்தலங்களும் தஞ்சை ஜில்லாப்பகுதிகளில் இருக்கின்றன என்ற காரணத்தாலும், அங்கே மாதந்தோறும் திருவிழாக்கள் நடைபெறுவ

11th February 1959]

தாலும், ரயில் நிலையங்களில் தாங்க முடியாத கூட்டம் இருக்கின்றன. அதனால் இங்கிருந்து நேர் முகமாக தனுஷ்கோடிக்கு போக இந்த மார்க்கம் ரொம்பவும் சமீபமாய் குறுக்கே இருக்கிறது. அதனால் ரொம்ப மைல்களும் குறைவாக ஆகிறது. அதனால் இந்த லைனில் காரைக்குடி வரையில் பல நேர் வண்டிகளை விடுவதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் கேள்வி நேரத்தில் கேள்வி கேட்க வேண்டுமேயொழிய அபிப்பிராயத்தை தெரிவிக்கக்கூடாது. இருந்தாலும் கனம் மந்திரி அவர்கள் பதில் சொல்வதாக இருந்தால் பதில் சொல்லலாம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் குறிப்பிட்டபடியே மெயில் லையனில் திருச்சி வரையில் நேர் மார்க்கம் இருக்கிறது. அது வரையில் போட் மெயில் போகிறது. அதை அரந்தாங்கி வரையில் நீடிக்கவேண்டுமென்றால் நடுவில் இருக்கக்கூடியவர்களாகிய திருச்சியிலுள்ளவர்கள், மாயவரம் பகுதிகளில் உள்ளவர்கள் பாதிக்கப்படுவார்கள். இந்த மார்க்கத்தில் இரண்டு வேகமாகப் போகும் ரயில்கள் இருக்கின்றன. அதனால் அதிகப்படியாக விடுவதற்கு முடியாமல் இருக்கிறது. இது தான் நிலைமை.

*Use of fire-arms by the Police*

* 205 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government intend to revise the Police Code with regard to the use of fire-arms by the Police?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. A. RASHEED : May I know whether the Police Code allows shooting to kill or to disperse unruly crowds?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am unable to answer the question.

SRI K. SATTANATHA KARAYALAR : போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதைப்பற்றி மத்திய சர்க்கார் சமீபத்தில் எல்லா சமஸ்தானங்களும் ஒன்றுபட்டு ஒரு சட்டம் நிறைவேற்ற வேண்டுமென்று ஏதாவது எழுதி உள்ளார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பற்றி எந்த விதமான தகவலும் கொடுப்பதற்கு இல்லை.

*Religious education*

* 206 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is a proposal to have religious education as an integral part of the educational system?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI S. LAZAR : இதனுடைய தேவையைப் பற்றி நாட்டிலுள்ள பெரும் தலைவர்கள் ஸர். ராதாகிருஷ்ணன், மகாத்மாகாந்தி போன்றவர்கள் வற்புறுத்தியதன் காரணத்தால் இதைப்பற்றி பரிசீலனை செய்வதற்கு ஒரு தனி குழுவை நியமிக்க அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் மத போதனை என்று சொல்லலாம். இதைப் பற்றி பேசும் போது பல பிரச்னைகள் வருகிறது. அதை விட்டு விட்டு எல்லோருக்கும்

பொதுவாக இருக்கக்கூடிய நல்ல விஷயங்களை மாணவர்களுக்கு எடுத்துச் சொல்வதற்கு மதம் அடிப்படை இல்லை. பொதுவாக இருக்கும் சில உண்மைகளை மாணவர்களுக்குத் தெரிவிக்கும்படியான யோசனையைச் செய்யலாம்.

SRI S. NAGARAJA MONIGAR : மத விஷயமான பாடங்களை பள்ளிகளில் போதிக்க சர்க்கார் ஏற்பாடு செய்ய முடியாவிட்டாலும் மதத்திற்கு எதிராக நடக்கும் பிரசாரங்கள், போதனைகளைத் தடுக்க நடவடிக்கை எடுக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : இந்தக் கேள்விக்கும் மூல கேள்விக்கும் சம்பந்தம் இல்லை. அதனால் வேறு கேள்வி போட வேண்டும்.

*Guineaworm disease*

* 207 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the places where Guineaworm disease is prevalent; and

(*b*) the steps taken to eradicate this disease?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) & (*b*) A paper* is placed on the table of the House.

SRI K. SATTANATHA KARAYALAR : இதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து கழிந்த ஆண்டு நமக்குக் கொடுக்கப்பட்டிருந்த உதவிப் பணம் முழுவதும் உபயோகப்படுத்தப்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : I am not aware of any such help.

SRI M. K. SOMASUNDARAM : இம்மாதிரியான வியாதி திருநெல்வேலி பகுதிகளில் இருக்கிறது. அந்த வியாதியைத் தடுக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : திருநெல்வேலி ஜில்லாவில் இல்லை. ஏதோ எங்கேயோ ஒரு பகுதியில் ஒன்றிரண்டு இடங்களில் இருக்கிறது. புள்ளி விவரங்கள் கொடுக்கும்படியான அளவில் அங்கே இல்லை.

SRI S. RAMALINGA PADAYACHI : இம்மாதிரியான வியாதி வருவதற்கு குடி தண்ணீர்தான் காரணமாக இருக்கிறது. குட்டை குளங்களில் தண்ணீர் குடிப்பதினால் நல்ல குடி தண்ணீர் இல்லாத காரணத்தால் இது வருகிறது. இதைப்பற்றி பரிசீலனை செய்து இதைச் தேசியப் பிரச்சினையாகக்கருதி பார்த்தால் தெரியும். ஆகவே பாதுகாக்கப்பட்ட குடி தண்ணீர் அமைக்கும் திட்டத்தைக் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நோயை தீர்த்துகட்ட வேண்டும் என்பதற்காகத்தான் ஒரு திட்டம் போட்டு சுமார் இரண்டு அல்லது மூன்று லட்சம் ரூபாய் செலவு செய்து இந்த நோய் இப்பொழுது இருக்கும் இடங்களிலிருந்து குறைக்க வேண்டும் என்பதற்காக அதைப் பற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

SRI M. K. SOMASUNDARAM : திருநெல்வேலி ஜில்லாவுடன் மற்றும் எவ்வளவோ இடங்களில் இந்த வியாதி அதிகமாக இருந்து கொண்டு இருக்கிறது. இது வராமல் தடுக்க அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்து என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

MR. SPEAKER : நீங்கள் சொல்லும் இடங்கள் இந்தக்கேள்வியில் இல்லை. கேள்வி பொதுவாகத்தான் இருக்கிறது.

* Printed as Appendix II on page 147 infra.

11th February 1959]

SRI K. R. VISWANATHAN : இந்த நோயானது தேசிய நீர் வழங்கு திட்டத்தின் (National water-supply and sanitation scheme) கீழ்கொண்டு வரப்பட்டிருக்கிறது என்பது உண்மையா ? அப்படியானால் அதன்படி நீர் வழங்க என்ன நடவடிக்கை சர்க்காரால் எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஏதாவது நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : நாஷனல் வாட்டர் சப்ளை ஸ்கீம் கீழ் இருக்கும் என்று நினைக்கிறேன். மாகாணத்தில் ஐந்து ஜில்லாக்களில் இது அமுலில் இருக்கிறது. இந்த நோய் தென்னார்காட்டில் திருச்சியைவிட அதிகமாக இருக்கிறது. நாங்கள் ஏதோ வசதிகளை ஏற்படுத்திக்கொண்டு திட்டம் போட்டு அதை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறோம். அதனால் அதை அமுல் பண்ணியே தீருவோம்.

SRI A. A. RASHEED : Sir, from the statement placed on the table of the House, it is seen that North Arcot and South Arcot districts have been much affected. May I know the reasons therefor?

THE HON. SRI M. A. MANICKAVELU : That is probably because there, people take water from step-wells and ponds. I have got information that Harijans are not mostly affected and that is because, it is said, they do not take water from ponds and other such places, but only from draw-wells.

*Hostel for Adivasi students*

* 208 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லா, தாளவாடி மலைப்பிரதேசத்தில் தலமலையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஆதிவாசிகளுடைய மாணவர்கள்—மாணவிகளுடைய ஹாஸ்டலானது எந்தக் கட்டிடத்திலிருக்கிறது?

(ஆ) சர்க்கார் மூலம் ஹாஸ்டல் கட்டிடம் கட்டப்படுவதற்கான பரிசீலனை நடத்தப்பட்டு வருகிறதா?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The residential school for Scheduled Tribes at Talamalai is housed in the District Board Chatram.

(*b*) No, Sir.

SRI P. G. MANICKAM : சார், ஜில்லா போர்டு சத்திரத்திலே இந்த ஹாஸ்டல் இருப்பதால் அங்கு படிக்கும் மாணவர்களுக்கு அநேக இடைஞ்சல்கள் உண்டாகிக் கொண்டு வருகின்றன. ஆகவே இந்த 1959-ம் வருஷத்திலாவது அங்கு ஒரு ஹாஸ்டல் கட்ட சர்க்கார் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI P. KAKKAN : அந்தச் சத்திரமானது நல்ல கண்டிஷனில் தான் இருக்கிறது. இப்பொழுதுதான் 810 ரூபாய் செலவு செய்து அந்த ஜில்லா போர்டு சத்திரம் பழுது பார்க்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது இருக்கும் நிலைமையில் தனியாக வேறு கட்டிடம் கட்ட உத்தேசம் இல்லை.

[11th February 1959

*Paper mill at Tirunelveli district*

* 209 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : } Will the
SRI N. K. PALANISAMI : }
Hon. the Minister for Industries be pleased to state with reference to question No. 120, answered on the 11th September 1958—

(*a*) whether the Government have issued licence to any other party to start a paper mill in the Tirunelveli district in the private sector; and

(*b*) if so, the place and the party to whom the licence has been given?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.
(*b*) Does not arise.

SRI K. SATTANATHA KARAYALAR : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு பேப்பர் மில்ஸ் பாபநாசம் அருகிலே ஆரம்பிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : உத்தேசம் உண்டு. லைசென்சும் கொடுக்கப்பட்டது. லைசென்சுதார் எவ்விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளாத காரணத்தினாலே அது ரத்தும் செய்யப்பட்டுவிட்டது.

SRI N. K. PALANISAMI : சர்க்கார் இவ்விஷயத்தில் வேறு யாருக்காவது லைசென்ஸை மாற்றிக் கொடுத்து அவர்களோடு சேர்ந்து நடத்த உத்தேசித்திருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : சேர்ந்து நடத்தும் உத்தேசம் இல்லை. இந்தத் தொழில் தனியார்களுக்கே ஒதுக்கப்பட்டது. தனியார் முன்வந்தால் அவர்களுக்கு எல்லாவிதமான உதவியும் அளிக்கத் தயார்.

SRI V. K. RAMASWAMY MUDALIAR : In view of the abnormal rise in price of papers, will the Government consider the desirability of putting some restriction on paper prices, Sir.

THE HON. SRI R. VENKATARAMAN : I think that is beyond this question.

SRIMATHI HEMALATHA DEVI : அரிசியாளயம் மிகவும் பிற்பட்ட பகுதி, தண்ணீர் வசதியும் காடும் இருப்பதினால் பேப்பர் மில்லை அங்கே கொண்டுவர அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : தனியார் துறையில் யாராவது நடத்த முன் வந்தால் சர்க்கார் எல்லாவிதமான உதவியும் தரும்.

SRI K. SATTANATHA KARAYALAR : இங்கு எந்த ரகப் பேப்பர் உற்பத்தி செய்ய லைசென்சு வழங்கப்பட்டிருக்கிறது. இந்த இடத்தில் இருந்து திருநெல்வேலி ஜில்லாவுக்கு மாற்றிக் கொடுக்க லைசென்சு கொடுக்கப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : லைசென்சு மாற்றிக் கொடுக்க முயற்சி செய்து அதுவும் பயன் இல்லை என்று சொல்ல விரும்புகிறேன். பாபநாசம் பேப்பர் மில்ஸ்க்கு முதலில் கொடுத்த லைசென்சை மணிமுத்தாறு பேப்பர் மில்ஸ்க்கு மாற்றவேண்டுமென்று சொல்லி, மத்திய சர்க்கார்க்கும் சிபார்சு செய்து அவர்களும் ஒத்துக்கொண்டார்கள். ஆனால் மணிமுத்தாறு பேப்பர் மில்ஸ்காரர்களும் மேல் நடவடிக்கை ஒன்றும் எடுத்துகொள்ளாத காரணத்தினால் அந்த லைசென்சு ரத்தாகிவிட்டது.

*Naduvakurichi-Vellalankulam Road*

* 210 *Q*.—SRI T. VELUCHAMI : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

சங்கரன்கோவில் ப்ளாக்கிற்காக 1958-ம் வருஷம் அக்டோபரில் போட்ட வேலைத் திட்ட ஜாபிதாவில் நடுவக்குறிச்சியிலிருந்து வெள்ளாளங்குளத்திற்கு ரோடு போடும் வேலை ஏன் சேர்க்கப்படவில்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : The formation of the road was not included in the list of works selected by the Sankarankoil Block Advisory Committee because the villagers were not prepared to part with the lands required for a part of the road and they were not also prepared to form the earthern road themselves.

*Feeder Road to Kizhvellakkal in Tenkasi taluk*

* 211 Q.—SRI T. VELUCHAMI : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) நெல்லை ஜில்லா தென்காசித் தாலூகாவின் கீழ் வெள்ளக்கால் என்ற இடையர் தவனை என்ற கிராமத்திற்கு வீரகேரளம்புதூர்-வெள்ளககால் மெயின் ரோட்டிலிருந்து ஒரு (feeder) இணைப்பு ரோடு போடுவதற்கு (Local Development Works Scheme)-ன் கீழ் உத்தேசம் இருந்ததா ?

(ஆ) இந்த வேலை இவ்வாண்டில் செய்யப்படுமா ? செய்யப்படாதென்றால் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : I. (*a*) Yes. The formation of feeder road from Idayarthavani to Vellakal-Veerakeralampudur road in Tenkasi was included in the Local Development Works Programme for 1958–59 and was sanctioned for execution on 29th October 1958.

(*b*) Yes. The work is expected to be completed before 31st March 1959 as the Local Development Works Programme will come to a close on that date.

II. Does not arise.

*Agriculture Department service*

* 212 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR and SRI S. LAZAR :—Will the Hon. the Minister for Home be pleased to state whether this Govtrnment intend to rtcommend to the Central Government to upgrade the Agriculture Department service into an All-India service and to give it the rank and scale as that of I.A.S. ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Agriculture Administration (Nalagarh) Committee, constituted by the Government of India, suggested among other things the creation of an All-India Agricultural Service on a par with the I.A.S. This suggestion, along with other suggestions of the Committee is under consideration of the Government.

I may add that Government have since expressed the view at the recent Conference of State Ministers for Agriculture that the proposal was not acceptable, because Government felt that there are more disadvantages than advantages in this proposal and Governments of other States also have expressed the same view.

[11th February 1959

**Sri S. LAZAR**: அப்படி இல்லையென்று சொன்னால் திறமைசாலிகளை இந்த இலாகாவிற்கு இழுப்பதற்கான வசதி அல்லது தனிப்பட்ட சலுகைகள் என்ன இருக்கின்றன?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: திறமைசாலிகள் அகில இந்திய சர்வீஸ் இருந்தால்தான் வருவார்கள் என்று இல்லை. திறமைசாலிகள் வேண்டுமென்று இந்த அரசாங்கமும் உணருகிறது. அந்த வகையில் என்ன என்ன வசதிகள் அளிக்கவேண்டுமோ அதை அளித்துக் கொண்டும் வருகிறது.

Sri M. JAGANNATHAN: Arising out of the reply given by the Hon. Minister, there are certain obvious disadvantages in the proposal to upgrade the services of the Agricultural Department, may I know what are those disadvantages?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: It is not exactly upgrading the service, Sir. This is converting it into an All-India Service and if it is converted into an All-India Service, the State Government will have to hang on the Central Government.

**Sri T. R. RAMAMIRTHA THONDAMAN**: விவசாய சம்பந்தமான பயிற்சிகளில், முக்கியமாக கிராம பஞ்சாயத்து போர்டு தலைவர்களுக்கு சிறிது காலமாவது பயிற்சி அளித்து அதன்மூலம் திறம்பட நடத்த அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: அதைப்பற்றி தனியாகக் கேள்விபோட்டால் பதில் சொல்லமுடியும்.

Sri K. VINAYAKAM: What are the supposed advantages which this system involves and what are the obvious objections which our State Government had to convert this into an All-India Service?

The Hon. Sri M. BHAKTAVATSALAM: I have just now mentioned the obvious disadvantages in that this Government could not be free in making selections and other things regarding the service, if it is All-India Service. The obvious advantage, as pointed out by one hon Member, is an All-India service will attract better types of technical officers.

**Sri M. KALYANASUNDARAM**: அகில இந்திய சர்வீசோடு இணைக்காமல் ராஜ்ய சர்க்காரின் கீழ் வைத்துக்கொண்டு இவர்கள் சம்பள விகிதத்தை உயர்த்தவேண்டுமென்பதாக டைரக்டெர் ஆப் அக்ரிகல்சரிடமிருந்து சர்க்காருக்கு சிபார்சு வந்தனவா? அவை பரிசீலிக்கப்பட்டதா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: இவ்வாறு சிபாரிசு ஒன்றும் வரவில்லை. ஆனால் சம்பள விகிதம் கொஞ்ச காலத்திற்கு முன்பு உயர்த்தப்பட்டது. ராஜ்ய சர்வீசிலேயே வேறு சுப்ரீம்காடர் வைக்கலாமா என்று யோசிக்கப்பட்டிருக்கிறது.

**Sri S. LAZAR**: அகில இந்திய ரீதியில் அமைக்கப்படவில்லை என்ற போதிலும் ஒரு சில இலாகாவில் மாகாண சர்க்காரிலே வேலை செய்கின்ற உத்தியோகஸ்தர்களுக்காவது மத்திய அரசாங்கம் கொடுப்பது போல தாராளமாகக் கொடுக்க முன்வருமா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: அத்தகைய பிரச்னை எழவில்லை. நான் மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தேன். ஒன்றும் நம் சம்பளவிகிதம் குறைவாய் இல்லை.

11th February 1959]

*Jaggery societies in Erode taluk*

* 213 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Presidents of the jaggery societies in Erode taluk are retained in office at the discretion of the officers concerned even though the majority of tappers of the respective societies do not wish those Presidents ; and

(*b*) if so, the reasons thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Prostitution*

* 214 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the number of women arrested for soliciting in the streets for purpose of prostitution (i) in the State and (ii) in the City of Madras in 1957 and 1958?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The number of women arrested for street solicitation in this State was 595 in 1957 and 230 for the first eleven months in 1958 out of which the number of women arrested in the Madras City area was 209 and 71 respectively.

SRI N. K. PALANISAMI : சர்க்கார் போதிய நடவடிக்கை எடுத்தும் சமாளிக்க முடியாமல் இருப்பதற்குக் காரணம் வறுமைதான். ஆகவே பொதுஜன ஸ்தாபனங்களை அணுகி இதைத் தடுப்பதற்குரிய மார்க்கத்தைத் தேடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் சர்க்கார் இவ்விஷயத்தில் எந்த நடவடிக்கையும் எடுக்கக்கூடாது என்று சொல்கிறார்களா ? பொது ஸ்தாபனங்களும் இதில் அக்கறை காட்ட வேண்டுமே தவிர நாமும் நடவடிக்கை எடுக்கத்தான் வேண்டும்.

SRI A. A. RASHEED : Sir, may I know how many of these girls were reformed after release?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not have that statistics with me just now.

SRI K. VINAYAKAM : Sir, was any reciprocal action taken by the Government against these 'platform princes' who hunt after these 'street queens'? (Laughter.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I am unable to understand what exactly the hon. Member means or wants to be done.

*Rattan industry in Sirkali*

* 215 *Q.*—SRI C. MUTHIAH : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சீர்காழி வடதொகுதியில் பிரம்புத் தொழிற்சாலை அமைக்க உத்தேசமுண்டா ?

(ஆ) அப்படியானால், எப்போது, எங்கே ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

[11th February 1959

*Special Police Establishment cases*

* 216 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether this Government have received any communication from the Centre to appoint whole-time special Judges to dispose of Special Police Establishment cases quickly; and

(*b*) if so, the details thereof?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) This does not arise.

*Birth and death rates*

* 217 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(i) the birth rate; and

(ii) the death rate in the State in 1957 and in 1958?

The Hon. Sri M. A. MANICKAVELU : (i) & (ii) The estimated birth rate for both the years is 26·7 per thousand of population. The death rates are 14·2 in 1957 and 13·0 in 1958.

9-30 a.m. Sri K. SATTANATHA KARAYALAR : பாமிலி ப்ளான் பிரசாரத்தால் இது குறைந்திருக்கிறதென்று சர்க்கார் கருதுகிறதா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : குறைந்து இருக்கிறது டெத் ரேட்டு தான். பாமிலி ப்ளான் பிரசாரத்தால் குறைந்திருக்க வேண்டுமென்றால் பர்த் ரேட் குறையவேண்டும். (சிரிப்பு).

*Fertilizer plant*

* 218 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether the President of the U.S. Export-Import Bank, has offered any financial help for setting up a fertilizer plant in the private sector in the State; and

(*b*) if so, whether any private enterprise, has come forward for setting up a fertilizer plant?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) There is no information with this Government, Sir.

(*b*) Does not arise.

Sri K. SATTANATHA KARAYALAR : எக்ஸ்போர்ட் இம்போர்ட் பாங்க் பிரிசிடெண்ட் இங்கே வந்திருந்தபோது தனியார் துறையில்.பர்டிலைசர் ஸ்தாபனம் ஏற்படுத்தப்பட்டால் யு.எஸ். சர்க்கார் கடன் உதவி அளிக்கும் என்று சொன்னதாகப் பத்திரிகையில் வந்திருந்தது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அது சம்பந்தமாக சர்க்கார் என்ன மேல் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ?

The Hon. Sri R. VENKATARAMAN : எக்ஸ்போர்ட் இம்போர்ட் பாங்கின் கடன் உதவி இந்திய சர்க்காரின் மூலமாகத்தான் அளிக்கப்படுகிறது. பிரிசிடென்டாக இருந்தாலும்கூட அவராக தனியார் துறை தொழிற்சாலைக்கும், இண்டஸ்டிரிக்கும் கடன் கொடுக்க முடியாது.

11th February 1959]

தனியார் துறைக்கு அனுமதி கொடுக்க முடியும் என்று சொல்லியிருக்கக் கூடும். அடுத்தபடியாக தனியார் துறையில் இருந்து யாராவது முன் வந்து இண்டஸ்டிரி ஆக்ட் பிரகாரம் அப்ளிகேஷன் போட்டால் அது பரிசீலனை செய்யப்படும்.

*Census of livestock*

* 219 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether census of livestock has been taken in 1956;

(*b*) if so, the number of horses, cows, oxen, goats and sheep; and

(*c*) the steps taken by the Government for their improvement?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The population of cattle according to the 1956 census is as follows :—

| | |
|---|---|
| Horses and ponies ... ... ... | 23,942 |
| Cows ... ... ... ... ... | 3,255,157 |
| Cattle (including cows, breeding bulls, young stock) ... ... ... ... ... | 9,698,251 |
| Goats ... ... ... ... ... | 3,757,582 |
| Sheep ... ... ... ... ... | 7,041,616 |

(*c*) Several schemes with the object of improving and upgrading the cattle of this State have been undertaken by the Animal Husbandry Department, such as the Malestock Distribution Scheme, Artificial Insemination Scheme, Key Village Scheme, Goshala Development Scheme, Kangayam Cattle Improvement Scheme, Cross Breeding Scheme, etc.

SRI N. K. PALANISAMI : ஆஸ்டிரேலியாவுக்கு அடுத்தபடியாக நம் தேசத்தில்தான் அதிகப்படியான கால்நடை இருக்கிறது. இப்போது அதன் எண்ணிக்கை குறைந்துகொண்டு வருவதற்குக் காரணம் அவற்றுக்குப் போதுமான தீவனம் இல்லாததுதான். ஆகவே தீவனத்தை அதிகப்படுத்த நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தீவனத்தை அதிகரிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் கால்நடையில் வெறும் எண்ணிக்கை பிரயோஜனம் இல்லை. அவற்றின் தரத்தை உயர்த்த வேண்டும்.

*Discharged prisoners*

* 220 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of prisoners discharged in 1956, 1957 and 1958;

(*b*) of the above the number re-convicted ; and

(*c*) the steps taken to rehabilitate the discharged prisoners?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 60,931 in 1956, 62,452 in 1957 and 63,057 in 1958.

(*b*) 515 in 1956, 406 in 1957 and 161 in 1958.

(*c*) (1) The Central and Local Discharged Prisoners' Aid Societies try to rehabilitate the discharged prisoners;

(2) The Probation Officers besides being predischarge and orientation work try to help the ex-convicts in securing employment.

(3) The Government have established After-care Homes for prisoners discharged from Correctional Institutions, in which industrial and vocational training is given to the inmates to help their rehabilitation.

SRI K. SATTANATHA KARAYALAR : மீண்டும் தண்டிக்கப்பட்டவர்கள் எந்த ஜில்லாக்களில் மிக அதிகமாக இருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றிய தகவல் என்னிடம் இப்போது இல்லை.

*Tractor Hiring Scheme*

* 221 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Tractor Hiring Scheme is conducted on commercial basis or on "no profit no loss" basis?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Tractor Hiring Scheme is intended to be worked on a no loss no profit basis :

*Tractors*

* 231 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of tractors that are sold by the Agriculture Department under the Hire Purchase System; and

(*b*) the number of tractors that are available district war under the Tractor Hiring Scheme?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) The answer [a] is placed on the table of the House.

* 240-A *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of tractors with the Agriculture department in 1958;

(*b*) the number amongst them that are in working condition;

(*c*) the hiring charges levied for the working of the tractors per hour;

(*d*) whether any additional tractors were purchased in 1957; and

(*e*) if so their number?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) to (*e*) The answer [b] is placed on the table of the House.

---

a Printed as Appendix III on page 148 infra.
b Printed as Appendix IV on pages 148 infra.

11th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : லாப நஷ்டம் இல்லாத தன்மையில் நடத்தப்படுவதாகச் சொல்லப்படுகிறது. கணக்குப் பார்க்கும் போது லாபத்தில் நடந்திருக்கிறதா ? நஷ்டத்தில் நடந்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : லாபத்தில் இல்லை. ஆனால் நஷ்டம்தான் ஏற்படுகிறது.

SRI A. A. RASHEED : Is it a fact that a number of tractors are under repair and become unusable every month? If so, will the Government consider the desirability of purchasing new tractors to replace the unserviceable ones?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have indicated in my answer that out of the 142 tractors or so, only 75 are in working condition. The Government have no proposal to renew them by purchasing new tractors.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : சேலம் ஜில்லாவில் இருக்கக் கூடிய டிராக்டர்களுக்கு சில சாமான்கள் இல்லையென்ற காரணத்தினால் 6 மாதம், 8 மாதமாக அவைகளை உபயோகப்படுத்த முடியாமல் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இதற்கான உத்தியோகஸ்தர்கள் சம்பளம் என்ன ? போக்குவரத்துச் செலவென்ன ? இவ்வளவு வீண் விரயம் ஆவதால் உடனடியாக அவற்றுக்குப் போதுமான சாமான்களைப் போட்டு உபயோகத்திற்கு அனுப்புவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்பேயர் பார்ட்ஸ் கிடைப்பது கஷ்டமாகத்தான் இருக்கிறது. அடிக்கடி பழுது பார்க்கவேண்டியதாகவும் இருக்கிறது. ஆகவே இவைகளை அரசாங்கமே வைத்துக் கொள்ளாது கூட்டுறவு சங்கங்களின் மூலமாகக் கொடுப்பது பற்றி பரிசீலனை செய்யப்படுகிறது.

SRI N. MARUDACHALAM : டிராக்டர்களை விவசாயிகளுக்குக் கொடுப்பதற்கு முன் பணம் கட்டவேண்டும் என்கிறார்கள். முன் பணம் கட்டாமல் கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வாடகைக்கு கொடுப்பதனால் முன் பணம் கட்டவேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது.

SRI S. RAMAKRISHNA THEVAR : புயலால் பாதிக்கப்பட்ட ராமநாதபுரம், திருவாடனைத் தாலூகாவில் உள்ளவர்கள் டிராக்டர் வேண்டுமென்று கேட்டு பதினைன்கு மாதங்கள் ஆகியும் இன்னும் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. இதுபற்றி அந்த இரண்டு தாலூகாக்களில் இருந்து புகார் வந்திருக்கிறதா ? அதற்கு சர்க்கார் உடனடியாக அவர்களுக்கு டிராக்டர் கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கைவசம் இருக்கிற டிராக்டர்களை அவசியமாக அவசரமாக வேண்டிய இடங்களுக்கு கொடுக்க வேண்டுமென்பதுதான் ஏற்பாடு.

SRI V. SUBBIAH : 1958–59-ம் வருஷத்தில் டிராக்டர் வேண்டுமென்று அட்வான்ஸ் பணம் கட்டியிருந்தும்கூட காலாகாலத்தில் கொடுக்க முடியாமல் இருப்பதனால் புதிய டிராக்டர்களை லோன் ஆகவோ, வேறு எந்த முறையிலாவது வழங்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறும் செய்யப் பட்டு வருகிறது.

SRI K. B. S. MANI : டிராக்டர்களின் உதவி நம் நாட்டுக்கு இப்போது அதிகம் தேவையாக இருப்பதனால் பட்டாளங்களில் உள்ள டிராக்டர்களை தருவித்து உபயோகித்துக்கொள்ள அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

[11th February 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவசர நிமித்தமாக, விபத்து நிமித்தமாகத்தான் கேட்கலாமே தவிர சாதாரணமாகக் கேட்பது சரியல்ல.

SRI K. SATTANATHA KARAYALAR : டிராக்டர் Hire purchase scheme அமுலில் இருக்கிறதா ? அதற்கு என்ன நிபந்தனை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவு பணம் கட்டப்படுகிறதோ அதற்கு ஏற்ப அந்த ஸ்கீமும் இருக்கிறது. அதற்கான நிபந்தனை தெரியவேண்டுமென்றால் தனிக் கேள்வி கேட்டால் சொல்லப் படும்.

*Public meetings*

* 222 *Q.*—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the D.M.K. Secretary, Kumbakonam, applied for permission to conduct a public meeting on 29th June 1958 at the maidan opposite to Chakrapani Sannadhi street; and

(*b*) the reasons for not granting permission to hold a public meeting there?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) "No", Sir.

(*b*) Does not arise.

SRI M. SELVARAJ : மற்ற கட்சியார்களுக்கும் கூட்டம் நடத்த அனுமதிக்கப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கூட்டம் நடத்த இதில் லைசென்சு கேட்கவில்லை. கூட்டத்தைக் கூட்ட ஒலிபெருக்கிக் கேட்கப்பட்டது. அதுவும் லாரியில் ஒலிபெருக்கி வைத்துப் பிரசாரம் செய்யவும் கேட்கப் பட்டது. இது நகரம். அதனால் அனுமதி மறுக்கப்பட்டது.

SRI S. M. ANNAMALAI : மற்ற கட்சிக்காரர்களுக்கு மாத்திரம் கூட்டங்கள் நடத்துவதற்கு அதுவும் ஒலிபெருக்கி வைத்து நடத்துவதற்கு அனுமதி கொடுக்கப்பட்டதா ? தி.மு.க.-வினருக்கு மட்டும் அனுமதிக்காதது காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒலிபெருக்கி வைத்து கூட்டம் நடத்துவதற்கு அனுமதி அளித்திருக்கிறார்கள். லாரிகளில் ஒலி பெருக்கிகளை வைத்து தெருக்களில் கூட்டம் நடத்துவது பற்றி அறிவிப்பது போன்றவைகளுக்குக் கொடுத்தார்களா என்னும் தகவல் என்னிடத்தில் இல்லை.

*Fire accident in Tindivanam Town*

9-40 a.m. * 223 *Q.*—SRI M. SELVARAJ (on behalf of SRI A. Govindasamy) : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப் பாரா—

(அ) 1958-ம் வருஷம் ஆகஸ்ட்டு மாதத்தில் தென்னாற்காடு மாவட்டம் திண்டிவனம் டவுனில் மொத்தம் எத்தனை தீ விபத்துகள் ஏற்பட்டன ?

(ஆ) அவை சம்பந்தமாய் அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Only one on 6—8—1958.

(*b*) The Mobile Tank Unit temporarily stationed at the Municipal Office, Tindivanam, from 31—7—1958 to 29—8—1958 attended to this fire and extinguished it in an hour.

11th February 1959]

SRI M. JAGANNATHAN : May I know why the Government are extremely unwilling or reluctant to open a fire station at Tindivanam in order to cater to the needs of the municipal town in view of the fact that that particular place is subjected to frequent outbreaks of fire?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is only a question of finance and priority.

*Women political prisoners*

* 224 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state the number of women political prisoners?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There are no women political prisoners in the Jails of this State.

*Begger Home Avadi*

* 225 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. Kothandaraman) : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஆவடியிலுள்ள பிச்சைக்கார விடுதியில் எத்தனை பேர் உள்ளனர்?

(ஆ) அவர்களில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் எத்தனை பேர்?

(இ) அவர்களுக்கு எதாவது தொழில்கள் கற்றுக்கொடுக்கப்படுகின்றதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The total number of inmates in the Government Care Camp at Melpakkam (Avadi) was 508 on 22—12—1958.

(*b*) Males—401 (including 3 children).
Females—107 (including 3 children).

(*c*) The following handicrafts are taught to the inmates :—

1. Weaving.
2. Tag Making.
3. Tailoring.
4. Carpentry.
5. Book-Binding.
6. Pottery.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the beggars still pester the people in the city and what steps have been taken by the Government to remove them to the beggar home?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do admit that all beggars in the city have not been confined to the begger home at Melpakkam.

[11th February 1959

*Manufacture of potable liquor*

* 226 *Q.*—SRI K. SATTANATHAKARAYALAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether alcohol is being manufactured in the State;

(*b*) if so, where;

(*c*) whether the proposal to permit the manufacture of potable liquor was considered by the Government; and

(*d*) if so, with what result?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) The answer is in the negative;

(*b*) Does not arise;

(*c*) Yes;

(*d*) The proposal was not approved.

*Police dogs*

* 227 *Q.*—SRI M. JAGANNATHAN: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether a new kennel has been built to accommodate more police dogs at Madras; and

(*b*) if so, the total expenditure incurred for that purpose?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) Total expenditure incurred on building the new kennel is Rs. 27,000.

SRI M. JAGANNATHAN: May I know, Sir, how many dogs are occommodated in the new kennel?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Now there are seven police dogs which are being trained. In addition two dogs belonging to the Military police, one belonging to the railway protection force and two belonging to the customs department are also under training in this kennel.

SRI V. VEDAYYAN: போலீஸ் நாய்கள் என்ற பெயர் போலீஸ் காரர்களையே, போலீஸ் வர்க்கத்தினரையே, மதிப்புக் குறைவாகப் பேசுவது போன்று தொனிப்பதால் அந்த நாய்களை, துப்பறியும் நாய்கள் என்று அழைப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பெயரை மாற்ற வேண்டிய அவசியம் இல்லை. எல்லாம் அவர் அவர் மனப்பான்மையைப் பொறுத்தது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: திருடுகள், கொலைகள் மற்ற குற்றங்கள் எல்லாம் கண்டுபிடிப்பதற்கு எல்லா இடங்களுக்கும் சென்னையிலிருந்து வரவழைக்கவேண்டியிருக்கிறது. அப்படியில்லாமல் இரண்டு ஜில்லாக்களுக்கு அல்லது மூன்று ஜில்லாக்களுக்கு ஒரு இடத்தில் வைத்துக்கொள்வதற்கு அரசாங்கம் முன்வருமா ?

11th February 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொரு இடத்திலும் வைத்துக்கொள்வதினால் பலவித அசௌகரியங்கள் இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் பயிற்சி அளிக்க வேண்டியிருக்கின்றன. இப்பொழுது அவைகள் தேவைப்படுகிற இடங்களுக்கு சீக்கிரமாக ஏரோப்பிளேனில் கொண்டு செல்லப்படுகின்றன.

### *Sandalwood Products*

* 228 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்ஜியத்திலே சந்தன மரத்திலிருந்து எண்ணை உற்பத்தி செய்வதோடுகூட இந்த எண்ணையிலிருந்து இதர பொருள்களையும் உற்பத்தி செய்வதற்காக தொழிற்சாலை ஒன்றை அரசாங்கத்தின் மூலமாக நிறுவுவதுபற்றி பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா ?

(ஆ) அவ்வாறு பரிசீலனை நடத்தப்படுபவரின் விவரங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—(*a*) & (*b*) The proposal for the extraction of sandalwood oil on a State monopoly basis was examined by the Government and was deferred for the present. No other proposal for manufacture of products of sandal wood oil was examined by the Government so far.

SRI P. G. MANICKAM : ஒரு சந்தன எண்ணைத் தொழிற்சாலை மூலம் பல லட்சக்கணக்கான பேர்களுக்கு வேலை கொடுக்கலாம். ஆகவே இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்து ஏற்படுத்துவதற்கு பரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சந்தன எண்ணையை எல்லா மார்க்கட்டிலும் விற்கிறார்கள். இப்பொழுது கிடைக்கும் வருமானத்தைவிட ஆலைகள் வைத்தால் அதிகம் கிடைக்குமா என்பது பரிசீலனை செய்யவேண்டிய விஷயம்.

### *National Extension Scheme*

* 229 *Q.*—SRI M. SELVARAJ (on behalf of Sri A. Govindasamy) கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) விழுப்புரம் தேசிய விஸ்தரிப்பு திட்டத்தில் வளவனூர் பிர்க்காவில் தொடர்ச்சியாகயுள்ள மேலும் சில கிராமங்களைச் சேர்க்க வேண்டுமென்று கோரிக்கை சர்க்காருக்கு வந்ததா?

(ஆ) அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) A representation was received by the Collector of South Arcot. It has been considered that it is not advisable to add any more villages to the Villupuram Block as it will impair the efficient working of the Block.

SRI M. SELVARAJ : அரிசிபாளையம் தாண்டி, சேந்தமங்கலம் கிராமங்களை ஒன்றாக இணைத்து அந்த பிளாக்கில் சேர்த்துக்கொள்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொரு பிளாக்கிலும் எவ்வளவு மக்கள் எண்ணிக்கை இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதைவிட அதிகமாக இருக்குமானால் பிளாக்குகளை சரிவர நடத்துவது கஷ்டமாக இருக்கும்.

[11th February 1959

* 230 *Q.*—Sri M. JAGANNATHAN : Will the Hon. the Chief Minister be pleased to state the number of villages in the Merkanam National Extension Service Block ,South Arcot District) which have been provided with radio sets by the State Broadcasting Department?

The Hon. Sri C. SUBRAMANIAM : Four.

Sri M. JAGANNATHAN : On what basis are these radio sets given to the villages in the National Extension Service Blocks. May I know whether the Government would come forward to instal more number of sets in the Merkanam Notional Extension Service Blocks in view of the fact that most of the villagers are ignorant and they are thirsting to acquire some knowledge of world affairs?

The Hon. Sri C. SUBRAMANIAM : Sir, it is the policy of the Government to instal as many radio sets as possible in as many villages as possible. There are some difficulties with reference to availability of sets and the procedure adopted in the purchase of these sets. Now Government have issued orders that the sets could be purchased from private dealers and they could also be approached for maintenance and servicing of these sets. I hope the situation would improve.

*Tamil Typewriting Examination*

* 232 *Q.*—Sri K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether candidates appearing for the Lower Grade Examination in Tamil Typewriting for April 1959 are to be examined in the new Tamil Standardised Key Board Machines; and

(*b*) if not, whether they are allowed to use the new or the existing approved machine due to the non-availability of the new Standardised Key Board Machines?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) & (*b*) The Government Typewriting Examinations in Tamil to be conducted during the year 1959 will be held with the old machines.

Mr. SPEAKER : Next question. Question 233.

Sri M. KALYANASUNDARAM : Are no supplementaries to be allowed on this question?

Mr. SPEAKER : Since nobody got up, I passed on to the next question. It is not my fault. Hon. Members who want to put supplementaries, should stand up in time and draw my attention. I will now allow the hon. Member to put the supplementary on question 232.

Sri M. KALYANASUNDARAM : Sir, may I know the reasons and on whose advice the change was introduced?

11th February 1959]

THE HON. SRI C. SUBRAMANIAM : An expert Committee was appointed and they considered the various suggestions made in this regard. An experiment was also conducted with the various suggestions made and it was found that the key board now adopted is the most useful. I may also inform the hon. Member that training of Tamil Typists on this new key board is going on in the old Legislative Assembly buildings. If only the hon. Member cares to go there and see the thing for himself he will be convinced that the present key board evolved by the expert Committee is the best.

*Drinking water scheme for Sankarankoil Panchayat*

* 233 *Q.*—SRI P. URKAVALAN : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சங்கரன்கோவில் பஞ்சாயத்துக்கு குடி தண்ணீர் திட்டம் பற்றி சர்க்காரில் ஏதேனும் உத்தேசம் உண்டா ?

(ஆ) அப்படியானால் மேற்படி பஞ்சாயத்துக்கு உதவித் தொகை எவ்வளவு கொடுக்கப்பட்டது ?

(இ) அத்திட்டம் எப்போது நடைபெறும் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) No grant has been paid to the panchayat.

(c) The scheme is not in the Five Year Plan. It is too soon to say when the scheme will be taken up.

SRI P. URKAVALAN: சென்ற மூன்று நான்கு வருஷங்களாக சங்கரன்கோவில் பஞ்சாயத்தில் குடிதண்ணீர் வசதி இல்லாமல் மக்கள் மிகவும் கஷ்டப்பட்டிருக்கிறார்கள். இந்தத் திட்டத்தை உடனடியாக அமுல் நடத்துவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்தத் திட்டத்தை நடத்துவதற்கு பஞ்சாயத்திலே பணம் இல்லை. கவர்ன்மெண்டு பணம் கொடுக்கவேண்டுமென்றால் மத்திய சர்க்காரிடமிருந்துதான் பணம் வரவேண்டும். மத்திய சர்க்காரிடமிருந்து பணம் வந்ததும் கொடுக்கப்படும்.

*Industrial Housing Scheme*

* 234 *Q.*—SRIMATHI A. S. PONNAMMAL (on behalf of Srimathi T. N. Anandanayaki) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) how many housing schemes for industrial labourers have been started by the Government in the years 1956–57 and 1957–58; and

(*b*) how many have been completed?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No new scheme was sanctioned in 1956–57. Five schemes were started in 1957–58.

(*b*) During 1956–57, the Sembium and Erukancheri Housing scheme started in 1955 was completed. During 1957–58 five schemes, namely, one at Vellanur, there at Sivakasi and one at Guindy were in various stages of construction, but were not completed.

[11th February 1959

* 235 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Industries be pleased to state the number of houses built under the Subsidised Industrial Housing Schemes in 1957–58?

THE HON. SRI R. VENKATARAMAN : Eleven Schemes for the construction of 1,158 houses were sanctioned by Government in 1957–58, out of which six schemes for construction of 692 houses were under execution, but no houses were completed during the year.

9-50 a.m. SRI K. SATTANATHA KARAYALAR : 1957–58–ல் கட்டயிருக்கும் வீடுகள் கட்டி முடிக்கப்படுமா காலாகாலத்தில் ? இந்த வீடுகளுக்கு டிஸைன் அகிலயிந்திய ரீதியில் கொடுக்கப்பட்டதா ? அல்லது ஆங்காங்கு தனித்தனியாக அங்குள்ள இன்ஜினியர்கள் மூலம் டிஸைன் அமைக்கப் பட்டதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : 1957–58–ல் ஆரம்பித்த கட்டிடங்கள் எல்லாம் பூர்த்தியாகிக் கொண்டிருக்கிறது. இன்னும் சில நாட்களில் கிண்டியில் 80 வீடுகள் திறந்து வைக்கப்படும். சிவகாசியில் கட்டிடங்கள் எல்லாம் இன்னும் ஒரு மாதத்தில் முடிவு அடைந்து விடும். டிஸைன்கள் எல்லாம் மத்திய அரசாங்கத்தால் அப்ரூவ் செய்யப்பட்டவை.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN: இந்த தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் திட்டத்தில் விவசாயத் தொழிலாளர்களும் சேர்க்கப் பட்டிருக்கிறார்களா? இல்லையென்றால், அவர்களுக்கும் இந்த வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தை விஸ்தரிக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : இது " ஸப்ஸிடைஸ் " இண்டஸ்ட்ரியல் ஹௌஸிங் ஸ்கீம் இதில் விவசாயத் தொழிலாளர்கள் சேர்க்கப்பட வில்லை. ஆனால் " ரூரல் ஹௌசிங் ஸ்கீம் " என்று ஒன்று இருக்கிறது. அதில் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொள்ள முடியும். அந்த ஸ்கீம் பிரகாரம் அதற்கு மனு போட்டால் வீடு கட்டுவதற்கு ஏற்பாடு செய்யமுடியும்.

SRI M. KALYANASUNDARAM : இந்த வீடுகளின் அமைப்புகள் தென்னாட்டு பழக்க வழக்கங்களை ஒத்ததவையாக இல்லையென்ற புகார்கள் சர்க்காருக்கு வந்ததா? இனியாவது கட்டப்படுவதை தென்னாட்டுப் பழக்க வழக்கங்களுக்கு ஏற்றதாக அமைக்க நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது கட்டப்படயிருக்கிற வீடுகளை தென்னாட்டு அமைப்புக்கு ஒத்தவாறு மாற்றியமைத்து கட்டிக் கொண்டிருக்கிறோம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கிராமாந்திர வீடு கட்டும் திட்டத்தின் கீழ் கட்டிக் கொள்ளலாம் என்று அமைச்சர் அவர்கள் சொல்கிறார்கள். அப்படி கிராமத்திலுள்ள விவசாயிகளும், நெசவாளத் தொழிலாளர்களும் கேட்கக் கூடிய காலத்தில் பணம் இல்லையென்று சொல்வதினால் கிராமாந்திரங்களில் வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்திற்கு அதிக பணம் ஒதுக்கி வசதி செய்து கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா?

THE HON. SRI R. VENKATARAMAN: ரூரல் ஹௌசிங் ஸ்கீமைப்பற்றி கேள்வி போட்டால் சொல்கிறேன்.

SRI V. K. KRISHNAMURTHY: தலைவர் அவர்களே, வேலூரில் கட்டப்பட்டிருக்கிற சைக்கில் பாக்டரியிலும், விண்ணமங்கலத்திலுள்ள உல் பாக்டரியிலும் உள்ள தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் ஏதாவது உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது ஒன்றுமில்லை.

11th February 1959]

SRI N. MARUDACHALAM : கோவை மில் தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் எதாவது உண்டா? அப்படியானுல் எத்தனை வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன?

THE HON. SRI R. VENKATARAMAN : கோவையில் கோவாப்பரேட்டிவ் இன்டஸ்ட்ரியல் ஹௌஸிங் ஸ்கீம் பிரகாரம் 144 வீடுகள் கட்ட திட்டம் போட்டு, அதற்கு அஸ்திவாரக் கல் போட்டு அது அப்படியே இருந்து கொண்டிருக்கிறது. இதற்கு தொழிலாளர்களுக்குள் முன் பணம், டெப்பாஸிட் பணம் கொடுத்து அந்தக் கட்டிடங்களை கட்ட முன்வரவில்லை என்று புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆகவே கனம் அங்கத்தினர் அவர்கள் இதில் சற்று ஊக்கம் எடுத்துக்கொண்டால் 144 வீடுகளை சீக்கிரம் கட்டி முடிக்கலாம்.

SRI T. M. NALLASWAMI : இந்தத் திட்டத்தின் கீழ் "புகளூர்" சர்க்கரை ஆலையில் வேலை செய்யும் 600 தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் அங்கீகரிக்கப்பட்டும் அத்திட்டத்திற்காக அந்த ஆலையைச் சேர்ந்தவர்கள் நிலம் ஒதுக்கியும் அந்த வேலை ஆரம்பிக்க முடியாமல் இருந்து வருகிறது. அது எப்பொழுது ஆரம்பிக்கப்படும்.?

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் அனுமதிக்கப்பட்ட 55 லட்சம் ரூபாய்க்கும் ஸ்கீம்கள் எல்லாம் போட்டு முடிந்துவிட்டது. இனி பணமில்லை. மத்திய அரசாங்கத்தினிடம் இன்னும் அதிகம் கேட்டிருக்கிறோம். வந்தால் பிறகு யோசனை செய்யலாம்.

SRI K. SATTANATHA KARAYALAR : நெசவுத் தொழிலாளர்களுக்கு கூட்டுறவு முறையில் கட்டிக் கொடுத்திருக்கும் வீடுகள் இதைப் பார்க்கிலும் வசதியாகவும் சிக்கனமாகவும் கட்டப்பட்டிருக்கிறதை சர்க்கார் பரிசீலனை செய்ததா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆமாம் அவர்களுக்கு 1/3 சப் ஸிடி கிடைக்கிறது. இதில் சப் ஸிடி 25 சதவிகிதம்தான்.

*Guest House at Cape Comorin*

* 236 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether it is a fact that the Guest House at Cape Comorin is let out for the use of Ministers and V.I.Ps only; and

(b) whether there is any proposal to allow M.L.As. to occupy Guest House at Cape Comorin whenever it is not occupied by V.I.Ps and Ministers?

THE HON. SRI P. KAKKAN : (a) No, Sir.

(b) The M.L.As. can occupy it whenever it is not occupied by V.I.Ps., Ministers, etc.

SRI T. S. RAMASWAMY PILLAI : எஸ்ட்டிமேட் கமிட்டி, பப்ளிக் அக்கௌண்ட் கமிட்டி போன்ற கமிட்டிகளில் எம். எல். எக்கள் இங்கிருந்து போனபோது ரெஸிடன்ஸ் கேட்கப்பட்டும் அவர்களுக்கு "அனக்ஸ்"தான் கொடுத்திருந்தது அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்ததா ? இதுபற்றி புகார் ஏதாவது வந்ததா?

THE HON. SRI P. KAKKAN : அப்படி தகவல் எனக்கு வரவில்லை.

*Railway line to the south via Aranthangi-Karaikudi*

* 237 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னையிலிருந்து மீட்டர்கேஜ் மெயின் லைனில் அறந்தாங்கி-காரைக்குடி வழியாகத் தெற்கே நேரே வண்டி போக்குவரத்தை நடத்தும்படி மத்திய ரயில் இலாகாவிற்கு நம் மாநில அரசாங்கம் சிபாரிசு ஏதேனும் செய்துள்ளதா?

[11th February 1959

(ஆ) மெயின் லைனில் இண்டோ–ஸிலோன் எக்ஸ்பிரஸைத் தவிர வேறு எக்ஸ்பிரஸ் வண்டி இல்லாததால் வண்டியில் நெரிசலைத் தவிர்க்க இன்னொரு எக்ஸ்பிரஸ்வண்டி விட அரசாங்கம் மத்திய ரயில் இலாகாவை வற்புறுத்த உத்தேசமுண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) No, Sir.

SRI A. VEDARATHNAM : இந்த வண்டிகளில் உள்ள நெரிசலைக் குறைப்பதற்கு அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது? நாகூர், காரைக்குடிக்கு போகும் வண்டியில் ஸீட்ஸ் 10 நாட்களுக்கு முன்னதாகவே ரிசர்வ் செய்து விடுகிறுர்கள். ஆகவே, அதற்கு என்ன முயற்சி எடுத்துக்கொள்ளப்படும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸோனல் ரெயில்வே சபை என்று ஒன்றிருக்கிறது. அதில் இந்த மன்றத்தின் பிரதிநிதிகள் கூட இருக்கிறுர்கள். அவர்கள் தான் இதைப்பற்றி கவனிக்கவேண்டும்.

### *Water Supply Scheme*

* 238 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have sanctioned any scheme for protected water-supply to the guinea-worm areas in the Tiruchirappalli district under the National Water Supply and Sanitation scheme ;

(*b*) the details thereof;

(*c*) when it will be completed and the area declared free from guinea-worm and

(*d*) whether sanitary arrangements also will be looked into in such areas?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) to (*d*) No special scheme for the provision of water supply or drainage has been formulated for the guinea-worm infected areas; but priority is given for provision for water-supply to the effected villages under the various programmes for the provision of water supply.

SRI S. LAZAR : தேசிய நீர் வழங்கும் திட்டம் அங்கு அமுலுக்கு கொண்டு வந்து நடத்தப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த ஜில்லாவில் அமுலில் இருக்கிறது. The scheme costs Rs. 2,73,000 recurring and Rs. 95,000 non-recurring. The incidence of guinea worm disease at the end of the two-year period will be brought down to a hypo-endemic level. Depending upon the actual results, a maintenance programme will have to be drawn up thereafter for the areas with a view to the ultimate eradication of the disease. Details of the scheme drawn up by the Director of Public Health have been communicated to the Government of India, and they have been requested to meet half the cost of the programme. Their reply in the matter is awaited.

11th February 1959]

*Cement*

* 239 Q.—Sri M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the total capacity of cement factories already working in the State; and

(*b*) the quantity allotted for the State?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) Five lakhs two thousand and nine hundred tons, Sir.

(*b*) On the basis of scheme approved so far, the total capacity allocated for this State is about eleven lakhs and ten thousand tons per annum.

*Manufacture of Sulphuric Acid.*

* 240 Q.—Sri M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to set up a factory for producing sulphuric acid from the gypsum available in Tiruchirappalli;

(*b*) whether it is to be under public sector or private sector; and

(*c*) when the proposal is expected to materialise?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) There is no proposal to set up such a factory in the public sector.

(*b*) We would welcome the factory being set up by any interested industrial entrepreneur.

(*c*) Does not arise.

Mr. SPEAKER : Questions are over.

[*Note*.—**An asterisk * at the Commencement of a speech indicates revision by the Member.**]

II.—PRIVILEGE MOTION RE ARTICLE IN THE 'KUMUDAM'.

Mr. SPEAKER : Yesterday, I received notice of a Privilege Motion from Sri M. Kalyanasundaram. The hon. Member will say a few words on the privilege motion. Let him be brief.

Sri M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, தமிழில் "குமுதம்" என்ற பத்திரிகை பொறுப்புள்ளவர்களால் நடத்தப்பட்டு வருகிறது. து திருஷ்டவசமாக அந்தப் பத்திரிகையில் நம்முடைய சட்டசபையின் கௌரவத்தைப் பாதிக்கக்கூடிய ஒரு விஷயம் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. சமீபத்தில் அவர்கள் சட்டசபை அங்கத்தினர்களைப் பற்றி எழுதும் கட்டுரைகளை பிரசுரித்து வருகிறார்கள். அதில் முதல் கட்டுரை நேற்று வெளியிட்ட குமுதத்தில் வந்திருக்கிறது. எந்த அங்கத்தினரைப் பற்றி எழுதியிருக்கிறது என்பதைப்பற்றி அங்கத்தினர்கள் அறிய விரும்பினால் அதைப் பார்த்து படித்துக்கொள்ளட்டும். அது எனக்கு முக்கியமான விஷயமல்ல. இந்த சபையில் இருக்கக்கூடிய ஒரு அங்கத்தினரைப் பற்றி, அவர் சட்டசபையில் அங்கத்தினராக இயற்றும் பணியைப் பற்றி எழுதக் கூடிய தோரணையில், இந்த சபையின் கௌரவத்தைப் பாதிக்கக்கூடிய ஒரு பாகம் அதில் அடங்கியிருக்கிறது. அது என்னவென்றால் " தூங்குமடமாக இருந்த சட்டசபை துள்ளியெழுந்தது இவரால் "

[Sri M. Kalyanasundaram] [11th February 1959

என்றிருக்கிறது அந்த பாகத்தில். அது உண்மையோ பொய்யோ என்பதைப் பற்றி கவலேயில்லே. ஆனல் இத்தகையதொரு ஸ்தாபனத்தை தூங்குமடம் என்று வர்ணிக்கலாமா? பொது கண்யத்தைப் பொறுத்த
10-00 a.m. மட்டில் எந்த ஒரு சபையையும் பற்றி ஒரு பொறுப்புள்ள பத்திரிகை அப்படி எழுதுவது நேர்மையா? நியாயமா? நியாயம் ஒரு பக்கத்தில் இருக்கட்டும். சட்டம் ஒரு பக்கத்தில் இருக்கட்டும். சட்டத்தின் அடிப்படையில் இந்த சபையின் உரிமையைப் பற்றி நான் பேசவில்லே, கண்யத்தின் அடிப்படையிலேதான் நான் பேசுகிறேன். இந்தச் சபையைப்பற்றி தூங்குமடம் என்று குறிப்பிடலாமா என்பதுதான் என்னுடைய கேள்வி. இது சாதாரண கௌரவத்திற்குக்கூட பொருந்தாது. இந்தச் சபையினுடைய கௌரவத்தின் அடிப்படையில், பிரத்தியேக உரிமையின் அடிப்படையில் பார்க்கும்பொழுது இந்தச் சபையை தூங்குமடம் என்று குறிப்பிடுவது இந்தச் சபையைப்பற்றிய மன்னிக்க முடியாத அவதூறு என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். இதை ஆங்கிலத்தில் சொல்லவேண்டுமானல் . . .

**Mr. SPEAKER :** வேண்டாம்.

**Sri. M. KALYANASUNDARAM :** இதனுடைய விஷயத்தை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நான் கருதுகிறேன். இதைப் பிரசுரித்தவர்கள் தெரிந்து பிரசுரித்தார்களோ, தெரியாமல் பிரசுரித்தார்களோ. எப்படி இருந்தாலும் இம்மாதிரி பிரசுரித்ததானது மன்னிக்க முடியாத, அனுமதிக்கமுடியாத குற்றமாகும். அதை இந்தச் சபையின் கவனத்திற்கும் சபாநாயகருடைய கவனத்திற்கும் கொண்டுவரவேண்டுமென்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். ஆகையினுல்தான் இந்த உரிமைப் பிரேரணையை எழுதிக்கொடுத்தேன். இந்தப் பிரேரணையை தாங்கள் படிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** I have received notice of a Privilege Motion from Sri M. Kalyanasundaram. As he has just stated he takes objection to the words published in the 'Kumudam' ("தூங்குமடமாக இருந்த சட்ட சபை துள்ளியெழுந்தது இவரால்)." There is no doubt that this article which appeared in the Tamil journal 'Kumudam' dated the 10th February 1959 amounts to contempt of the House and is a matter which should be referred to the Committee of Privileges. The matter was raised at the earliest possible moment, i.e., yesterday. As I had no time to look into it, I postponed it to-day. I have examined the article and found that it is a matter fit to be sent to the Committee of Privileges. But after Mr. Kalyanasundaram saw me in connection with this matter, the proprietors of the 'Kumudam' saw me and gave me a letter which I shall read to this House. It runs as follows :—

'Respected Sir, we understand that in regard to an article published in the issue of Kumudam, dated 10th February 1959 under the caption "Ivarthan Engal M.L.A.", some hon. Members of our Assembly have raised a question of privilege on the ground that a passage occurring in the said article amounts to contempt of the Assembly.

Coming to know of it, we hasten to offer our clarification and explanation.

The said article was one of the prize-winning essays in an open competition held by us whereunder members of the public were invited to write a brief estimate of their respective M.L.As. As such the views expressed in the article are exclusively the author's. This is by way of clarification.

11th February 1959] [Mr. Speaker]

But we are conscious that this will in no way absolve us of our responsibility in publishing the article, overlooking—though inadvertently—any passage likely to be regarded by the Honourable Members as amounting to contempt of the Assembly, for we, as citizens are as zealous as any one in upholding the dignity of our Assembly and as the publishers of a responsible journal, it is far from our intention to publish anything which may even remotely affect the prestige and dignity of our Assembly.

We shall be extremely thankful if you will kindly accept and convey to the Honourable Members of the Assembly our deep regrets for having allowed the publication of the unfortunate passage.

I express my regrets as Editor and Proprietor of the journal and also on behalf of the Printer.

We are trying to contact the author of the article and would obtain his letter of regret as early as possible.'

'Kumudam' is a well known journal and this is the first time that such an offence has been committed. In view of this extenuating circumstnce, even though the offence has been committed, I feel that the explanation may be admitted and the matter passed over.

SRI M. KALYANASUNDARAM: Sir, we are not informed of the name of the author of the article and we are not also sure whether the author of the article would tender his apology?

MR. SPEAKER: I have nothing more to add. The Proprietors of 'Kumudam' have given the post-cript that they will try to obtain the regret of the author. If the author refuses to express regret, then we have got the right to take action subsequently. To-day, I suggest that no further action be taken and that the matter be dropped.

SRI M. KALYANASUNDARAM: Sir, I agree to your suggestion.

## III.—GOVERNMENT BILL.

### THE MADRAS GENERAL SALES TAX BILL, 1958 (L.A. BILL NO. 6 OF 1958)—*cont.*

MR. SPEAKER: We shall now continue the discussion on the Madras General Sales Tax Bill.

நேற்று பேசுவதற்கு அங்கத்தினர்கள் இல்லாமல் சபையை 20 நிமிஷங்களுக்கு முன்னாலேயே ஒத்திவைக்கப்பட்டது. அம் மாதிரி இருக்கவேண்டாம் என்று தயவு செய்து அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். முதல் நாளே அங்கத்தினர்கள் பேசியிருந்தால் நன்றாக இருக்கும் என்று கருதுகிறேன். இன்றைய தினம் பேசுவதற்கு நிறைய பெயர்கள் கொடுத்தால், எல்லோருக்கும் எப்படி சந்தர்ப்பம் கொடுக்க முடியும். யாருக்காவது பேசுவதற்கு சந்தர்ப்பம் கிடைக்காவிட்டால் அது என்பேரில் தவறு இல்லை என்பதைச் சொல்லிக்கொள்ளுகிறேன். ஒவ்வொரு அங்கத்தினருக்கும் பேசுவதற்கு 15 நிமிஷங்கள் கொடுக்கப்போகிறேன். அங்கத்தினர்கள் யாருக்காவது சந்தர்ப்பம் கிடைக்காவிட்டால் அது என்னுடைய தவறு இல்லை என்பதை மீண்டும் ஒருதடவை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

* **SRI A. S. DORAISAMI REDDIAR :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது சர்க்காரால் கொண்டுவரப்பட்டிருக்கும் விற்பனை வரி மசோதாவை நான் மனப்பூர்வமாக ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். வரி விலக்கு வரம்பு ஏற்கனவே ரூபாய் 5,000 ஆக இருந்தது. அதை இப்பொழுது செலக்ட் கமிட்டியார் 10,000 ரூபாய்க்கு உயர்த்தியிருக்கிறார்கள். முன்பு ரிஜிஸ்டிரேஷன் லிமிட் ரூபாய் 4,000 இருந்ததை ரூபாய் 7,500-க்கு உயர்த்தியிருக்கிறார்கள். டாக்டர் லோகநாதன் அவர்கள் உணவு தானியங்களுக்கு ½ சத விகிதம் வரி விதிக்கலாம் என்று சிபார்சு செய்திருந்தார்கள். இந்த மசோதாவில் அரிசி, நெல்லுக்கு ஒரு சதவிகிதமும், மற்ற உணவு தானியங்களுக்கு 2 சதவிகிதமும் வரி விதித்திருக்கிறார்கள். அதன் பிறகு செலக்ட் கமிட்டியார் தீர்க்கமாக ஆலோசனை செய்து சில திருத்தங்களைச் செய்தும்கூட, பழையபடியே இப்பொழுது இருக்கும்படியான இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். 1939–ல் நமது ராஜாஜி அவர்களால் இந்த விற்பனை வரி கொண்டுவரப்பட்டது. அப்பொழுது அதற்காக அவரை எல்லோரும் வருத்தப்பட்டு நிந்தித்துக்கொண்டிருந்தார்கள்.

நான் ஒரு கதை சொல்ல விரும்புகிறேன். ஒரு ராஜா இருந்தாராம், அவருடைய கஜானாவில் பணம் குறைந்துவிட்டதாம். உடனே அவருக்கு ஒரு யோசனை தோன்றிற்று. குடிகள் எல்லோரையும் ஒரு மூட்டை நெல் எடுத்துக்கொண்டு, அதற்குப் பதிலாக ஒரு மூட்டை அரிசி கொண்டு சேர்க்க வேண்டும் என்று அந்த ராஜா சொன்னாராம். அதனால் குடிகள் ரொம்பவும் கஷ்டப்பட்டார்களாம். ஒரு மூட்டை நெல்லுக்கு ஒரு மூட்டை அரிசி எப்படி கொடுப்பது என்று ஜனங்கள் ராஜாவை நிந்தித்துக்கொண்டிருந்தார்களாம். பிறகு சில காலம் கழித்து அந்த ராஜா தன்னுடைய பிள்ளைக்கு பட்டம் கட்டினாராம். பட்டம் கட்டும்பொழுது ராஜா நான்தான் கெட்ட பெயர் வாங்கிவிட்டேன். அந்த கெட்ட பெயரைப் போக்கி எனக்கு நல்ல பெயர் வரும்படி செய்யவேண்டும் என்று பிள்ளைக்கு புத்திமதி சொன்னாராம். பிள்ளையும் அப்படியே "அப்பா, உங்களுக்கு வந்த கெட்ட பெயரைப் போக்கி நல்ல பெயர் வாங்கி வைக்கிறேன்", என்று சொன்னானாம். ராஜா ஒரு மூட்டை நெல் எடுத்துக்கொண்டு போய், அதற்குப் பதிலாக ஒரு மூட்டை அரிசி கொண்டுவரவேண்டும்மென்று சொன்னதினால் கெட்ட பெயர் வாங்கினார். பிள்ளை அந்த கெட்ட பெயரைப் போக்குவதற்காக என்ன செய்கிறது என்று யோசனை செய்தான். எல்லோரும் ஒரு மூட்டை உமி எடுத்துக் கொண்டு போய், ஒரு மூட்டை அரிசி கொண்டுவரவேண்டுமென்று உத்தரவு போட்டானாம். அது போல (**The Hon. Sri R. Venkataraman :** நாங்கள் சாக்கை எடுத்துக்கொண்டுபோய் அரிசி கொண்டுவரவேண்டுமென்று சொல்லுகிறோம்.) சந்தோஷம். ராஜா நெல்லை எடுத்துக்கொண்டுபோய் அரிசி கொண்டுவரச்சொன்னார். அதனால் மக்களுக்கு ரொம்பவும் கஷ்டமாக இருந்தது. இப்பொழுது விலைவாசியெல்லாம் அதிகரித்துவிட்டது. வரியை குறைக்கவேண்டுமென்று கேட்கிறோம். இப்பொழுது வரியை உயர்த்தி ராஜாஜிக்கு நல்ல பெயரை கொண்டுவந்து விட்டார்கள். டாக்டர் லோகநாதன் அவர்களும் குறைக்க வேண்டுமென்று சொன்னார். டாக்டர் லோகநாதன் அவர்களையும் நல்லவராக்கிவிட்டார்கள். இந்த மசோதா ஒரு வருஷத்திற்கு முன்பு கொண்டு வரப்பட்டபொழுது வியாபாரிகள் கிளர்ச்சி செய்தார்கள், பெரிய கூட்டங்கள் மாகாநாடுகள் நடத்தினார்கள். அதற்கு சர்க்கார் சமாதானம் சொல்லும் வகையில் செலக்ட் கமிட்டி போடப்போவதாகவும், அப்பொழுது வேண்டிய திருத்தங்களைச் செய்வதற்கு சந்தர்ப்பம் இருக்கும் என்று சொன்னார்கள் ; அம்மாதிரி செலக்ட் கமிட்டியும் போட்டார்கள். செலக்ட் கமிட்டியாரும் மிக தீர்க்கமாக யோசனைசெய்தார்கள். இப்பொழுது இருக்கும் சட்டத்தில் சில மாறுதல்கள் செய்ததுபற்றி மகிழ்ச்சி அடைகிறேன். அதை நான் வரவேற்கிறேன். இருந்தாலும், சில விஷயங்களில் மாறுதல்கள் செய்யவேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம். கள்ள மார்க்கெட், கொள்ளை லாபம், லஞ்சப் பழக்கம் இந்த பாஷையெல்லாம் முதலாவது யுத்தகாலத்தில்தான் வந்தது. கள்ள மார்க்கெட் என் வரவேண்டும்? சாப்பிடுவதற்கு 16 அவுன்ஸ் அரிசிக்குப் பதிலாக 6 அவுன்ஸ் கொடுக்கப்பட்டதால், வயிற்றுக்குப் பத்தாமல் கள்ள மார்க்கெட்டில் வாங்க வேண்டியது ஏற்பட்டது.

11th February 1959] [Sri A. S. Doraisami Reddiar]

அது போல சம்பளம் தங்களுக்குப் போதவில்லையாதலால்தான் அதிகாரிகள் லஞ்சம் வாங்குகிறார்கள். அது போலத்தான் யுத்த சமயத்தில் கண்ட்ரோல் வந்ததால் அதிகமாகக் கொள்ளை லாபம் சம்பாதித்தார்கள். குறைவான விகிதத்தில் வரிகளைப் போட்டால் வரி ஏமாற்றம் லஞ்சம் வராது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். அதே போன்றுதான் கண்ட்ரோல் வராதிருந்தால் கொள்ளை லாபமும் வராது. இம்மாதிரி அதிகமான அளவில் வரிகளைப் போடுவதால் அதிகமான அளவில் லஞ்சப் பழக்கம் ஏற்படுகிறது. ஏற்கனவே ஒரு வர்த்தக மகாநாடு நடந்தது. பல நிபுணர்களும் அதில் பேசினார்கள். முன்பு கவர்னர் பதவி வகித்தவரும் பொருளாதார நிபுணருமான திரு. சந்தானம் அவர்கள் அந்த மகாநாட்டில் தலைமை வகித்தார். அவர்கள் சொன்னார்கள் பல முனை விற்பனை வரி போடுவதால் சென்னை ராஜ்யத்திற்கு அதிகமான வருமானம் வராது என்று. பலமுனை வரி போடுவதால் அதிருப்தியும் வரி ஏமாற்றமும் லஞ்சமும் பெருகுமென்பதில் சந்தேகமேயில்லை என்றும் தெரிவித்தார்கள். உணவுப் பொருட்களுக்கு விற்பனை வரி போடக் கூடாது என்பது நாட்டில் கூச்சல் இருந்துகொண்டிருக்கிறது. அதைப்பற்றிக் கூட நான் கவலைப்படவில்லை. முக்கியமாக மனிதர்களுக்கு வேண்டியது உண்ண உணவும் உடுக்க உடையும் அவசியம் வேண்டும். இவைகளின் மூலம் அதிக வருமானம் வருவதால் இவைகளின் மீது வரி போட்டுத்தான் தீரவேண்டும் என்கின்ற முறையில் இப்போது வரி போடப்பட்டிருக்கிறது. இந்த விற்பனை வரி நம்முடைய நாட்டுக்கு காமதேனு போன்றது என்றும் சொல்லப்பட்டு வருகிறது. அப்படிப்பட்ட காமதேனுவை வேண்டாம் என்று நான் சொல்ல வரவில்லை. அதற்கு யாரும் மறுப்புக் கூற மாட்டார்கள். அமைச்சர் அவர்கள் ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பணம் போதாது, ஆகவே நமக்கு பணம் அதிகமாக வேண்டும் என்று சொன்னார்கள். ஆனால் அதற்காக பொறுக்க முடியாத வரிகளைப் போட்டு வரிகளை வசூல் செய்வது என்றால் அது சரியான காரியம் என்று சொல்ல முடியாது. இம்மாதிரி அதிக வரிகள் போடுவதில் பெரும் அளவில் வருமானம் கிடைப்பதற்கு பதில் ஏமாற்றம்தான் கிடைக்கும், இதைத்தான் சந்தானம் அவர்கள் தெரிவித்தார்கள். இன்று பல பொருட்களின் மீது பலமுனை வரி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதிலும் நமக்கு முக்கியமான உணவு தானியங்களின் மீது இப்பொழுது பலமுனையாக நான்கு தடவை வரி வசூல் செய்யப்படுகிறது. பழைய ஆக்டின் பிரகாரம் கமிஷன் லைசென்ஸ் பெற்று வியாபாரம் செய்கிறவர்களுக்கு விற்பனை வரி கிடையாது. அவர்கள் தங்கள் லாபத்திலிருந்து லைசென்ஸ் கட்டணம் செலுத்திவிட்டார்கள். இப்போது அந்தக் கமிஷன் லைசென்ஸ் முறையை எடுத்துவிட்டார்கள். இப்பொழுது கமிஷன் வியாபாரிகளும் விற்பனை வரி செலுத்தியாகவேண்டும். அவர்கள் சொந்த லாபத்தில் வரியை வாங்கிக்கட்டவில்லை. இப்போது கமிஷன் மண்டிகளிலும் லைசென்ஸ் முறையையெடுத்துவிட்டதால் மொத்த வியாபாரியிடமிருந்து சில்லரை வியாபாரிகள் உணவு தானியங்களை வாங்குவதற்கு இன்னொரு முறை வரி கொடுக்கவேண்டியிருக்கிறது. இதுபோல் ஒரே சாக்குகளுக்கு நான்கு இடங்களில் விற்பனைவரி கொடுக்க வேண்டியிருக்கிறது. சட்டசபை அங்கத்தினர்கள் பொதுவாக வியாபாரிகளைப்பற்றி அவ்வளவாகக் கவலைப்படுவதில்லை. அவர்கள் அதிகமாக கொள்ளையடிக்கிறார்கள் என்று பலர் சொல்லலாம். நாட்டில் நல்லவர்களும் இருப்பார்கள், கெட்டவுர்களும் இருப்பார்கள். எல்லோருமே கெட்டவர்கள் ஆகமாட்டார்கள். ஆனால் ஒவ்வொரு உணவுப் பொருளின் மீதும் நான்கு இடங்களில் வரி கொடுக்க வேண்டும் என்று சொல்லுவது நியாயமுமல்ல, தர்மமும் அல்ல என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். உணவுப் பொருட்களை வாங்குகின்ற சமயத்தில் சிறு வியாபாரிகள் பெரிய வியாபாரிகளிடமிருந்து வாங்குகிறார்கள். இம்மாதிரி மூன்றுகமாறுகிறது. இம்மாதிரி வாங்கும்போது வியாபாரிகள் கொடுக்கின்ற மூன்று முனை வரிகள் சரக்கின் மீது தான் விலையில் ஏறுகிறது. கடைசியில் அந்த வரிகளை எல்லாம் பொறுத்துக்கொள்ளவேண்டியவர்கள் அதை வாங்கிச் சாப்பிடுபவர்கள்தான். ஒரு மூட்டைக்கு ஆறு அணா என்று வைத்துக்கொண்டாலும் கூட நான்கு இடங்களிலும் விற்பனை வரியைச் சேர்த்துப் பார்த்தால் ஒன்றரை ரூபாய் ஒரு மூட்டைக்குக் கொடுக்க வெண்டியிருக்கிறது. அரசாங்கம் கொள்முதல் செய்ய போகிறது என்று எல்லாம் சொல்லப்படுகிறது. ஆனால் அதே சமயத்தில் பல

[Sri A. S. Doraisami Reddiar] [11th February 1959

முறை வரி விதிப்பதினால் விலை வாசிஏறாது என்று அரசாங்கத்தால் சொல்ல முடியுமா என்று கேட்கிறேன். இன்றைக்கு பலமுனை வரி போடுவதை விட ஒருமுனை வரி போடுவதாக இருந்தால் நிச்சயமாக வருமானம் அதிகமாக கிடைக்கும் என்று நம்புகிறேன். அதே சமயத்தில் அரசாங்கம் ஏமாற்றமடையாமல் இருப்பதற்கும் வழியாக இருக்கும். இவ்விதம் பலமுனைவரி போட்டிருப்பதால் வியாபாரிகளுக்கு வியாபாரம் செய்வதற்கு கஷ்டமாக இருக்கிறது. இதனால் அரசாங்கத்தை ஏமாற்றப்பார்க்கிறார்கள். இவ்விதம் வரி ஏமாற்றுகிறவர்கள் குறைந்த விலைக்கு உணவு தான்யங்களை விற்க முடிகிறது. அதே நேரத்தில் நியாயமாக, உண்மையாக வரிகளை கொடுத்துக்கொண்டு வியாபாரம் செய்வதென்றால் குறைந்த விலைக்கு வியாபாரம் செய்ய முடியாத நிலை ஏற்படுகின்றது. யோக்கியமான வியாபாரிக்கு ஒரு தர்மசங்கடமான நிலை ஏற்படுகின்றது. ஆகவே பல இடத்தில் வரியைப் போடுவதைவிட ஒரே இடத்தில் வரியைப் போட்டுவிட்டால் வரியை கொடுப்பதற்கு வியாபாரிகள் தயாராக இருப்பார்கள். வியாபாரிகள் பல முனை வரியால் ஏற்படும் கஷ்டங்களைப் போக்குவதற்கு அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுக்க முன் வருகிறார்கள். ஆகவே இதில் தப்பு சொல்வதில் பிரயோசனமில்லை. ஆகவே வரி போடுவதை நாம் சீர்படுத்திக் கொள்ளவேண்டும். அப்போது தான் நியாயமான முறையில் வரிவிதிப்பு முறை நடைபெறும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். வேண்டுமென்றால் ஒரு வருடம் இவ்விதம் ஒருமுனை வரிவிதித்து பரிட்சித்து பாருங்கள், அதில் சரியானபடி வருமானம் கிடைக்கவில்லை யென்றால் அதன் பின்னால் பலமுனை வரி போட்டுக் கொள்ளலாம் என்பதையும் அரசாங்கத்திற்கு சொல்ல விரும்புகிறேன். ஐந்தாண்டு திட்டத்திற்கு பணம் போதவில்லை என்ற காரணத்திற்காக ஒரு மனிதன் தலையில் எவ்வளவு வேண்டுமானாலும் வரிகளை போட்டு பளுவை சுமத்தலாம் என்றால் அது நியாயமல்ல என்பதுதான் என் அபிப்பிராயம். அதோடு இதன்படி சரியாக வியாபாரிகள் நடக்கவில்லையென்றால் அதற்காக அபராதம் போடவும் இரட்டிப்பு வரி வீதிக்கவும் இதில் இடமிருக்கிறது. அதிகப்படியான அளவில் அவர்கள் மீது பளுவை சுமத்திவிட்டு அதன்படி நடக்கவில்லையென்றால் அபராதம் போடுவது என்று சொன்னால், உண்மையிலே அவர்களுக்கு அது பெரும் கஷ்டமாக இருக்கும். அவர்களுக்கு சுலபமான முறையில் வரிகளை போட்டுவிட்டு அதன்படி நடக்கவில்லை என்றால் அவர்கள் பேரில் கடுமையான தண்டனை விதிக்க வேண்டியதுதான். நான் பலமுனைவரி முறையைப் பற்றி ஹானஸ்ட்-ஆன ஒரு ஸி.டி.ஓ. அவர்களிடம் பேசிக்கொண்டிருந்த போது அவர் சொன்னதென்னவென்றால் இந்த பலமுனை வரியால் வரி ஏமாற்றம் அதிகம் ஏற்படுகிறது. அதிகமான வருமானம் வரவில்லை, ஒருமுனை வரியினால் இப்போது கிடைப்பதைவிட இரண்டு மடங்கு அதிகமான வருமானம் கிடைக்கும் என்று தெரிவித்தார். இதைப்பற்றி ஆராய்ந்த லோகநாதன் அவர்களும் உணவுப் பொருட்களுக்கு அரை சதமானம் வரி போடவேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். ஒருமுனை வரி இருந்தால் வியாபாரிகள் நேரடியாக மண்டிக்கு சரக்கை வரவழைத்துக்கொள்வதற்கு வசதியாக இருக்கும். பல முனை வரியால் லாரியில் வரும் சரக்குகளை மண்டியில் இறக்காமலேயே லாரியிலிருந்தபடியே சரக்கை விற்றுவிடுவார்கள். கிடங்குகள் வைத்திருக்க வேண்டிய அவசியமில்லை. மேலும் ஒருமுனை வரி போடுவதாக இருந்தால் வியாபாரிகள் அதிகாரிகளை ஏமாற்றமாட்டார்கள். அதோடு அரசாங்கத்திற்கு அதிகமான வருமானம் வரும் என்பதில் சந்தேகமில்லை. ஆகவே ஒரு முனை வரியை கொண்டுவர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் இப்போது நமக்கெல்லாம் நயமாக கிடைக்கிற பொருள் உப்பு. படி ஒன்று 10 பைசாவுக்கு கிடைக்கிறது. இதன் பேரில் வரி விதிப்பதாக இருந்தால் நல்ல வருமானம் வரும் என்று நினைக்கிறேன். படிக்கு ஒரு பைசா வீதம் வரி போட்டால் கூட அதிகமான அளவில் வருமானம் கிடைக்கும். அதன் பேரில் கஸ்டம்ஸ் ட்யூட்டி முதலியவை இருக்கின்றது. அதுபோல் சிறிய அளவில் வரி போடுவதாக இருந்தால் நமக்கு அதிகமான வருமானம் கிடைக்கும் என்று நான் நம்புகிறேன். இதற்கு மத்திய அரசாங்கத்திலிருந்து பெர்மிஷன் வேண்டுமானால் வாங்கிகொண்டு இதன் பேரில் வரி விதிக்கலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

11th February 1959] [Sri A. S. Doraisami Reddiar]

அதோடு நான் முன்னால் சொன்னது போல் யாரும் தாங்க முடியாத அளவுக்கு வரிப்பளுவை சுமத்திவிட்டு அவர்கள் பேரில் சரியாக நடக்கவில்லை என்பதற்காக தண்டனை அளிப்பது சரியல்ல. வரிப்பளுவை குறைவாக சுமத்தியிருந்தால், அதன்படி வியாபாரிகள் நடக்கவில்லையென்றால் அவர்களை ப்ராஸிக்யூட் செய்யவோ அல்லது தண்டனை கொடுக்கவோ வேண்டியதுதான். ஆனால் வரிப்பளுவை அதிகமாக சுமத்திவிட்டு இம்மாதிரி தண்டனை கொடுத்தால் அவர்களால் தாங்க முடியுமா என்பதை நாம் பார்க்க வேண்டும். ஆகவே இதையும் நாம் ஆலோசித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு நம் எல்லோருக்கும் அவசியமான உரம், மாடுகளுக்கு வேண்டிய புண்ணாக்கு முதலிய பொருள்களுக்கு மூன்று சத விகிதம் வரி போடப்பட்டிருக்கிறது. இதிலும் இவ்வளவு கூடுதலாக வரி விதிக்கக்கூடாது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம்.

பொதுவாக இச்சட்டத்தை நான் வரவேற்கிறேன். ஆனால் சர்க்காரை ஏமாற்றமுடியாத வகையில் இந்தச் சட்டம் அமைய வேண்டுமானால் உணவுப் பொருள்களுக்கு பலமுனைவரி இருப்பதை மாற்றி ஒரு முனை வரியாக போட வேண்டும் என்று சொல்லிக்கொள்வதோடு, இதன் மூலம் அரசாங்கத்திற்கு வருமானமும் அதிகமாக கிடைக்கும் என்றும் ஒரு முனை வரியை போட வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : கனம் மந்திரி அவர்கள் பதிலளிப்பதற்கு எவ்வளவு நேரம் எடுத்துக் கொள்வார் ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : எனக்கு முக்கால் மணி நேரம் வேண்டியிருக்கும்.

**Sri A. VEDARATHNAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விற்பனை வரி திருத்த மசோதாவை நான் முழு மனதோடு ஆத 10-20 a.m.
ரிக்கிறேன். ஏனென்றால் இது ஒரு பெரிய மகத்தான நல்ல காரியத்திற்காக ஏற்பட்ட வரி. இந்த நாட்டில் கோடிக்கணக்கான மக்களை பஞ்சமா பாதகத்திலிருந்து விடுவித்திருக்கின்ற வரி இது. ஒரு வரியின் மூலமாக ஏதாவது ஒரு நல்ல காரியம் செய்ய முடியும் என்றால், அதற்கு இந்த வரி ஒரு சான்று. இதன் மூலமாக பல கோடிக்கணக்கான மக்களை நல்ல வழிக்கு மாற்றுகிற ஒரு வகையை இது செய்திருக்கிறது. இன்றைக்கு ஏழைகளின் வாழ்வு வளமாகியிருப்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். அதுவுமின்றி, ஒரு குறிப்பிட்ட சாரார் பேரில் மாத்திரம் இல்லாது அந்த வரி நிரந்தரமாக மாகாணத்தில் உள்ள எல்லோரும் செலுத்தக் கூடிய வரியாகவும் அமைந்திருக்கிறது. ஆகையால், இதைப் போன்ற இத்தனைக் காரணங்களினால் இது வரவேற்கத் தகுந்தது என்று குறிப்பிட விரும்புகிறேன். இதற்கு முன் இந்த வரியில் இருந்த குறைபாடுகளையெல்லாம் அறிந்து, பலர் கூறிய குற்றச்சாட்டுகளையெல்லாம் ஆலோசித்து அறிவதற்கென்றே டாக்டர் லோகநாதன் என்பவரை நியமித்து அதைப் பரிசீலனை செய்தார்கள். அவர்கள் சமர்ப்பித்த அறிக்கையை, குறை கூறியவர்கள் எல்லாம்கூட, எந்த வர்த்தக சமூகத்தினர் இது தாங்க முடியாத வரி என்றெல்லாம் குறை சொன்னார்களோ அவர்களெல்லாம், டாக்டர் லோகநாதன் அவர்களின் அறிக்கை சிறந்தது, ஏற்றுக் கொள்ளத் தக்கது என்று மாகாணம் முழுவதுமே ஒரு முகமான பாராட்டுகள் வந்திருப்பதை நாம் அறிவோம். இந்தச் சபையிலே கூட இதைப் பற்றிப் பலர் சொன்னார்கள். இப்போது வந்திருக்கிற இந்தத் திருத்த மசோதாவில் டாக்டர் லோகநாதன் அவர்கள் என்னென்ன சிபாரிசுகளைச் செய்தார்களோ அவைகள் அனைத்தையும்—ஒரு சில விஷயங்களைத் தவிர மற்றதையெல்லாம்—அப்படியே அங்கீகரித்திருக்கிறார்கள். ஆனால் இதில் என்ன மாறுதல்—முக்கியமான மாறுதல்—என்றால், வரி விஷயத்தில் அவர்கள் குறிப்பிட்டிருந்த அந்த ஏற்பாட்டை—வரி வீதத்தை—அரசாங்கம் ஏற்றுக் கொள்ளத் தயங்குகிறது. அப்படித் தயங்குகிற காரணத்தினால், அதை மாத்திரம் ஏற்றுக் கொள்ளாமல், அதைத் தவிர மற்றப் பகுதிகள் அனைத்தையும்

[Sri A. Vedarathnam] [11th February 1959]

அப்படியே ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். ஒரு சிலர் சொல்லலாம். ஏன் அந்த விகிதத்தை ஒத்துக் கொள்ளத் தயங்கவேண்டும் என்று. இதற்கான காரணத்தை கனம் மந்திரி அவர்கள் தன்னுடைய ஆரம்ப உரையிலேயே குறிப்பிட்டிருக்கிறார்கள். அரசாங்கம்—ஒரு பெரிய மாகாணப் பொறுப்பை ஏற்று நடத்துகிற அரசாங்கம்—ஹேஷ்யத்தை அடிப்படையாகக் கொண்டு, அவர்கள் ஒரு முடிவுக்கு வருவது சாத்தியமல்ல என்று அவர்கள் சுட்டிக் காட்டியதை கனம் அங்கத்தினர்கள் அத்தனை பேரும் கவனித்திருப்பார்கள் என்று எண்ணுகிறேன். அவர், ஹேஷ்யமாக ½ சதவீதம் வரி போட்டால், இந்த வரி எதிர்பார்க்கின்ற அளவுக்கு வந்து விடும் என்று கூறியதை நம்பி அந்த வரியை விதிக்க முன் வந்தால், பிற்பாடு அந்த அளவு வரி வசூலாகாமல் துண்டு விழுந்தால்—பல கோடிக்கணக்கான ரூபாய்கள் துண்டு விழுந்தால்—மாகாண நிர்வாகம் ஸ்தம்பித்து விடக் கூடிய நிலை ஏற்படும். அந்த மாதிரி நெருக்கடியான நிலையில் தன்னை வைத்துக் கொள்ளக் கூடாது என்ற காரணத்தினால்தான் வரி வீதம் ஒன்றைத் தவிர மற்றது எல்லாவற்றையும்—டாக்டர் லோகநாதன் அவர்கள் சொன்னதையெல்லாம்—இந்தச் சட்டத்தின் மூலமாக ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் கொஞ்சம் கூர்ந்து கவனிக்க வேண்டும். அப்படிக் கூர்ந்து கவனித்தால், இதைப் பற்றிக் குறை கூறுவதற்கு இடமே இருப்பதற்கில்லை என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இந்த வரியினால் வியாபாரிகள் விஷயத்தில் நெருக்கடி ஏற்பட்டு, அவர்களுக்குக் கஷ்டம் வருகிறது என்று கூறப்படுகிறது. இங்கு பேசிய பல அங்கத்தினர்களும் இந்த வரியை ஏதோ வியாபாரிகள் சொந்த சொத்திலிருந்து செலுத்துகின்ற மாதிரியாக நினைத்துப்பேசினார்கள்—வியாபாரிகள் செலுத்துகிறார்கள் என்பது கோபுரத்தை பொம்மை தாங்குவது போல என்று சொன்னால் பொருத்தமாக இருக்கும்—வியாபாரிகள் யாரும் இந்த வரியைச் செலுத்தவில்லை. எந்த பில்லைப் பார்த்தாலும் அதிலே விற்பனை வரி என்ற ஒரு அம்சத்தைச் சேர்த்து வாங்குகிறவர்களிடத்தில் வசூலிக்கிறார்களேயல்லாமல் அவர்கள் கையிலிருந்து செலுத்துகிற வரி அநேகமாய் ஒரு தம்படிகூட இல்லை என்று சொன்னால் அது மிகையாகாது. அப்படி இருக்கும்போது இது வர்த்தகர்களுக்கு ஏற்பட்ட ஒரு வரி என்று எண்ணிப் பலர் கூறுவதைப் பார்க்க வியப்பாக இருக்கிறது. அதுவும் உணவுப் பொருள்களைப் பற்றி மிக முக்கியமாகக் குறிப்பிடப்பட்டது. அன்றைய தினம் அண்ணல் காந்தியடிகள் செய்த உப்புச் சத்தியாக்கிரஹத்தை ஒரு பெரிய சான்றாக எடுத்துக் காட்டப்பட்டது. உணவுப் பொருள்களுக்கு ஏற்பட்ட வரியைக் கூடாது என்று எதிர்த்து, ஒரு பெரிய சத்தியாக்கிரஹத்தை நடத்தி, அந்த அடிப்படையில் வெற்றி கண்டிருக்கிறார்கள். அந்த பரம்பரையைச் சேர்ந்தவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்துகிற காரணத்தினால், அப்போது உணவுப் பொருள்களுக்கு வரி கூடாது என்று சொன்னவர்களுக்கு இந்த மாதிரி ஒரு வரியைப் போட இப்போது என்னப் பிரமேயம் வந்தது என்று அவர்கள் கொஞ்சம் கூர்ந்து கவனிக்கவேண்டும். வெள்ளையர்கள் ஆட்சி செய்து வந்த காலத்தில், உப்புக்கு—மூட்டைக்கு இரண்டணா உள்ள உப்புக்கு—48 மடங்கு, 50 மடங்கு வைத்து 3⅛ ரூபாய் முதல் ஐந்து ரூபாய் வரையில் தீர்வை போட்டார்கள். அப்போது காந்தியடிகள் அந்த வரியை ஆட்சேபித்தார். உணவுப் பொருள்களுக்கு இதுபோல் வரி போடுவதைப்பற்றி யாருக்கும் ஆட்சேபம் கிடையாது. அப்போது ஒரு பைசா, இரண்டு பைசா சமாசாரம் அல்ல. 48 மடங்கு, 50 மடங்கு வரியை உணவுப் பொருள்களின் பேரில் போட்டபோது அதை எதிர்த்தார்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்வார்கள், இதை ஆட்சேபிக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன்.

**(Srimathi Rajathi Kunjithapatham in the Chair.)**

இந்த நிலையில் உணவுப் பண்டத்தின் பேரில் அரசாங்கம் ஏன் வரி போட முன் வந்திருக்கிறது என்று கேட்டால், நாம் எந்தக் கட்டத்தில் இருக்கிறோம் என்ற விஷயத்தைக் கொஞ்சம் அவர்கள் சீர்தூக்கிப் பார்த்தால் அந்தக் குற்றச்சாட்டைக் கூற அவர்கள் முன் வரமாட்டார்கள். இப்போது நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மத்தியில் இருக்கிறோம் என்பதை முதலில் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். திட்ட மத்தியில்

11th February 1959] [Sri A. Vedarathnam]

இருக்கிற இந்தக் காலத்தில் இது போன்று முக்கியமான பொருள்களுக்கு இது வரையில் வசூலித்து வந்த வரியை விட்டால், அதனால் அரசாங்கத்திற்கு வரவு–செலவுத் திட்டத்தில் பல கோடிக் கணக்கான ரூபாய் துண்டு விழுந்தால் திட்டம் ஸ்தம்பித்து விடும் என்று உணர்ந்தவர்கள் இதைப்பற்றி அதிகம் குறை கூறமாட்டார்கள். இப்போது நாம் கொடுக்கும் ஒவ்வொரு தம்பிடியும், இந்த விற்பனை வரி மூலமாக ஒரு கோடி ரூபாய் உபரி வருமானம் கிடைத்தால், இரண்டு கோடி ரூபாயாக இந்த மாகாணத்தினுடைய ஐந்தாண்டுத் திட்டத்தின் செலவுக்காக மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கிறது என்ற விஷயத்தை உணர்ந்தவர்கள் இதை ஆட்சேபிக்க வேண்டிய அவசியமில்லை. நாம் கொடுக்கும் ஒவ்வொரு தம்பிடியும் இன்னொரு தம்பிடியைச் சேர்த்துக் கொண்டு நமது அபிவிருத்தித் திட்ட வேலைகளுக்குக் கிடைக்கிறது என்று சொன்னால், மத்திய சர்க்காரிடத்தில் சண்டை போடவேண்டும், சண்டை போட்டுப் பணத்தை வாங்க வேண்டும் 10-30 a.m. என்று சொல்லும்போது, சண்டை ஒன்றுமில்லாமல், சுலபமாக, பெரும் சுமையாகக் கூட இல்லாமல் தம்பிடிக் கணக்கிலேயே—சிகரெட் பிடிக்கும் செலவுகூட ஆகாது, சினிமாவிற்குச் செலவு செய்வதில் ஒரு பகுதி கூட இருக்காது—அந்த முறையில் இந்த வரியின் மூலமாக அதிகப்படியான பணத்தை அடைவதற்கான வழி எற்படுகிறது என்பதை நன்கு உணர வேண்டும். இருந்தபோதிலும் " வரி " என்று சொன்னால், அதைப்பற்றி குறை கூற வேண்டியது தம்முடைய கடமை என்ற பழக்கத்திலே வருகிற காரணத்தால் இதைப்பற்றி அம்மாதிரி கூறுகிறார்களே அல்லாமல் என் உணவுப் பொருளுக்கும் இப்பொழுது வரி போட்டிருக்கிறது என்று பார்ப்பதில்லை. ஒரு மூட்டை நெல் விலை ரூ. 20 இப்பொழுது இருப்பதாக வைத்துக் கொண்டாலும் ஐந்து மூட்டையின் விலை உயர்ந்தபட்சம் ரூ. 100 ஆகிறது. ரூ. 100 பெருமானமுள்ள ஐந்து மூட்டை நெல்லுக்கு ஒரு ரூபாய் வரி விதிக்கும்போது, ஒவ்வொரு படி நெல்லுக்கும் அந்த ஒரு ரூபாயை பகிர்ந்து விதிக்கும் காலத்திலே கடலிலே கரைத்த பெருங்காயம் மாதிரி ஆகிவிடுகிறதே அல்லாமல், தாங்க முடியாத பெரும் சுமை என்று சொல்ல முடியாது. எந்த வியாபாரியின் தலையிலேயும் வைத்து, அவர்கள் கொடுக்க முடியாத நிர்ப்பந்தம் ஆகிவிடவில்லை என்பதை அவர்கள் கூர்ந்து கவனித்தால், அம்மாதிரி குற்றச்சாட்டுக்களைக் கூற அவர்கள் முன் வரமாட்டார்கள் என்பதை நான் கூற விரும்புகிறேன்.

அப்படிக் கொடுக்கின்ற ஒவ்வொரு ரூபாயும் இன்னொரு ரூபாயைச் சேர்த்துக்கொண்டு நம்முடைய மாகாணத்திற்கு திரும்பி வருகிற நிலைமையை அவர்கள் கொஞ்சம் கவனிக்கவேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வெற்றிகரமாக நடந்துவிடுமேயானால், அப்பால் இந்த நாட்டை அசைக்கின்ற சக்தி உலகத்திலே யாருக்கும் இல்லை என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். எனவே, அந்தத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டியது நம்முடைய கடமை. அதிலும் இப்பொழுது நம்முடைய மாகாணம் மிகப் பின்தங்கிய நிலையில் இருக்கிற காரணத்தால் பொருளாதாரத் துறையில் உயருவதற்கான முறையில் நாம் யாருக்கும் அதிகக் கஷ்டம் இல்லாமல், சில பைசாக்களை அதிகமாகக் கேட்பதன் மூலமாக, சில கோடி ரூபாய்களை நம்முடைய மாகாணத்திற்குக் கொண்டு வந்து சேர்க்கிறதற்கு இந்த வரி ஒரு வாய்ப்பாக, சாதனமாக அமைகிறது என்று சொன்னால், அதைக் கூர்ந்து கவனித்து, நம்முடைய அரசாங்கத்தை, நம்முடைய விற்பனை வரித்துறையில் மசோதாவைக் கொண்டுவந்திருக்கிற கனம் அமைச்சர் அவர்களுடைய கையைப் பலப்படுத்த வேண்டியது இங்குள்ளோர் எல்லோருடைய கடமையாகும் என்பதை நினைவூட்ட விரும்புகிறேன். அதற்கு மாறாக, அவர்களை பலவீனப்படுத்தாமலாவது இருந்தால் அது பெரிய உதவி ஆகும் என்று நான் அவர்களுக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

எனவே, இந்த வரி ரொம்ப சுலபமான வரி, கஷ்டம் இல்லாமல் யாரும் எளிதிலே பைசாவாக செலுத்துகிற வரி. இது யாரையும் எப்படியும் பாதித்து விடுவதற்கு இடமில்லை என்ற விஷயத்தை நான் நினைவூட்டுகிறேன். அவர்கள் சொன்னார்கள் வரி அதிகமாக

[Sri A. Vedarathnam] [11th February 1959

இருக்கும் காரணத்தால் தான் கள்ள மார்க்கெட்டு, கள்ளக் கடத்தல் போன்ற காரியங்களிலே ஈடுபடுவதற்கு ஏற்பாடு ஆகின்றது ; சம்பளம் குறைவாக இருக்கும் காரணத்தால் லஞ்சம் வாங்குகிறார்கள், என்றெல் லாம் எனக்கு முன் பேசியவர் கூறினார். அது காரணமே அல்ல என்ற விஷயத்தை நான் அவர்களுக்குக் குறிப்பிட விரும்புகிறேன். "இரு வேறு உலகத்து இயற்கை திரு வேறு தெள்ளியர் ஆதலும் வேறு" என்று வள்ளுவப் பெருந்தகை கூறியிருக்கிற மாதிரி, கள்ள மார்க்கெட் வழியிலேயும் அல்லது ஏதோ ஒரு தப்பான வழியிலேயும் பணம் சம் பாதிப்பது என்பது சிலருடைய மனப்பான்மை. எவ்வளவு தான் கஷ்ட ஜீவனம் நடத்தியபோதிலும்கூட யோக்கியமாக வாழ்கிறது என்ற உறு தியைக் கடைப்பிடித்து வாழ்க்கை நடத்துகின்றவர்கள், என்னதான் நெருக்கடியைக் கொண்டுவந்தாலும்கூட, ஒருக்காலும் அவர்கள் வாழ்க்கை யில் தவறு செய்ய மாட்டார்கள். தவறு செய்ய வேண்டும் என்பதை கொள்கையாக வைத்திருக்கின்றவர்களை வைஸிராய் பதவியில் வைத்து, மாதம் 21 ஆயிரம் ரூபாய் சம்பளம் கொடுத்தால்கூட, அவர்களால் யோக்கியமாக நடக்க முடியாது. ஆகவே, அதிகமாகச் சம்பளம் கொடுப் பதினால் மட்டும் ஒருவரை யோக்கியமாக நடக்கும்படிச் செய்துவிட முடி யாது. மிகச் சொற்ப சம்பளத்தார்கூட லஞ்சம் வாங்காமல் யோக்கியமாக நடக்கிறார்கள் என்று சொன்னால் அது பிறவியிலே ஏற்பட்ட குணம். தவறு செய்கின்றவர்களை யோக்கியமாக நடக்கும்படியாக இங்குள்ளவர்கள் அவர்களுக்கு யோசனை கூறவேண்டுமே யல்லாமல், சம்பளக் குறைவு என்ற காரணத்தைக் காட்டி, அவர்கள் தவறு செய்யலாம், வரி விதிப்பின் காரண மாக அவர்கள் எப்படி வேண்டுமானாலும் நடக்கலாம் என்று யோசனை சொல்வது நியாயம் அல்ல என்று தான் நான் அவர்களுக்குக் கூற விரும்புகிறேன்.

இப்பொழுது 1 பர்சென்ட் என்று போட்டிருக்கும் வரியானது அதிகம் என்று கூறுவதற்கில்லை. நம்முடைய நாட்டின் பொருளாதாரம் 20 ஆண்டு களுக்கு முன் இருந்த நிலையில் இப்பொழுது இல்லை என்பதை நன்கு உணர்ந்தவர்கள் இதில் இருக்கும் வரிகளைக் கஷ்டம் இல்லாமல் செலுத்துவதற்கு முடியும். அப்படிச் செலுத்தும் பணம் நமக்கு இரு மடங்காகத் திருப்பி வந்துவிடும்.

எந்தத் தொழிலாவது இதனால் பாதிக்கப்படுகிறது என்று கூறுகிறார் களோ, அதற்கு விதிவிலக்கு அளிக்க, நாம் எல்லோரும் சேர்ந்து சொல்கிற இந்த யோசனையைக் கேட்டு நடக்கத் தயாராக இருக்கும் சர்க்கார் இதற்கு முன் அம்மாதிரி எத்தனையோ பாதிக்கப்பட்ட தொழில்களுக்கு வரி விலக்கு அளித்தது மாத்திரம் அல்லாமல், ரிபேட் கூட கொடுக்க முன் வந்திருக்கிறார்கள் என்று சொன்னால், அம்மாதிரி கஷ்டப்படுகிற தொழில் களுக்கு சர்க்கார் விதி விலக்கு தருவார்கள். இன்னும் மான்யங்களைத் தருவதற்குக் கூட சூழ்நிலை இங்கே இருக்கிற காரணத்தால், நம்முடைய அரசாங்கம் அதை ஏற்று நடத்தத் தயாராக இருக்கிற காரணத்தால், ஏதோ பாதிக்கும் என்ற உத்தேச எண்ணத்தை வைத்துக் கொண்டு இதை ஆட்சேபிக்கவேண்டியதில்லை என்று தான் சர்க்காருக்கு நான் கூற விரும்புகிறேன்.

அதோடு இந்த வரி விஷயத்திலே பெரும்பாலும் குறை கூறுகிறவர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால், இந்த வரி வசூலிக்கிற அதிகாரிகள், அவர்கள் சில இடங்களிலே ரொம்ப கடுமையாக நடந்து கொள்ளுகிறார்கள் என்ற அந்தக் குற்றச்சாட்டு கூறப்படுகின்றன. கனம் அமைச்சர் அவர்கள் இந்த விஷயத்தில் அவர்களுடைய கவனத்தைச் செலுத்துவார் என்று நினைக்கிறேன். வருமான வரி வசூலிக்கிற அதிகாரிகளைப் போற்று கிறார்கள், அதே சமயத்தில் விற்பனை வரி வசூலிக்கிற அதிகாரிகளைத் தூற்றுகிறார்கள் என்றால், அதற்கு என்ன காரணம் என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்த்து, அம்மாதிரி அதற்கு உண்மையிலேயே இடம் இருக்கு மானால், அதைப் பரிகரிக்க அவர்கள் முன்வரவேண்டும்.

11th February 1959] [Sri A. Vedarathnam]

கணக்கு வைத்துக்கொள்வது பெரிய கஷ்டம். அதுவும் விற்பனை வரிக் கணக்குக் காட்டுவது அதிகக் கஷ்டம் என்று பலர் கூறியதையும் அவர்கள் கவனத்திற்கு நான் கொண்டுவர விரும்புகிறேன். அம்மாதிரி வியாபாரம் பண்ணுகிறவர்கள் அத்தனை பேரையும் இதிலிருந்து விடுவித்தாய்விட்டது. காய்கறி வியாபாரம் செய்கிறவர்களைப் பொறுத்தவரையில், வரி விதிக்கும் வரம்பை 30 ஆயிரத்துக்கு உயர்த்தி விட்டார்கள். அதற்குமேலே பெரிய வர்த்தகம் செய்கின்றவர்கள் கணக்கு வைத்துக் கொள்ளாமல் இருக்க முடியாது. ஆனால், யார் அஞ்சவேண்டும்? மடியிலே கனம் இருப்பவர்கள் அஞ்ச வேண்டும். மடியிலே கனம் இல்லாதவர்கள் யாரும் அஞ்ச வேண்டிய அவசியம் கிடையாது. யார் நேர்மையான கணக்கு வைத்துக் கொள்ளாமல் தவறான முறையில் இரட்டைக் கணக்கு ஜோடிக்கிறார்களோ அவர்கள் தான் இந்த அதிகாரிகளைப் பார்த்து அஞ்ச வேண்டிய நிலை இருக்கிறதே அல்லாமல், யோக்கியமாக, நேர்மையாக, உண்மையாகக் கணக்கு வைத்திருப்பவர்கள் யாரைப் பார்த்தும் அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை. அதிகாரிகள் கணக்கைக் கேட்டவுடன் அவர்களிடம் கணக்குப் புத்தகங்களை எறிந்துவிட்டு, கவலையற்றுச் சும்மா இருக்கலாம். ஏதாவது தகராறு இருக்குமானால்தான் அவர்கள் அஞ்ச வேண்டிய நிலைமை வருகிறது என்பதை இந்த இடத்தில் நினைவூட்ட விரும்புகிறேன்.

இந்த வரியின் மூலம் அரசாங்கத்திற்கு அவர்கள் எதிர்பார்க்கின்ற வருமானம் வரவேண்டுமானால், இதில் வியாபாரிகள் ஒத்துழைக்கவேண்டும். இந்த வரியைக் கொடுக்காமல் "தபாய்த்துக்" கொண்டு ஏமாற்றுகிறவர்களுடைய கூட்டம் மாநிலத்தில் நிரம்ப இருக்கிற காரணத்தினால், அம்மாதிரி ஏமாற்றுவதற்கு வழி இல்லாமல் இந்த வரியை வசூலிக்கும் இலாகா இதைக் கட்டுபடுத்த முன்வருமானால், இப்பொழுது போட்டிருக்கும் வரி விகிதம் குறைவாக இருந்தாலும்கூட, குறைந்தபட்சம் 50 பர்சென்ட் அதிக வருமானம் வரக்கூடும் என்பதை நான் அமைச்சர் அவர்களுக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

சென்னை மாநகரை எடுத்துக்கொண்டால், ஒரு நாளைக்கு நூற்றுக் கணக்கான லாரிகள் வந்துகொண்டிருக்கின்றன. அந்த லாரியில் சரக்கு அனுப்புகின்றவர்கள் கணக்கு எழுதுவது இல்லை; "பில்" எழுதுவது இல்லை. லாரியில் கொண்டுவந்து சரக்குகளை விற்கின்றவர்களிடத்திலே கணக்குக் காட்டுவதும் இல்லை; பில் கொடுப்பதும் இல்லை. ஆனால், இதற்கு "செக்" பண்ணுவதற்கு ஆள் வைத்திருக்கிறார்கள். தயவு செய்து கனம் ராமையா அவர்கள் செய்த மாதிரி, தொழில் அமைச்சர் அவர்கள் கூட மாறு வேடம் பூண்டாவது "செக்" பண்ணுகிற ஆசாமிகள் ஒரு எல்லையிலே போய் சட்டைப் பையில் மாலை நேரத்தில் கை வைத்தால் ரூ. 200, ரூ. 500 வரையில் ஒருவர் செக் பண்ணும் இடத்தில் அவர்கள் சம்பாதித்துக்கொண்டு போகிறார்கள் என்பதைத் தெரிவித்து கொள்ள முடியும். அவர்கள் இதை சோதனை செய்து பார்க்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இம்மாதிரி வரியை துஷ்பிரயோகம் செய்யாமல், ஏமாற்றாமல், ஏமாற்றுவதற்கு இடம் கொடுக்காமல் வசூலிக்க தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். வசூலிக்கும் வரி நல்ல முறையில் வசூலிக்கப்படுவதோடு சிக்கனமாக சிதறாமல் வசூலிக்கப்பட வேண்டும். இதைப்பற்றி நாம் ஒவ்வொருவரும் கனம் மந்திரி அவர்களுக்கு எடுத்துச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறோம். டாக்டர் லோகநாதன் அவர்களுடைய அறிக்கையில் எப்படி காணப்படுகிறதோ அந்த முறையிலேயே வரி போடப்பட்டிருப்பதால் இதை எல்லோரும் வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறோம். வரி விதிகம் ஒன்றைத் தவிர மற்றவைகள் எல்லாம் அநேகமாக அப்படியே தான் அறிக்கையில் கண்டபடி இருக்கிறது என்ற காரணத்தால் இதை எல்லோரும் ஆதரித்து அரசாங்கத்தின் கையை பலப்படுத்தி இதை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு உதவியாக அவர்களுக்கு பலம் அளிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு இந்த மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன்.

10-40 a.m

**Sri M. P. SARATHI** : சட்ட மன்ற கனம் தலைவி அவர்களே, இந்த விற்பனை வரி மசோதாவின் மீது என்னுடைய கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். முக்கியமாக நமது சென்னை ராஜ்யத்திலேயே

விற்பனை வரிதான் அதிகப்படியான வருமானத்தைக் கொடுக்கிறது என்று சொல்லப்படுகிறது. இது எல்லோரும் அறிந்த விஷயம் தான். இருந்த போதிலும் இதைக் கொண்டுவருவதற்கு சர்க்காருடைய நோக்கம், சர்க்காருடைய நிதியை அதிகப்படுத்த வேண்டுமென்பதற்காகவும், சர்க்காருக்கும் வரகூடிய பணம் போதவில்லை அதை அதிகப்படுத்த வேண்டுமென்ற காரணத்தினாலோ, இந்தப் பெயரில் இந்த சட்ட மன்றத்திற்கு இந்த திருத்த மசோதாவை கனம் மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்.

குறிப்பாக வியாபாரிகள் ஒவ்வொரு மாவட்டத்திலும் மாநாடுகள் கூட்டி ஒவ்வொரு வியாபார சங்கங்கள் மூலமாகவும், பொது மக்கள் மூலமாகவும் ஒரு முனை விற்பனை வரிதான் வேண்டும் என்று பல தீர்மானங்கள் போட்டு சர்க்காருக்கு அனுப்பி இருக்கிறார்கள். அதன் பயனாக டாக்டர் லோகநாதன் அவர்களை இதை பரிசீலனை செய்யச்சொல்லி அவருடைய அறிக்கையின் பேரில் ஒரு முனை விற்பனை வரி கொண்டு வரப்பட்டிருக்கிறது. அந்த முறையில் இந்த திருத்த மசோதாவைக்கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கிற முறையானது இது அவ்வளவு சிறந்ததாக இல்லை. இப்பொழுது கொண்டு வந்திருப்பதைப் பார்த்தால் சிறு வியாபாரிகளுக்கு சாதகமுள்ளதாகவே இல்லை. சிறு வியாபாரிகள் 25 ஆயிரம் ரூபாய்க்கு மேல் கொண்டு வியாபாரம் செய்தால் தான் அவர்களுக்கு விற்பனை வரி விதிக்கப்படும் என்று பலர் பலமாக சர்க்காருக்கு எடுத்துச் சொல்லியும், சட்ட மன்றத்தில் பலர் வலியுறுத்திச் சொல்லியும் கூட இப்பொழுது பத்தாயிரத்திற்கு மேற்பட்டால் வரி விதிக்கப்படும் என்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். ரூ. 7,500-க்கு மேற்பட்டாலேயே வரி உண்டு என்று தோன்றுகிறது. இப்படிப்பட்ட ஒரு சிரமத்தையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது சிறு சிறு வியாபாரிகளுக்கு எவ்வளவோ தொல்லைகளை உண்டாக்கும். முக்கியமாக பத்தாயிரம் முதற்கொண்டு இருபத்தி ஐயாயிரம் ரூபாய் வரையில் விற்பனை செய்தால் அவர்களுக்கு வரி இல்லை என்றும் அவருக்கு லைசென்சு இருக்கவேண்டும் என்று இருந்திருந்தால் எவ்வளவு சிறந்ததாக இருக்கும் என்பதை சர்க்கார் யோசிக்க வேண்டும். ஒரு முனை வரி என்று பெயர் வைத்து இந்தச் சட்டத்தைக் கொண்டு வருவதால் என்ன நிலைமை இருக்கும் என்பதை சர்க்கார் யோசித்துப் பார்க்க வேண்டும். சில சரக்குகளுக்கு மூன்று சத விகிதமும், சில சரக்குகளுக்கு இரண்டு சத விகிதமும், சில சரக்குகளுக்கு ஒரு சத விகிதம் என்றும் விற்பனை வரி போடப்பட்டிருக்கிறது. ரூ. 25,000-க்கு மேல் விற்பனை செய்யக்கூடிய வியாபாரிகள் கணக்கு வைத்துக்கொண்டு வரி கொடுக்க வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு ஒரு முனை வரி என்று பெயரைச் சூட்டி வசூலிக்கப்படுகிறது. இது எந்த நிலைமைக்கு வியாபாரிகளைக் கொண்டு போய் விடும் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். இப்படிப்பட்ட நிலைமையைப் பார்த்தால் வியாபாரிகள் மேலும் மேலும் கீழே மட்டம் தட்டுவதாகத்தான் ஆகும். அந்த நிலைமைக்கு சர்க்கார் இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். என்று நான் உணருகிறேன்.

அடுத்தபடியாக, மைசூர், கேரளா போன்ற ராஜ்யங்களில் உணவுப் பொருள்களுக்கு விற்பனை வரியே கிடையாது. ஆனால் இங்கே போட்டிருக்கிறார்கள். அதைப் பார்க்கும்போது டாக்டர் லோகநாதன் அவர்கள் கூட உணவுப்பொருள்களுக்கு அரை சத விகிதம் வரி போதும் என்று சொல்லி இருக்கும்போது ஒரு சத விகிதம் வரி போட வேண்டும் என்று கமிட்டியார் தீர்மானித்திருக்கிறார்கள். ஆகவே உண்மையிலேயே உணவுப்பொருள்கள் விஷயத்திலாவது இந்த ஒரு சத விகிதத்தை எடுத்து விட்டால் உண்மையிலேயே நன்றாக இருக்கும். முக்கியமாக நமது பழம் பெரும் தலைவர் ஸ்ரீ எ. வேதரத்னம் அவர்கள் குறிப்பிட்டது போல மாகாத்மா காந்தி அவர்களுடைய மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு ஏற்கெனவே போடப்பட்ட இந்த விற்பனை வரியானது இப்பொழுது எவ்வளவோ வருமானத்தைக் கொடுக்கிறது. அதன் வாயிலாக எவ்வளவோ குடும்பங்கள் காப்பாற்றப்பட்டன என்றும் சொல்லப்பட்டது. ஆனால் இப்பொழுது போடப்போகும் வரியினால் எவ்வளவோ வியாபாரிகளுடைய குடும்

பங்கள் நசுக்கப்படப்போகின்றன என்பது நன்ருகத் தெரியும். அவர்களை நசுக்குவதற்கு என்று கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மசோதா அவ்வளவு நன்மையாக இல்லை, சிறந்தது இல்லை. இதைக் கண்டால் மகாத்மா காந்தி அவர்கள் ஒப்புக்கொள்வாரா என்பதையும் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இப்படி வரி போடுவதனல் அவருக்கு மதிப்புக் கொடுத்ததாக ஆகுமா என்பதை இந்த நேரத்தில் நான் குறிப்பிடாமல் இருக்க முடியாது. சாதாரணமாக வெற்றிலை பாக்கு விற்ருல் அதற்கு வரி என்று சொல்லப்படுகிறது. வெற்றிலை பாக்கு வாங்குவது போல் ஒரு பைசா வரி கொடுக்கப்போகிருர்கள் என்று சொன்னது இப்பொழுது இரண்டு பைசாக்களாகி அது மாகாணம் பூராவிலும் அதிகப்படியான வருமானத்தைக்கொடுக்கிறது. இதன் மூலம் மொத்தத்தில் பதினைந்து கோடி ரூபாய் வருமானம் வருகிறது என்பதையும் நாம் உணர வேண்டும்.

சாதாரணமாக இப்பொழுது உணவு உற்பத்தி அதிகரிக்க வேண்டும் என்று சர்க்கார் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு வேண்டிய திட்டமும் சர்க்காரிடம் இருக்கிறது. உணவு உற்பத்திக்கு முக்கியமாக வேண்டியது உரம். இவைகளுக்கு. அவைகளுக்கு மூன்று சத விகிதம் வரி போடப்பட்டிருக்கிறது. நாம் உணவு உற்பத்தி செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருக்கிற காரணத்திற்காகவாவது உரம், அதன் உற்பத்தி சாமான் முதலியவைகளுக்கு வரி விதிக்காமல் இருக்கும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு முன்னால் கெட்டுப்போகக்கூடிய வஸ்துக்களாகியவற்றிற்கு வரி கிடையாது. அதாவது காய்கறி முதலியவைகளுக்கு வரி இல்லாமல் இருந்தது. சீக்கிரம் கெட்டுப்போகக்கூடிய வஸ்துக்களுக்கு வரி இல்லாமல் இருந்தது. இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கும் கமிட்டி ரிப்போர்ட்டில் அவைகளுக்கும் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. அப்படி வரி போட வேண்டுமென்று கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. அதற்குக் காரணம் கூறினால், 30 ஆயிரம் ரூபாய்க்கு அதிகமாக வியாபாரம் செய்வதாக இருந்தால் தான் அவர்களை இது பாதிக்கும் என்று சொல்லலாம். சாதாரணமாக கெட்டுப்போகக்கூடிய சாமான்கள் ஒரு லாரி நிறைய வருகிறது என்று வைத்துக்கொண்டால், அதன் மூலம் ஒரு நாளைக்கு 3,000 அல்லது 2,500 ரூபாய் விற்பனை வரலாம் என்று தோன்றலாம். அந்த லாரி முழுவதும் விற்பனையானல் அந்தப் பணம் வரும் என்பதில் சந்தேகம் இல்லை. அதற்கு ஏன் வரி விதிக்கக்கூடாது என்று நினைக்கலாம். ஆனல் அவைகள் ஒரு நாளில் விற்பனையாகாமல் போனல் அவ்வளவும் நஷ்டம் தான். அப்படியே மொத்தமாக கெட்டு விடக்கூடிய நிர்ப்பந்தம் அதற்கு இருக்கிறது. கெட்டு விடக்கூடிய வஸ்துக்களுக்கு லாபம் வருகிறது என்று கருதினலும் கூட அதன் மூலம் அதிகப்படியான நஷ்டமும் வரும் என்பதை கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும். இது எந்த நிலைக்குக் கொண்டு போய் விடும் என்பதை சர்க்காருக்கு எச்சரிக்கை மூலமாக நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக உணவு பொருள்களுக்கு ஒரு சத விகிதம் என்ருல் அதைச் சேர்ந்த பொருள்களாகிய மற்ற மிளகாய், மஞ்சள், கடுகு போன்ற பொருள்களுக்கும் ஒரு சத விகிதம் ஏற்படுத்திஞல் நன்ருக இருக்கும். இவைகளுக்கு எல்லாம் ஏறக்குறைய மூன்று சத விகிதம், இரண்டு சத விகிதம் என்று போடப்பட்டிருக்கிறது. ஆகவே உணவு பொருள்கள் என்று சொல்லக்கூடியவைகளுக்கு எல்லாம் ஒரு சத விகிதம் போட வேண்டும் இல்லாவிட்டால் அவைகளுக்கு வரியே இல்லாமல் எடுத்து விட வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

பால், பால் போன்ற பண்டங்களுக்கு வரி உண்டு என்று சொல்லுகிருர்கள். மற்ற உணவு பொருள்களுக்கு மூன்று சத விகிதம் என்று இருப்பதை ஒரு சத விகிதம் என்று ஏற்படுத்த வேண்டும். பொது மக்களுக்கும் சர்க்காருக்கும் ஒரு முனை வரி என்ருல் அது விளங்காமல் இருக்கிறது. அதை நல்ல முறையில் விளக்க வேண்டும். ஒரு முனை வரியால் லாபம் உண்டு என்ற ஒரு காரணத்தைக் காட்டியாவது அவர்களுக்கு சரியானபடி விளங்கும்படியாக ஒரு அறிக்கை விடவேண்டும்

என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சிறு சிறு வியாபாரிகளுக்கு அவ்விதம் அனுப்ப வேண்டும் என்று கேட்டுக்கொண்டு நான் என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI A. SAMUEL NADAR : கனம் சட்ட மன்றத் தலைவி அவர்களே, இந்த மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். 1939-வது வருஷத்தில் விற்பனை வரி 100-க்கு ½ விகிதம் என்று சாதாரண முறையில் ஆரம்பிக்கப்பட்டது. நாளா வட்டத்தில் கோர்ட்டு தீர்ப்புகள் சட்டத்திற்கு விரோதமாய் இருந்ததாலும் வியாபாரிகளுக்கு இருந்த சிரமங்களை அனுசரித்தும் விற்பனை வரி சட்டத்தை திருத்தி அமைக்க வேண்டி ஏற்பட்டது. நம் முன்னால் இருக்கும் மசோதா பெரும்பாலும் வியாபாரிகளுக்குள்ள தொல்லைகளை நீக்கும் என்று எதிர்பார்க்கிறேன். பல பொருள்களுக்கு ஒரு முனை வரி வசூலிப்பது என்று இம்மசோதா வழி செய்திருக்கிறது. உணவுப் பொருள்களுக்கும், காய்கறி போன்று அழுகும் வஸ்துக்களுக்கும் வரி விலக்குக் கொடுப்பது நல்லது. தூத்துக்குடித் துறைமுகத்திலிருந்து தும்பு, ஈக்கி வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. அது ஒரு குடிசைத் தொழில். உள் நாட்டில் தயார் செய்து வெளி நாடுகளாகிய அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. எனவே அது நமக்கு டாலர் தேடிக் கொடுக்கும் தொழிலாக இருக்கிறது. ஆகையால் அந்தத் தொழில் நசித்து விடாமல் பாதுகாக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு. ஆகவே அத்தொழிலுக்கு விற்பனை வரி விலக்கு அளிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். அந்நிய நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்படும் அந்த ஈகி 12 ரூபாய் ஆகிறது. ஆனால் அதற்குக் கப்பல் கேள்வி 22 ரூபாய் கொடுக்க வேண்டி இருக்கிறது. அதே போல் ஒரு அந்தர் தும்பு 50 ரூபாய் ஆகிறது. கப்பல் கேள்வியோ 20 ரூபாய் கொடுக்க வேண்டி இருக்கிறது. இதைக் கொடுத்து வெளி நாட்டோடு போட்டி போட வேண்டி இருக்கிறது. இப்பொழுது சில காலமாக ஆப்பிரிக்காவிலிருந்தும் தும்பு, ஈக்கி தயார் செய்து குறைந்த விலைக்கு வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். சைனாவில் இருந்தும் ஒரு வகை தும்பு, ஈக்கி தயார் செய்து குறைந்த விலைக்கு விற்கிறார்கள். அந்த அந்நிய நாட்டு சர்க்காரோடு போட்டி போட்டு வியாபாரம் செய்து, டாலர் தேடித்தரும் இந்தக் குடிசைத் தொழில் நசித்து விடாமல் காப்பது அரசாங்கத்தின் பொறுப்பு.

ப்ளாஸ்டிக்கிலும் ஒருவித சாமான்கள் செய்யப்பட்டு, தும்புத் தொழிலைப் பாதிக்கும் அளவுக்கு அந்நிய நாட்டுச் சரக்கு இங்கே வந்து மிக மலிவாக விற்பனை செய்யப்பட்டு வருகிறது. இவைகளின் போட்டியிலிருந்து நம்முடைய குடிசைத் தொழில் நசித்து விடாமல் பாதுகாக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப்பு. ஆகவே இத்தொழில்களுக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இந்தத் தும்பானது பனையிலுள்ள மட்டையைச் சற்றி திரித்து எடுப்பதாகும். இந்தத் தும்பு ஈக்கியானது சில காலத்துக்கு முன்னால் சென்னையில் இருந்தே ஏற்றுமதி செய்யப்பட்டது. ஆந்திராவில் இருந்தும் ஏற்றுமதி செய்யப்பட்டது. இப்பொழுது சென்னையில் இருந்து ஏற்றுமதியை நிறுத்தி விட்டார்கள். ஆந்திராவிலும் நிறுத்தி விட்டார்கள். அந்தத் தொழில் நசித்து வருகிறது. இப்பொழுது தூத்துக்குடி துறைமுகத்தில் இருந்து மட்டுந்தான் ஏற்றுமது செய்யப்படுகிறது. சுமார் மூவாயிரம் பேர் இந்தத் தும்பு ஈக்கியை ஸைஸ் பண்ணி சாயம் காய்ச்சும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். இந்தத் தும்பை உற்பத்தி பண்ணும் தொழிலில் பல ஆயிரக் கணக்கானவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட இந்தக் குடிசைத் தொழிலுக்கு, அந்நிய நாட்டிலிருந்து டாலரைப் பெற்றுக் கொடுக்கக் கூடிய இந்தத் தொழிலுக்கு வரி விலக்கு அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI M. S. SELVARAJAN : சட்ட மன்ற கனம் தலைவி அவர்களே, பரிசீலனையில் இருக்கக் கூடிய விற்பனை வரிச் சட்டம் சம்பந்தமாக எனக்குத் தோன்றிய சில அபிப்பிராயங்களைத் தெரிவிக்க ஆசைப்படுகிறேன். இந்தச் சட்ட மன்றத்தில், இந்த விற்பனை வரியினுடைய அவசி

யம், அதன் வழியில் இருக்கக்கூடிய சிரமங்கள் ஆகியவைகளைப் பற்றியெல்லாம் இதற்கு முன் பரிசீலிக்கப்பட்டிருக்கிறது. கடந்த 20 வருஷ காலத்திற்கு முன்பு இந்த தேசத்தில் முதல் முதலாக இந்த ராஜ்யத்தில் தான் இந்த வரி பரிட்சிக்கப்பட்டது. அன்றையதினம் ஆரம்பிக்கப்பட்ட போது சாதாரண நிலையில் இந்த வரி ஆரம்பிக்கப்பட்டது. கனம் ராஜாஜி அவர்கள் கொண்டு வந்தபோது 100 ரூபாய்க்கு அரை ரூபாய் விதித்தால் சில கோடிக்கணக்கான ரூபாய் வருமென்று கணக்கிடப்பட்டது. கனம் வேதரத்தினம் அவர்கள் குறிப்பிட்டது போல மதுவிலக்கை இந்த ராஜ்யத்தில் கொண்டு வந்ததன் விளைவாக ஏற்பட்ட பள்ளத்தை ஈடு செய்ய ஏற்படுத்தப்பட்ட இந்த வரி காலக்கிரமத்தில் உயர்ந்து, இன்றையதினம் இந்த ராஜ்யத்தின் ஜீவாதாரமான வரியாகி ஏராளமான பணத்தைக் கொடுக்கக் கூடிய நிலைக்கு உயர்ந்திருக்கிறது. இந்த வரி கொடுக்கக்கூடிய தொகையானது காலக் கிரமத்தில் வளர்ந்து இருப்பதை நாம் பார்க்கலாம். 20 வருஷத்திற்கு முன்பு இந்த இனத்தில் பத்தாயிரம் ரூபாய் வரை வியாபாரம் செய்யக்கூடியவர்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. அன்றைய தினம் அரை ரூபாய் வரியாக வாங்கி வந்தார்கள். 20 வருஷ காலத்தில் தேசத்தில் பொருள்களின் விலை உயர்வை நினைத்துப் பார்க்கும் போது, அன்றையதினம் 10 ஆயிரம் ரூபாய் வியாபாரம் செய்து வந்த வியாபாரி இன்றையதினம் முப்பதாயிரம் முதல் நாற்பதாயிரம் வரை வியாபாரம் செய்தால்தான் அன்று இருந்த அளவுக்கு வியாபாரம் செய்ய முடியும் என்று எடுத்துக்கொள்ள முடியும். இன்றைய தினம் வளர்ந்து வரக்கூடிய பல தேவைகளையும் நினைத்துப் பார்க்கின்றபோது பத்தாயிரம் என்பது நியாயமான அளவு என்றுதான் சொல்ல வேண்டும். ஐயாயிரத்தில் இருந்து பத்தாயிரத்திற்கு உயர்த்திக் கொடுத்திருப்பது, இந்தப் பொறுக்குக் கமிட்டியானது நடுநிலையில் நின்று மிகவும் ஜாக்கிரதையாகப் பரிசீலனை செய்து பத்தாயிரம் வரை விலக்கு அளிக்கலாம் என்று முடிவு எடுத்திருப்பதாக தெரிகிறது. இந்தப் பிரச்னையிலும் இன்னும் சில இனங்களிலும் பொறுக்குக் கமிட்டியானது எவ்வளவு ஜாக்கிரதையாக முடிவுகள் எடுத்திருக்கிறது என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. வர்த்தகர்கள் நியாயமாக நடக்க முன் வந்தால்தான் இந்த வரி இனங்களை வசூலிப்பதில் ஏமாற்றம் இல்லாமல் இருக்க முடியும். வர்த்தகர்கள் நேர்மையாக நடக்க முன் வந்தால், அவர்கள் எந்த விதமான அபாயங்களுக்கும் அஞ்ச வேண்டியதில்லை. அதிகாரிகளால் எந்த வித துன்பமும் அவர்களுக்கு ஏற்படாது. வியாபாரிகளும் மக்களும் மனச் சாட்சிக்குச் சரியாக நடந்தால் எல்லாம் சரிவர நடக்கும். மக்களிடம் தாங்கள் வாங்குகிற பொருள்களுக்குக் கட்டாயமாகப் 'பில்' வாங்கித்தான் ஆகவேண்டும் என்ற கடமை உணர்ச்சி ஏற்பட வேண்டும். அதிலே கண்டிப்பு இருக்க வேண்டும்.

SRI S. M. ANNAMALAI : ஆன் எ பாய்ண்ட் ஆப் ஆர்டர். இந்த மன்றத்திலே பத்திரிகை படிக்கலாமா ?

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : அப்படிப் பத்திரிகை படிக்கக்கூடிய நபர் யார் ?

SRI S. M. ANNAMALAI : இப்பொழுது யார் பேசுகிறார்களோ, அவரே தான்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வது தவறான கருத்து. மேஜையின் மேல் வைத்திருக்கக்கூடிய விற்பனை வரி பற்றிய புத்தகத்தைத் தான் அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். விஷயம் தெரியாமல் இப்படிப் பேசுவது சரியல்ல என்பதைக் கனம் அங்கத்தினர் உணரவேண்டும்.

SRI M. S. SELVARAJAN : இப்படி பொறுக்குக் கமிட்டியில் இல கண்டிப்பான ஏற்பாடு செய்திருப்பதைப் பார்க்கிறோம். கணக்கை ஒழுங்காகக் காட்ட முன் வரவில்லையானால் அவர்களுக்குத் தக்க தண்டனை—அபராதம்—விதிக்கத் தக்க அளவுக்கு சட்டம் கடுமையாக்கப் பட்டிருக்கிறது. அதாவது

[Sri M. S. Selvarajan] [11th February 1959

சாதாரணமாக விதிக்கக் கூடிய வரியைக் கூட்டி 1½ மடங்கு அதிகமாகவும் வரி விதிக்க வழி செய்யப்பட்டிருக்கிறது. அவ்வளவு கண்டிப்பு சட்டத்தில் காட்டப்பட்டிருக்கின்றது. அதே சமயத்தில் 4,000 ரூபாய் மேல் வியாபாரம் செய்கிற சிறிய வியாபாரிகளுக்குக் கூடத் தொந்தரவு உண்டாகக்கூடாது என்பதற்காக 7,500 ரூபாய் வரை விலக்கும் கொடுத்து லைசென்ஸ் பெற சலுகை அளித்து சட்டத்தை கடுமையாக்கியிருப்பதைப் பார்க்கிறோம்.

கோர்ட்டுகளுக்கு வழக்குச் செல்லக் கூடிய நிலைமை ஏற்பட்டால் முன்பு வரி விதித்த அதிகாரியே தவறாக வரி விதித்திருந்தாலும் அந்தத் தவறைத் திருத்திக்கொள்வதற்கு ஒரு சந்தர்ப்பம் இருக்க வேண்டுமென்ற
11-00 a.m கருத்தோடு அதே அதிகாரியே மீண்டும் அதைப் பரிசீலனை செய்து முன்பு போட்ட உத்தரவை மாற்றலாம் என்பதற்குச் சட்ட பூர்வமாக வசதி ஏற்படுத்த வேண்டும் என்பது செலக்ட் கமிட்டியார் ஆசை.

வியாபாரிகளுக்கு வரி கொடுப்பதில் ஆர்வக் குறைவு இருக்கிறது என்பதை நான் ஒத்துக்கொள்ளத் தயாராய் இல்லை. சர்க்கார் போடுகிற வரியை சிறிய வியாபாரிகளாக இருந்தாலும் பெரிய வியாபாரிகளாக இருந்தாலும் கொடுப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் வியாபாரத்திலே சாதாரணமாக படிப்பு இல்லாதவர்கள் கூட—கையெழுத்துப் போடத் தெரியாதவர்கள் கூட—கோடிக்கணக்கில் சம்பாதிக்கும் நிலை இருக்கிறது. பெண்களும் கூட வியாபாரத்தில் ஈடுபடுகிற வாய்ப்பு இருக்கிறது. இப்படிப்பட்டவர்களாலே மிகவும் சுலபமாக கணக்கை வைத்துக்கொள்ள முடியாத நிலை இருக்கிற காரணத்தினாலே—அதுவும் செல்வத்தை லட்சுமியாக—பணம் சம்பாதிக்கிற இடத்தை தெய்வீகமாக நினைக்கிற சூழ்நிலையில்—அதிகாரிகள் முரட்டுத்தனமாக உள்ளே நுழைந்து கணக்கு சரியில்லை என்று கண்டபடி தவறாக நடந்து கொள்வதை அவர்கள் விரும்பிவில்லை என்ற ஒரு காரணத்தினால் இதைத் தவிர்க்கவேண்டுமென்பது ஆசை. இது போன்ற நிலைமையைத் தவிர்க்க ஒரே கட்டத்தில் வரி விதிப்பதன் மூலம் தான் சாத்தியமாகும் என்பது வற்புறுத்தப்பட்டது. பெரிய வியாபாரியாக இருந்தாலும், சிறிய வியாபாரியாக இருந்தாலும் ஒரு முனை வரி விதிப்பதன் மூலமாக ஒரு கட்டத்தில் வரி கட்டிவிட்டால் பின்னால் சுலபமாகக் கணக்கு வைக்க வேண்டும் என்கிற கஷ்டம் இல்லாமல் போய்விடும். இந்த ஒரு முனை வரியைக் கொடுப்பதற்கும் யாரும் தயங்கமாட்டார்கள். அதனால் நமது வருமானமும் பாதிக்கப்படாது என்கிற கவலை தான் லோகநாதன் பரிசீலனையிலும், செலக்ட் கமிட்டியின் பரிசீலனையிலும் இந்தச் சட்டத்தை எப்படி உருவாக்கிக் கொடுப்பது என்று நினைக்கிறபோது ஏற்பட்டது.

இந்த அடிப்படையில் இன்றைக்குப் பல்வேறு பொருள்களுக்கு—குறிப்பாக எழுபது, எழுபத்தைந்து பொருள்களுக்கு மேல்—ஒரு முனை விற்பனை வரி விதிப்பது என்பதாக இந்தச் சட்டத்தில் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. அதை ஒரு புறம் வரவேற்கிறபோது மற்றொரு இனத்தில் நாம் மிகவும் ஜாக்கிறதையாக இருக்கவேண்டும் என்பதைப் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

பலமுனை விற்பனை வரி விதிக்கப்படுகிற பல பொருள்களை சிறிய வியாபாரிகளும் சரி, பெரிய வியாபாரிகளும் சரி தங்கள் கடைகளில் விற்கக் கூடும். அதே சமயத்தில் ஒரு முனை விற்பனை வரி விதிக்கக்கூடிய பொருள்களையும் கூட அவர்கள் கடையில் வைத்திருந்து விற்க முடியும். இரண்டுக்கும் அவர்கள் தனித்தனியாக பில் போடவேண்டும். அப்போது தான் வரி இல்லாத இந்த இனத்தில் ஆன வியாபாரமும், வரியோடு கூட அந்தப் பொருள்களின் வியாபாரம் எத்தனை என்பதும் தெரியும். பலபல சிறிய சிறிய வியாபாரிகளால் அது சாத்தியமாகுமா ? கடைகளிலேயே எந்த எந்தப் பொருள்களுக்கு வரி கிடையாது—அதாவது ஒரு முனை வரி விதிக்கக் கூடிய பொருள்களுக்கு சிறு கடைகளில் வரி இல்லையென்றே கூடப் போட்டுவிடலாம்—என்கிற விளம்பர அட்டை போட்டுவிடலாம். இருந்தாலும் இப்படித் தனித்தனியாக பில்போட வேண்டிய தொந்தரவும் இருக்கிறது. சேர்த்துப் போட்டாலும் அதிகாரிகள் இவ்விஷயத்தில் கொஞ்சம் அநுதாபத்தோடு வியாபாரிகளுக்குச் சங்கடம் வராமல் நடந்துகொள்ளவேண்டும்.

[11th February 1959] [Sri M. S. Selvarajan]

அதோடு பட்டணப் பகுதிகளில் எல்லாம் கூட உணவுப் பொருள் களோடு மிகவும் அத்தியாவசியமான தேவையாக இருக்கக் கூடிய கரி, விறகு போன்ற பொருள்களுக்கு ஒரு முனை வரி போட்டிருக்கலாம். அப்படி இருந்ததை மாற்றி அமைத்து பொறுக்குக் கமிட்டியில் என் பல முனையில் குறைந்த விகிதத்தில் வரி விதிக்கக்கூடாது என்று தெரிவித் திருக்கிறார்கள். இதில் எனக்கு அபிப்பிராய பேதம் இருக்கிறது.

இன்றைக்கு ஐயாயிரம் பத்தாயிரம் என்று வியாபாரம் செய்யக் கூடிய பெரிய கடைக்காரர்கள் எல்லாம் நாலாயிரம் ரூபாய்க்கு மேல் வியாபாரம் இடையாது என்று அதிகாரிகளைத் தாஜா பண்ணி வைத்துக் கொண்டு வரி விதிப்பதிலிருந்து விலக்கு வாங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். இந்தப் பொருள்கள் மூலம் மொத்தமாக ஐந்தாறு லட்சத்திற்கு விற்பனை வரி வசூல் ஆகலாம். இவற்றுக்கு ஒரு கட்டத்திலேயே—ரயிலில் இருந்து இறக்குமதி ஆகிறபோதோ, போட்டிலிருந்து இறக்குமதி ஆகிறபோதோ அல்லது லாரியின்மூலமாக வருகிறபோதோ காவல் கட்டத்திலோ முற்றிலும் நூற்றுக்கு நூறு வரி விதிக்கக் கூடிய நிலைமை இருக்கிறது. உணவுப் பொருள்களோடு ஒட்டியே இந்தப் பொருள்களும் மக்களுக்குத் தேவைப் படுகிற அத்தியாவசியப் பொருளாதலால் இவற்றுக்கும் ஒரு முனை விற்பனை விதிப்பதற்கு சர்க்கார் இந்தக் சட்டத்திலாவது பரிசீலனை செய்ய வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

தூத்துக்குடி அங்கத்தினர் குறிப்பிட்ட பொருள்—அது உற்பத்தி செய் யக் கூடிய முறை எல்லாம் எனக்குத் தெரியும். கொளச்சல், காகினடா, தூத்துக்குடியிலிருந்துதான்—முன்பு சென்னை ராஜ்யத்தோடு அந்தப் பகுதிகள் எல்லாம் சேர்ந்திருந்தபோது வெளிநாட்டுக்கு ஏற்றுமதியாகி வந்தது. அந்த ராஜ்யங்கள் எல்லாம் இப்போது பிரிந்து விட்ட பிறகு தூத்துக்குடி ஒன்று தான் இன்றைக்கு நமது சென்னை ராஜ்யத்திலேயே ஒரு இடமாக இந்தப் பொருளை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்து வருகிறது. இது குடிசைத் தொழில். இதில் பல்லாயிரக் கணக்கான மக்கள் ஈடுபடுகிறார்கள். உள்நாட்டில் தயார் செய்யப்படுகிற தும்பு, ராக்கி ஆகிய இவற்றை இன்றையதினம் அமெரிக்காவுக்கும், பிரிட்டனுக்கும் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். வெளிநாட்டு நாணயத்தை இது நமக்குத் தேடிக் கொடுக்கிறது என்பதற்காக இந்தக் குடிசைத் தொழிலுக்கு நம் சர்க்கார் மானியம் கொடுத்து, இதர கருவிகரணங்களையெல்லாம் இனமாக வாங்கிக் கொடுத்து உதவ முன் வரவேண்டியது இருக்க இதற்கு வரி போட முன் வருவது சரியல்ல. இது நம் ராஜ்யத்தில் மாத்திரம் நடக்கிறதொழில் என்கிற காரணத்தினால் மத்திய சர்க்காரும் இதில் அதிக கவனம் செலுத் தாமல் இருந்திருக்கலாம். ஆனால் வருஷத்திற்கு 50 லட்சம் ரூபாய் மதிப்புள்ள டாலர் அன்னிய நாட்டு நாணயம் நமக்குக் கிடைக்கிறது என் பதை நாம் மறந்துவிடுவதற்கில்லை. ஈக்கோடு ஒட்டிய ஓலைக்கு வரி விலக்குக் கொடுக்கிறோம். ஆனால் ஈக்குக்கு தும்புக்கு வரி என்பது சரியல்ல. இதுவரையில் 80 ஆயிரம் ராத்தல்—நாலாயிரம் அந்தர் வெளி நாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்திருக்கிறது. ஆப்ரிக்கா, சைனு போன்ற நாடுகளிலிருந்தும் இன்றையதினம் வெளிநாட்டு மார்க்கெட்டில் நமக்குப் போட்டியாக இந்த ஈக்கு தும்பு வர ஆரம்பித்திருக்கிறது. இந்த சமயத்தில் நாம் நம் நாட்டில் பல்லாயிரம் கணக்கான பேர்கள் ஈடுபட்டிருக்கிற இந்தக் குடிசைத் தொழிலுக்கு கருவிகரணங்களுக்கு, சப்ஸிடி எல்லாம் கொடுத்து ஒரு புறம் உதவி செய்ய முன்வந்திருக்க மறுபுறம் வரிபோட முன் வருவது சரியல்ல. இந்தத் தொழில் நசித்துவிடாமல் நாம் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்தப் பொருளுக்கு ஒரே கட்டத்தில் ஏற்றுமதி செய்யப்படுகிற இடத்தில் வரி கொடுப்பது நியாயம் என்றாலும் 3 சத- விகிதம் அதிகம். சென்ற இரண்டு வருஷங்களில் இந்த இனத்தி லிருந்து 20 ஆயிரம்தான் வந்தது என்றாலும் இந்த வரியைக் குறைத்து ஒரு முனையில் போட்டாலேயே நமக்கு புதிய திட்டப்பட்டி 50 ஆயிரம் ரூபாய் வரையில் வரலாமே தவிர குறையாது. இப்படி இந்த சதாரண ஜனங்கள் எல்லாம் ஈடுபட்டிருக்கிற குடிசைத் தொழிலைக் காப்பதற்கு முன் வராவிட்டால், அம் மக்களுடைய வாழ்வில் மலர்ச்சி என்பதே இருக்காது என்பது என்னுடைய பணிவான குறிப்பு.

இந்த இடத்தில் செலெக்ட் கமிட்டியினர் நெஞ்சத் துணிவோடு மற்றொரு விஷயத்தையும் சொல்லியிருக்கிறார்கள். எல்லா ஸ்தாபனங்களுக்கும் கூட்டுறவு ஸ்தாபனங்களையும் சேர்த்து ஏன் வரி விதிக்கக் கூடாது என் கிறார்கள். கூட்டுறவு ஸ்தாபனங்களைப் பொருத்த வரையில் ஸ்பூன் பீடிங் நிலையில் என்றென்றும் இருக்க வேண்டியதில்லை. சுயமுயற்சியுடன் அவர்களும் மற்றவர்களைப் போலவே வர்த்தக துறையில் ஈடுபடலாம் என்கிற கருத்தும் புலப்படச் செய்திருக்கிறார்கள். நமது தேசத்திலேயே சென்னை ராஜ்யம் தான் கூட்டுறவு இபக்கத்தில் அதிக வளர்ச்சி அடைந் திருக்கிறது. எனினும் நாம் குழந்தைப் பருவத்தில்தான் இருக்கிறோம். ஆகவே எவ்வளவு சலுகை கொடுக்க வேண்டுமோ அவ்வளவு சலுகையும் கூட்டுறவு இபக்கத்திற்குக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன். கூட்டுறவு சங்கங்கள் வளர்ச்சிக்கு முக்கியமாக நடவடிக்கை எடுக்க வேண்டியிருப்பதால் அந்த அளவுக்கு சலுகை கொடுப்பதன் மூலம் நாம் ஓரளவு சங்கங்களை பலப்படுத்த முடியும். சில பொருள் களுக்கு ஒரு முனை வரி விதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு முனை வரியிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் எவ்வளவு இருக்குமோ என்ற சந்தேகத் ஆஸ்பதம் அரசாங்கத்திற்கு இருக்கிறது. வருகிற காலத்தில் அரசாங்கத் திற்கு கொடுக்கக்கூடிய வருமானம் நல்ல முறையிலே வருவதற்கு வியாபாரிகளும் ஒத்துழைக்கவேண்டும். வியாபாரிகள் நியாயமான முறை யிலே வரி செலுத்தி வியாபாரம் செய்து பொது மக்களுக்கு நியாயவிலையில் பொருள்களைக் கொடுக்க வேண்டும். அவ்வாறு வியாபாரம் செய்தால் இதிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் அரசாங்கத்திற்கு சரிவர போய்ச் சேரும். வியாபாரிகளுக்கு எந்த விதமான தொந்தரவும் இல்லாமல்வரி செலுத்த வசதி செய்து கொடுக்க வேண்டும். ஒழுங்காக விற்பனை வரி வசூலானால் சதாரணமாக வேறு எந்த வரியும் விதிக்காமலேயே இந்த விற்பனை வரியிலிருந்து மாத்திரம் 50, 60 கோடி கிடைக்கும். நமது ராஜ்யத்தின் ஒரு வருட வரவு செலவு திட்டத்திற்கு வேண்டிய தொகை இதிலிருந்தே கிடைத்துவிடும். வியாபாரிகளும் அதிகாரிகளும் மிகவும் நல்ல முறையில் நடந்துகொண்டால் அவ்வாறு கிடைககும். ஆகையால் இந்தப் பதுக்கல் வியாபாரிகள் உண்மை கணக்குகளை அதிகாரி களுக்கு சமர்ப்பித்தால், அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பள உயர்வு கொடுப்பதற்கும் அரசாங்கத்திற்கு வருமானமும் வரும். அந்த அளவுக்கு பார்க்கும்போது இதிலே சர்க்கார் பொது ஜனங்கள் வியாபாரிகள் பொறுப் புணர்ச்சியுடன் நடவடிக்கை எடுக்க வேண்டும். நல்ல வியாபாரத்திற்கு அடிப்படைத் தேவை ஸ்திரமான கௌரவம் மிக்க அரசாங்கம். பழ மரங்களுக்கு விதை நட்டால் அதனுடைய முழு பலனை அடைய சிறிது தாமதமும் ஆகலாம். எனினும் பலன் நிச்சயம். அதுபோலவே வர்த்தகர்களும் ராஜ்யத்தின் தொழில் வளர்ச்சியின் பலனை பெறுகின்றனர்.

தவிர வியாபாரிகளிடமிருந்து வரிப்பணத்தை பெற்றுக்கொண்டாலும் அந்தப் பணம் உண்மையாக பொது ஜனங்களிடமிருந்துதான் வருகின்றது. சாதாரணமாக ஒரு வியாபாரி ஒரு தொழிலை 5 ஆயிரம் ரூபாய் முதல் போட்டு ஆரம்பிக்கப்படுகிற இந்த தொழிலுக்கு ஆரம்பித்த பிறகு ராஜ் யத்தின் தொழில் வர்த்தக வளர்ச்சியில் இன்னும் 50 ஆயிரம் போடக்கூடிய வாய்ப்பு ஏற்படுகிறது. ஆதலால் எந்தத் தொழிலுக்கும் ஊக்கமும் வளர்ச்சியும் பொதுஜன ஆதரவும் வேண்டும். இந்த நோக்கத்தோடு நாம் சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டும்.

* Sri M. SELVARAJ : : மதிப்பிற்குறிய சட்டமன்றத் தலைவி அவர்களே, இரண்டு நாட்களாக நடக்கும் விற்பனை வரி திருத்த மசோதா வின் விவாதத்தில் நானும் கலந்துகொண்டு எனது கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன்.

நமது முன் வைக்கப்பட்டிருக்கும் சட்டத்திலே குறிப்பாக உணவுப் பொருள்களுக்கு ஒருசத விகிதம் வரி விதித்திருக்கிறார்கள். பொதுவான உணவுப் பொருள்களுக்கு வரி விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்ற காரணத் தால் நமது அண்டை ராஜ்யமான கேரளத்திலே உணவுப் பொருள்

11th February 1959] [Sri M. Selvaraj]

களுக்கு வரி விலக்கு அளித்திருக்கிறார்கள். அதுபோன்று நம் ராஜ்யத்திலும் உணவுப் பொருள்களுக்கு விதிவிலக்கு அளிக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுதுதான் நம்முடைய மக்க ளின் வாழ்க்கையை உயர்த்த முடியும். இதனால் அரசாங்கத்திற்கு ஏற்படும் வருவாய் குறைவை ஈடு செய்ய சில ஆடம்பரப் பொருள்களின் மீது அதிக வரி விதித்து அதன் மூலம் எந்த அளவு குறைந்திருக்கிறோமோ அந்த அளவு அரசாங்கத்தின் வருமானத்தை உயர்த்திக்கொள்ளலாம்.

1955-வது ஆண்டிலே நமது நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவு திட்டத்தை சமர்ப்பித்து பேசும்போது மீன், மாமிசம், முட்டை போன்ற பண்டங்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்டதாகச் சொன்னார்கள். ஆனால் இந்தத் திருத்த மசோதாவில் அவ்வாறு விதிவிலக்கு அளிக்கப் படவில்லை. முக்கியமாக சில்லறை வியாபாரிகளுக்கு எந்த விதமான பாதுகாப்பும் இந்தச் சட்டத்தில் இருப்பதாகத் தெரியவில்லை. அவர் களுக்கும் வரி விலக்கு அளித்தால்தான் அவர்கள் தங்கள் வியா பாரத்தை நடத்த முடியும். உதாரணமாக புஷ்பம் விற்கும் வியாபாரி களுக்கு இந்த விதிவிலக்கு அளிக்கப்பட வேண்டும். சாதாரணமாக பார்க்கும்போது அவர்கள் கமிஷன் ஏஜண்டாக இருக்கிறார்களே தவிர அவர்கள் முழு வியாபாரிகளாகவேயில்லை. அவர்கள் லைசென்ஸ் வேறு வாங்க வேண்டியிருக்கிறது. ஆகவே இந்த வியாபாரிகளுக்கு இந்தச் சட்டத்தில் பாதுகாப்பு அளித்தால்தான் ஒருவாறு அவர்கள் வியாபாரத்தை நடத்த முடியும். அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் விதத்தில் அவர்களுக்கு போடும் வரி பூராவுமே ரத்து செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுபோன்று உணவுப் பிரச்னையை நாம் தீர்க்க வேண்டுமென்றால், விவசாயிகளின் அன்றாட தேவைகளுக்கு வேண்டிய எரு போன்ற பொருள்களுக்கு மூன்று சத வீதம் வரி விதித்திருக்கிறார்கள், இதற்கு விதி விலக்கு அளிக்கப்படவேண்டும். நமது கட்சித் தோழரான திரு. சாரதி அவர்கள் பேசும்போது கூட புண்ணாக்கு, அமோனியம் சல்பேட் போன்ற விவசாயிகளுக்கு வேண்டிய அன்றாட பொருள்களுக்கு விதிவிலக்கு அளிக் கப்பட வேண்டுமென்று சொன்னார்கள். அப்படி விதிவிலக்கு அளிப்ப தற்கு சாத்தியம் இல்லையென்றால் ஒரு சதவிகிதமாகிலும் வரி விதித்தால் நலமாக இருக்கும் என்று சொல்ல விரும்புகிறேன்.

தவிர வரி வசூலிக்கும் அதிகாரிகள் வியாபாரிகளிடமிருந்து அதிக வரி வசூலிக்கவேண்டுமென்ற காரணத்தால், அவர்களுக்கு அதிகாரம் அளித் திருப்பதால் அவர்கள் வியாபாரிகளை நிர்ப்பந்தப்படுத்தி வரி வசூலிக் கிறார்கள். இதனால் சிறு வியாபாரிகள் மிகவும் பாதிக்கப்பட்டு, பல தொல்லை களுக்காளாகிறார்கள். தவிர இந்த மசோதாவில் அவர்களுக்கு அதிகமான அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதையும் குறைத்து திருத்தி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் வியாபாரிகள் கணக்குப் புஸ்தகங்களை அதிகாரிகள் எடுத்துக்கொண்டு போனால், சீக்கி ரத்தில் திருப்பிக்கொடுப்பதில்லை, மாதக்கணக்கில் வைத்துக்கொள்ளு கிறார்கள். இந்தப் புஸ்தகங்களை அவர்கள் ஒரு மாதகாலம் வைத்துக் கொள்ளலாம் என்று சட்டத்தில் இருக்கிறது. இதனால் வியாபாரிகளுக்கு மிகுந்த தொல்லை ஏற்படுகிறது. ஆகவே அதிகாரிகள் வியாபாரிகளிட மிருந்து எடுத்துக் கொண்டுபோகும் கணக்குப் புஸ்தகங்களை 15 நாட் களுக்குள் திருப்பித் தரவேண்டும் என்ற பாதுகாப்பு இந்தத் திருத்த மசோதாவில் சேர்க்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக வியாபாரிகள் வரி கட்டாமல் ஏமாற்றுவது போன்ற தவறுகள் செய்திருந்தால் அவர்கள் செலுத்தவேண்டிய பணத்தைவிட 1½ பங்கு அதிகமாக தொகை கட்டவேண்டியிருக்கிறது. இது மிகவும் அதிகமான தொகையாகும். இதை அரசாங்கம் குறைக்க ஒரு திருத்தம் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி திருத்தம் கொண்டுவரும்போது வியாபாரிகள் தப்பித்துக்கொள்வதற்கு சந்துபொந்து கள் எதுவும் இல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். 11-20 a.m.

[Sri M. Selvaraj] [11th February 1959

(Mr. Speaker in the Chair.)

குறிப்பாக தென் ஆற்காடு, திருச்சி மாவட்டங்களிலே மணிலாப் பயிர் உற்பத்திசெய்கிறார்கள். சில வியாபாரிகள் அவர்கள் மொத்தமாக வாங்கினால் வரி அதிகமாக கட்டவேண்டுமே என்று 10 ஆயிரம் ரூபாய்க்கு சரக்கு வாங்கிக்கொண்டு போகிறார்கள். அப்படி வாங்கிக்கொண்டுபோய் வரிகொடுக்காமல் ஏமாற்றி விடுகிறார்கள். இம்மாதிரியான வியாபாரிகள் ஏமாற்றாமல் செய்வதற்கு இந்தச் சட்டத்தை திருத்தி அமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். மேலும் அவர்கள் **Sales Tax Verification certificate.** கொண்டுவந்தால்தான் அவர்கள் மணிலாப்பயிர் மார்க்கெட் கமிட்டியில் பயிர் வாங்குவதற்கு தகுதி உடையவர்கள் என்று சட்டத்தை திருத்தி அமைக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் அரசாங்கத்தை ஏமாற்ற முடியாது என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். மார்க்கெட் கமிட்டி " பைலா " வை திருத்த உத்தரவு இட்டால் இதனால் ஓரளவு வருமானம் கிடைக்கும். வரியிலிருந்து தப்பித்துச் செல்ல நினைப்பவர்களிடம் இருந்தும் ஓரளவு வருமானம் கிடைக்கும். அடுத்தபடியாக, பால் பவுடருக்கு இப்பொழுது வரி விதிக்கப் பட்டிருக்கிறது. குறிப்பாக இந்த நாட்டில், சென்னை நகரத்தைப் பொறுத்த மட்டில் கார்ப்பரேஷனில் இருந்தும், மற்ற நகரங்களிலும் ஏழை பள்ளி மாணவர்களுக்கு பால்வினியோகம் செய்யப்படுகிறது. பவுடர் பால்தான் வினியோகம் செய்யப் படுகிறது. ஆகவே அதற்கும் விதி விலக்கு அளிக்க வேண்டும். அதேபோல், மீண்டும் சொல்லிக் கொள்கிறேன், உணவுப் பொருள்களுக்கு கண்டிப்பாக விலக்கு அளிக்க வேண்டுமென்று. ஜவுளிக்கு வரி விலக்கு அளித்திருக்கிறார்கள். " ஹோஸயரி குட்ஸ் " என்றமுறையில் பனியன் செய்யக் கூடிய துணிக்கு இன்று வரி விலக்கு அளித்திருக்கிறார்கள் பனியன்களுக்கு வரி விலக்கு அளிக்கப்படவில்லை. வட ஆற்காடு மாவட்டத்திலும், பிற மாவட்டங்களிலும் அதிகம் பனியன் உற்பத்தி செய்கிறார்கள். பனியன் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையில் ஏகப்பட்ட தொழிலாளர்கள் இருக்கக் கூடிய காரணத்தினால் பனியன் பேரில் நாம் வரி விதிப்போமானால் அது அத்தொழிலில் ஈடுபட்டிருக்கிற தொழிலாளர்களைத்தான் பாதிக்கும். ஆகவே எப்படி ஜவுளிகளுக்கு வரி விலக்கு கொடுக்கப் பட்டிருக்கிறதோ அதேபோன்று பனியன்களுக்கும் வரி விலக்கு அளிக்க வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். குறிப்பாக நான் மேலும், மேலும் கூறிக் கொள்வது, உணவுப் பொருள்களுக்கு வரி விலக்கு அளிக்க வேண்டும். பால், பால் பவுடர், பூ போன்றவைகளுக்கும் வரி விலக்கு அளிக்க வேண்டும். உருளைக்கிழங்கு, பால்பவுடர், இலை, கம்பு, விறகு, கருணைக்கிழங்கு போன்றவைகளுக்கு பூர்ண விலக்கு அளிக்க வேண்டுமென்று நான் மீண்டும் கேட்டுக் கொள்கிறேன். 1939-ல் பூ-க்கு வரி போட்டிருந்தார்கள். 1954-ல் அந்த வரியை எடுத்து விட்டார்கள். மறுபடியும் இந்நேரத்தில் அதைக் கொண்டுவருவது உசிதமல்ல. அது, ஏழை வியாபாரிகளை கண்டிப்பாக பாதிக்கும். ஆக, நம் நாட்டிலுள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தை ஓரளவு போக்குவதற்கும், சிறு தொகைகளை வைத்து வியாபாரம் செய்பவர்களை பாதிக்காமல் இருக்கும் விதத்திலும் அந்தளவு இந்த வரி முறையை திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

* SRI T. T. DANIEL : Mr. Speaker, Sir, while supporting this Bill, I would like to point out some facts for the kind consideration of the Government. Sir, in the Schedule attached to the Bill, it is seen that the Government intend to levy sales tax of three per cent on Palmyrah fibres and stalks. These are articles which are produced only in two places, Kolachel and Tuticorin, in the whole of India. Every year several lakh tons of palmyrah fibres and stalks are exported to Denmark, Norway, Sweden, the United Kingdom and other countries. In this connection I would like to bring to the notice of the Government that during the last two or three years, there has been a fall in the export of palmyrah fibres

11th February 1959] [Sri T. T. Daniel]

and stalks owing to the competition of the Mexican fibre and also the American plastic fibre. The American plastic fibre is slowly gaining ground in the world market and the Mexican fibre is also being produced in larger quantities in Mexico. As a result of the fall in the export, already one or two companies have closed down. I would like to point out that this industry is carried on partly on a factory scale and partly as a cottage industry. Several thousands of men, women and children are engaged in this trade. I think, according to the Report of Dr. Loganathan, there was a suggestion to levy two per cent multi-point tax. But the Government have now altered it to a single point tax of three per cent. That apart, the Government should consider whether by levying this tax of three per cent on these articles, the producers will be affected and whether the trade will come to a standstill. If the producers are seriously affected, certainly they will be closing down their companies one after the other, which will throw out of jobs several thousands of poor labourers. I therefore suggest that palmyra fibres and stalks should be completely exempted from the tax.

Then coming to Kerosene oil, it is seen from the Schedule, that the Government intend to impose a single point tax of five per cent. Sir, kerosene oil is an article which is used only by millions of downtrodden people in the State. Lower and upper middle class and rich people are using electric lights but it is the very poor people who are using kerosene oil for their domestic purposes. So, this tax is imposed mainly on the very poor people of the State. I think, the Hon. Minister will agree that while imposing a tax, we have to take into consideration whether it will affect the very poor people and whether a major portion of it comes from them or from other people. If we look at it from that standpoint, I feel that kerosene oil should be completely exempted from any tax whatsoever.

Now coming to the levy of tax on foodgrains, I would like to point out that rice is the only food of the poor man. If we take into account the total consumption of rice, I am sure, we will find that it is the very very poor people who will be consuming more rice than the other classes of people in the State. The other classes of people consume along with rice some other foodgrains also. So, the levy of tax on rice affects mostly the poor people in the State. As has been correctly pointed out by some hon. Members, it will be better if the Hon. Minister will give us information regarding the estimated amount which the Government hope to get by levying tax on foodgrains like rice, cholam and kambu. If the amount is not very big, I think, this Government should try to find out some other means of filling up the gap instead of levying this tax on rice and cholam which is the main food of the people. If these articles are completely exempted from taxation then the Bill as originally promised by the Government, would be encouraging and helpful and also comprehensive.

[Sri T. T. Daniel] [11th February 1959

Then coming to the principle of exemption and putting up the limit of Rs. 10,000, I agree with the other hon. Members that it would be better if the exemption limit is extended from Rs. 10,000 to at least Rs. 20,000. The compounding amount also should be

11-30 a.m. increased correspondingly from Rs. 25,000 to Rs. 40,000.

Now I would like to point out that there is some sort of fear in the minds of the merchant class that they may be unnecessarily harassed by the officers who are collecting this tax. The Government should separately take note of these misapprehensions that are prevailing among the merchant class and try their level best to see that the provisions of the Bill are not unnecessarily used for harassing innocent business people.

* **Sri M. KARUNANITHI** : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த மன்றத்திலே வைக்கப்பட்டுள்ள விற்பனை வரி திருத்த மசோதாவின் பேரில் என்னுடைய கருத்துகள் சிலவற்றை இங்கே கூற விரும்புகிறேன். இந்த வரியின் பெயர் விற்பனை வரி என்று இருந்தாலும், பொதுவாக இந்த வரி பெரும்பாலும் வாங்குபவர்களையே பாதிக்கிற காரணத்தால் வாங்குபவர் வரி என்கின்ற பெயர் சூட்டுகின்ற நிலைமையில் அமைந்திருக்கிறது என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். வரிகளை அதிகமாக போடுவது அல்லது அதிக வரி விதிக்கவேண்டும் என்கின்ற கட்டாயத்துக்கு உட்படுவது சர்க்காருக்கு லாபம் தருகின்ற ஒரு முறை என்று சொல்லப்பட்டாலும், அந்த வரியினால் சர்க்காருக்கு கோடிக்கணக்கில் பணம் கிடைத்தாலும், அதிக வரி விதிப்பின் காரணமாக வளர்கின்ற தீய பண்புகளை எவ்வளவுதான் கோடிக்கணக்கில் செலவழித்தாலும், எந்த முயற்சியினாலும் அகற்ற முடியவில்லை என்பதையும் நாம் நிதர்சனமாக உணர்கிறோம். விற்பனை வரி இலாகாதான் பொதுவாக சர்க்காரின் மற்ற எல்லா இலாக்காக்களையும் விட சிறு வியாபாரிகளையும், மற்ற வியாபாரிகளையும் பயமுறுத்திக்கொண்டிருக்கிற இலாகா என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். உதாரணமாகப் பார்ப்போமானால், சர்க்காருடைய துணை நிதிகளான சிறு சேமிப்பு திட்டம் போன்ற நிதித் தேவைக்கு மற்ற எந்த இலாகாவினரும் சாதித்து காட்டக்கூடிய அளவுக்கு அதிகமாக, ரெவின்யூ இலாகா போன்ற இலாகாவினர் சேகரிக்கக்கூடிய தொகையை விட அதிகமான தொகையை விற்பனை வரி இலாகாவினர் தர முடிந்திருக்கிறது. அதற்கான காரணம் விற்பனை வரி இலாகாவில் இருக்கும் அதிகாரிகளிடம் சிறு சிறு வியாபாரிகள் அந்த அளவுக்கு பயம் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தான் அதிகமான மிரட்டலுக்கும், அதிக பயத்திற்கும் உள்ளாகியிருக்கிறார்கள் என்பதை எனக்கு முன்னால் இந்த மன்றத்தில் பேசிய பல அங்கத்தினர்கள் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். அந்த பயத்தின் காரணமாகத்தான் சர்க்காருடைய துணை நிதித் தேவையை மற்ற எந்த இலாகாவினர் சாதித்துத் தரமுடியாத அளவிற்கு இந்த விற்பனை வரி இலாகாவினர் சாதித்து தர இயலுகிறது. விற்பனை வரி இலாகா அதிகாரிகள் வருகின்ற நேரத்தில், அவர்களுடைய கணக்குகளை சரியாக வைத்துக்கொள்ள இயலாதவர்களும், வைக்காமல் இருந்து விட்டவர்களும், எந்த விதத்தில் தங்களை சமாளித்துக்கொள்ளுவது என்று சிந்திக்கின்ற நேரத்தில் விற்பனை வரி இலாகா அதிகாரிகளை புராணங்களிலே கூறப்படுகின்ற எமதர்மர்களைப் போலவே எண்ணி சிறு சிறு வியாபாரிகள் அஞ்சிச் சாகின்றார்கள். புராணங்களிலே வருகின்ற எமதர்மர்களைப்போல ஒரு சில விற்பனை வரி இலாகா அதிகாரிகள் வருகின்ற நேரத்தில் மார்க்கண்டேயர் நிலைமையில் உள்ள அந்த வியாபாரிகள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளுவதற்கு லஞ்சம் என்கின்ற சிவலிங்கத்தைத் தான் கட்டிப் பிடித்துக்கொள்ள வேண்டிய நிலைக்கு ஆளாகிறார்கள். லஞ்சம் என்கிற சிவலிங்கம் மார்க்கண்டேயரின் நிலையிலுள்ள வியாபாரிகளை சில சில நேரங்களில் காப்பாற்றுகிறது. பல பல நேரங்களில் அவர்

களையும் இவர்களையும் சேர்த்து பெரிய அதிகாரிகளுக்கும், சர்க்காருக்கும் காட்டிக் கொடுக்கிறது. அப்படி காட்டிக்கொடுக்கின்ற நேரத்தில் நல்ல நடவடிக்கைகளை அந்த அதிகாரிகள் மீது எடுக்கவேண்டுமென்பதையும் கனம் அமைச்சர் அவர்களுக்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

விற்பனை வரி திருத்த மசோதாவின் பேரில் எனக்கு முன்பு பேசிய அத்தனை அங்கத்தினர்களும் அன்னிய மாநிலங்களான கேரளத்திலும், மைசூரிலும், உணவுப் பண்டங்களின் மீது வரி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை உன்னிப்பாக சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். இந்த மாநிலமும் அதைப் பின்பற்றியே அதே முறையில் தொடர்ந்து உணவுப் பண்டங்களின் மீது இருக்கிற வரியை விலக்கவேண்டுமென்று நான் மிகமிக அக்கரையோடு கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். உணவுப் பொருள்களின் மீது இருக்கிற வரியை நீக்கவேண்டுமென்று கூறுவது போலவே, ஜவுளிக்கு வரி விலக்கு அளிக்கப்படுவது போல, பனியன்களுக்கும் வரி விலக்கு அளிக்கவேண்டும் என்று எனக்கு முன்பு பேசிய நண்பர் செல்வராஜ் அவர்கள் கூறியதை நானும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். பனியன் தொழில் மிக உயர்ந்த நிலைமையில் உள்ள தொழில் என்றோ, அதிக லாபம் தரக்கூடிய தொழில் என்றோ கருதி அதற்கு அதிக வரி விதித்திருப்பார்களேயானால், அது உள்ளபடியே வருந்தத்தக்க செய்தி என்று நான் குறிப்பிட விரும்புகிறேன். பனியன்களை அணிபவர்கள் பெரும்பாலும் இந்த நாட்டில் ஏழை மக்கள், தொழிலாளிகள், பாட்டாளிகள் இவர்கள்தான் இவர்கள் சட்டை கூட அணிய முடியாத நிலைமையில் இருப்பதால் பனியனையே தங்கள் மேலாடையாக உபயோகப் படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதை கனம் அமைச்சர் அவர்களும் நன்றாக உணர்ந்திருப்பார்கள். பாட்டாளிகள், தொழிலாளிகள் பேரில் அதிக அக்கரை உண்டு என்ற நிலைமையில் உள்ள அமைச்சர் அவர்கள் இந்த பனியனுக்கு வரி விலக்கு அளிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுபோலவே பூவின்பேரில் போடப்படுகின்ற வரிக்கும் விலக்கு அளிப்பதின் மூலம் பூ வியாபாரிகளின் மகிழ்ச்சியையும், பாராட்டுதலையும் அமைச்சர் அவர்கள் பெற இயலும்.

THE HON. SRI R. VENKATARAMAN : நிறைய மாலை போடுவார்கள் !

SRI M. KARUNANITHI : இல்லாவிட்டால் மாலை போட மறுத்து விடுவார்கள் ; 1939-ம் ஆண்டில் பூவுக்கு வரி இருந்தது. பிறகு அது அழியக்கூடிய பொருள் என்பதற்காக 1954-ல் அந்த வரி விலக்கப்பட்டது என்பதை இங்கே ஞாபகப் படுத்துகிறேன். அழியக் கூடிய பொருள் என்று கருதப்படுகின்ற நிலையில் காய்கறிகள் கூட 2, 3 நாட்கள் இருந்து அழுகும். ஆனால், காலையில் அரும்பி, பகலெல்லாம் போதாகி, மாலையில் மலர்ந்து, மறுநாள் காலையில் வாடக்கூடிய பூவுக்கு அமைச்சர் அவர்கள் தயவு செய்து வரி விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். 1954–55-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை சமர்ப்பித்த கனம் நிதி அமைச்சர் அவர்கள் மாமிசம், மீன், முட்டை, பால் போன்ற பொருள்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது என்பதை மிகப் பூரிப்போடு இந்த மன்றத்திலே எடுத்துச் சொல்லி நாட்டு மக்களின் மகிழ்ச்சியை பெற்றிருக்கிறார்கள். மறுபடியும், அவைகளுக்கு இப்பொழுது வரி விதிக்கப்பட்டிருப்பது எத்தகைய மாற்றத்தின் காரணம் என்பதை என்னால் அறிய முடியவில்லை. நிதி அமைச்சர் அவர்கள் 1954–55 வரவு செலவு திட்டம் சமர்ப்பித்தபோது இருந்த நிலைமையைவிட இப்பொழுது நிலைமை இன்னும் மோசமாகி இருக்கிறதே தவிர, அந் நிலை மாறிவிடவில்லை. ஆகவே, மாமிசம், மீன், முட்டை, பால் போன்ற, அத்தகைய பொருள்களுக்கும். காய்கறி, பழம் போன்ற பொருள்களுக்கும் வரி விலக்கு அளிக்கவேண்டுமென்று நான் மீண்டும் மீண்டும் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு, இறுதியாக பால், மீது பரிவு காட்டுங்கள்

இல்லை வியாபாரிகள் மீது இரக்கம் காட்டுங்கள், கருணைக்கிழங்கு, வியாபாரிகளிடம் கருணை காட்டுங்கள், உருளைக் கிழங்கு வியாபாரிகளின் உள்ளத்தை உருகச் செய்யாதீர்கள், என்று வற்புறுத்த விரும்புகிறேன். ஊட்டிக்குப் போகும் செலவுக் குறைத்துக்கொண்டாவது, நேற்றைய தினம் மாதா கவுடர் அவர்கள் கேட்டுக் கொள்வது போல் உருளைக் கிழங்குக்கு வரி விலக்கு செய்யுங்கள் என்று நான் மீண்டும் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri M. R. KANDASWAMI MUDALIYAR:** கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இப்பொழுது இங்கு கொண்டு வரப் பட்டிருக்கிற விற்பனை வரி திருத்த மசோதாவை வரவேற்று ஒரு சில வார்த்தைகளைப் பேச முன் வந்திருக்கிறேன். இதற்கு முன் இந்தத் திருத்த மசோதாவின் பேரில் பல அங்கத்தினர்கள் பல கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார்கள். அதிலே நேற்றைய தினம் பேசிய நண்பர் தேவர் அவர்கள் கூட பழம், காய்கறி, பூ இவைகளுக்கெல்லாம் வரி விதிப்பது சரியான முறையல்ல, இவைகளுக்குப் பூரணமாக வரி விலக்கு அளிக்க வேண்டும் இவைகளுக்கு வரி விதிப்பது முற்றிலும் நியாயமல்ல என்று சொன்னார்கள். அதைப் போலவே பல துறைகளிலும் சொல்லுகிறார்கள். இந்த விற்பனை வரியானது நமது நாட்டில் மாத்திரம் அல்ல, ஒவ்வொரு இடத்தில் எந்தெந்தப் பகுதியில் அந்த வரியைப் போட்டு, வசூல் செய்யக்கூடிய சாத்தியக் கூறுகள் இருக்கின்றனவோ அந்த இடங்களிலெல்லாம் இதை விதிக்க வேண்டியிருக்கிறது. கேரளாவில் இல்லை, அல்லது மற்ற ராஜ்யத்தில் இருப்பதினால் நாம் வரியை விட்டுவிடவேண்டும் அல்லது வரியை விதிக்கவேண்டும் என்பது அவசியமில்லை.

அந்த ராஜ்யங்களில் ஒரு வேளை தவறுதலாக செய்திருக்கலாம், அல்லது முன்னேற்றகரமாக செய்திருக்கலாம், அதே போன்று நம் ராஜ்யத்திலும் செய்ய வேண்டும் என்பது அவசியமில்லை. நம்முடைய ராஜ்யத்தில் எந்த எந்த வகைகளில் நமது பொருளாதார நிலையை உயர்த்தி, எந்த வகையில் மக்களுக்கு நன்மை செய்ய முடியும் என்பதை நாம் பார்க்க வேண்டியிருக்கிறது. மக்களுக்கு வேண்டிய பல வசதிகளைச் செய்யவேண்டுமானால் பல திட்டங்களை போட வேண்டியிருக்கிறது. அதற்காக பணம் தேவையாக இருக்கிறது. அதற்காகத்தான் இம்மாதிரி வரிகள் போட வேண்டிய நிலை ஏற்படுகின்றது. மேலும் இவ் வரிகளின் மூலமாக நமக்கு பல கோடி ரூபாய்கள் வருமானம் வருகிறது. இதைப் பற்றி பேசிய பல அங்கத்தினர்களும், இப்போது பேசிய கனம் அங்கத்தினர் அவர்களும் ஏழைகள் உபயோகிக்கக்கூடிய பொருள்கள் மீது வரிகள் போடுவது என்பது மிகவும் தவறு என்று இன்றைக்கு நாட்டில் எந்தெந்த பொருட்களின் மீதெல்லாம் வரி போடப் பட்டிருக்கின்றதோ அந்த பொருள்கள் எல்லாம் ஏழைகளாலும் பணக்காரர்களாலும் உபயோகப்படுத்தப்பட்டு தான் வருகின்றது. அப்படியிருக்கும்போது ஏழைகள் உபயோகிக்கின்ற பொருட்களுக்கு வரிகள் போடக் கூடாது என்று சொன்னால் அது எந்தவகையில் பொறுத்தமாயிருக்கும் என்பதை நாம் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கு வரி போடப் பட்டிருக்கின்ற பொருள்களான பூ, கிழங்கு வகைகள், காய் கறிகள், வேஷ்டிகள், முதலியவை எல்லாம் ஏழைகளும் பணக்காரர்களும் உபயோகப் படுத்தக்கூடிய பொருள்கள் தான். இதற்கு முன்னால் மில் துணிக்கு வரி போட வேண்டும் என்று சொன்னபோதும், இதனால் ஏழைகள் மிக கஷ்டப்படுவார்கள், ஆகவே இதற்கு வரி போடக்கூடாது என்று சொல்லப் பட்டது. இவ்விதம் ஏழைகளை பாதிக்கின்ற பொருட்களுக்கு வரி விதிக்கக் கூடாது என்று சொல்லுகின்ற சமயத்தில் வேறு இன்னின்ன பொருட்களுக்கு வரிகளை போட்டு சரிக்கட்டிக் கொள்ளலாம் என்று சொன்னால் அதை ஏற்றுக்கொள்ளலாம். அந்த விதத்தில் யாரும் சொல்லக்காணோம். எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் பேசுகின்ற சமயத்தில் ஏழைகளை பாதிக்கின்ற பொருள்களுக்கு வரி விதிக்காமல் ஏழைகளை பாதிக்காத மற்றொரு பொருளின் மீது வரியை போடுங்கள் என்று சொல்வார்களேயானால் அது நல்ல யோசனையாக இருக்கும். அவ்விதம் யாரும் சொல்லவில்லை.

11th February 1959] [Sri M. R. Kandaswami Mudaliyar]

ஆகவே இந்த வரிகள் அத்தனையும் எப்படி விதிக்கலாம் என்பதை பற்றி மந்திரிமார்களும், இதற்காகப் போடப்பட்டிருந்த கமிட்டியும் நன்றாக ஆலோசனை செய்து இந்த திருத்தங்கள் எல்லாம் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகவே இதை நாம் வரவேற்கவேண்டியது தான். சில விஷயங்களைப் பற்றி கனம் அங்கத்தினர் தேவர் அவர்கள் பேசினார்கள், அதாவது தினம் ஒன்றுக்கு 250 ரூபாய்க்கு ஒரு பெண் அம்மையார் காய்கறி வியாபாரம் செய்கின்றார்கள். அவர்களுக்கு இதற்காக கணக்குகள் எல்லாம் வைத்துச் கொள்ள முடியுமா என்றும், இவ்விதம் வியாபாரம் செய்கின்ற பெண்களுக்கு இதனால் அதிக தொந்தரவு ஏற்படும். ஆகவே பெண்கள் என்கின்ற முறையிலாவது காய்கறிகளுக்கு இதிலிருந்து விதிவிலக்கு அளிக்க வேண்டும் , என்று கூறினார்கள், இவ்விதம் தினசரி 250 ரூபாய்க்கு காய்கறிகள் விற்பனை செய்வதில் தினம் 2½ ரூபாய்தான் லாபம் கிடைக்கிறது என்றும் சொன்னார்கள். 250 ரூபாய்க்கு வியாபாரம் செய்கின்ற ஒருவருக்கு தினசரி இரண்டரை ரூபாய்தான் லாபம் கிடைக்கிறது என்று சொன்னால் அதை யாரும் ஒப்புக் கொள்ள முடியாது. தினசரி 250 ரூபாய்க்கு வியாபாரம் நடக்கிறது என்று சொன்னால் மாதம் 7,500 ரூபாய்க்கு வியாபாரம் ஆகிறது என்று கணக்காகிறது. இவ்வளவு வியாபாரம் நடக்கிற ஒரு இடத்தில் கணக்கு வைத்துக் கொள்வதில்லை என்று சொன்னால் அதை நம்புவதற்கில்லை. இவ்விதம் ஆண்டு ஒன்றுக்கு கிட்டத் தட்ட ஒரு லட்ச ரூபாய்க்கு வியாபாரம் நடத்துகிறவர்களிடமிருந்து வரி வசூலிக்கக் கூடாது என்று சொன்னால் இந்த அரசாங்கத்திற்கு வேண்டிய பணத்திற்கு என்ன செய்வது என்பதுதான் தெரியவில்லை. இத்தகைய வியாபாரிகளுக்கு எல்லாம் சலுகை காட்ட வேண்டும் என்று சொன்னால் நமது அரசாங்கத்தால் எந்த விதமான திட்டங்களையும் செய்ய முடியாது. அதே சமயத்தில் அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை என்றால் நமது அரசாங்கம் இத்தனை காலத்தில் என்ன காரியங்களை செய்துவிட்டது என்று வெளியிலும் சொல்லுவார்கள். ஆனால் உண்மையிலே இதனால் பாதிக்கின்ற பொருட்களுக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டியது அவசியம்தான். சாதாரணமாக வருஷத்திற்கு 25 ஆயிரம் ரூபாய்க்கு வியாபாரம் செய்கின்றவர்கள் கணக்கு வைத்திருக்க முடியாது என்று சொன்னால் அதை யாரும் நம்ப முடியாது. இவ்விதம் வியாபாரம் செய்கின்றவர்கள் சரியான கணக்குகள் வைத்து அரசாங்கத்திற்கு வரிகள் கொடுப்பதினால் அவர்களுக்கு எந்த விதமான பாதகமும் ஏற்பட்டு விடாது. ஆகவே இப்படிப்பட்டவர்களுக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டிய அவசியமில்லை என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் காங்கிரஸ்தரப்பில் இருக்கக்கூடிய கனம் அங்கத்தினர் ஒருவர் கூறினார், இம்மாதிரி வரி விதிப்பு வருவதினால் தான் கள்ளமார்க்கட்டும் லஞ்சமும் வருகிறது என்று அந்தக் கருத்து முற்றிலும் தவறு என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். அதே போன்று தான் அரசாங்க சிப்பந்திகளிடத்திலேயும் போதிய சம்பளம் கொடுக்கப்படாததின் காரணமாகத்தான் அவர்களிடையே லஞ்சம் தாண்டவமாடுகிறது என்றும் தெரிவித்தார்கள். இன்றைக்கு 100 ரூபாய் சம்பளம் பெறக்கூடியவருக்கு 150 ரூபாயாக சம்பளத்தை உயர்த்திக் கொடுத்தாலும் லஞ்சம் வாங்குகின்ற பழக்கம் உள்ளவர்களுக்கு அந்த பழக்கம் போகவே போகாது. எப்போதும் நாணயமாக நடந்து கொள்பவர்கள் நம்முடைய பெரியார் வேதாத்தினம் அவர்கள் சொன்னது மாதிரி, அவர்கள் எப்போதும் நாணயமுள்ளவர்களாகவே நடந்து கொள்வார்கள். நாணயமற்றவர்கள் எப்போதும் நாணயமற்றவர்களாகத்தான் நடந்து கொண்டிருப்பார்கள். நாணயமுள்ளவர்கள் எப்போதும் ஒழுக்கமாகவும் மக்களுடைய காரியத்தில் அக்கரையோடு இருந்து தான் வேலை செய்து கொண்டிருப்பார்கள். ஆகவே சம்பளக்குறைவினால் தான் லஞ்சப் பழக்கம் ஏற்படுகிறது என்று சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது. அவ்விதம் பார்த்தால் இன்றைக்கு மாதம் 1,000 ரூபாய், 1,500 ரூபாய் என்று சம்பளம் வாங்குகின்ற எல்லா அதிகாரிகளும் நாணயமாகவும் ஒழுக்கமாகவும் நடக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. அவர்களிடத்தி

லேயும் பல தவறுகள் இருக்கத்தான் செய்கின்றன. லஞ்சப் பழக்கம், ஏற்படுவதற்கு காரணம், தன்னலத்தை கருதி பேராசைப்பட்டுக்கொண்டு, மக்களின் நலனில் அக்கரை கொள்ளலாமல் இருப்பதுதான் காரணம் என்று சொல்லலாம். தங்களுடைய வருவாயை மாத்திரம் குறிக்கோளாக வைத்துக்கொண்டு மக்களின் நல் வாழ்க்கையைப் பற்றி கவலைப் படாமல் இருக்கின்ற ஒரு சிலர்தான் லஞ்சம் கொடுத்தால் மக்களின் காரியங்களை செய்வோம் என்கின்ற மனநோக்கத்தோடு இருந்து வருகிறார்கள். இதனால் விவசாயிகளும் தொழில் துறையில் இருப்பவர்களும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது. ஆகவே இவர்களுக்கு ஊதியம் போதவில்லை என்ற காரணத்திற்காகத் தான் லஞ்சம் வாங்குகின்றார்கள் என்று சொல்வது அவ்வளவு பொருத்தமல்ல என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். அதே போன்று வரி விதித்திருப்பதினால் தான் பொய் கணக்குகள் வைக்க வேண்டியிருக்கிறது என்றும் கனம் அங்கத்தினர் ஒருவர் சொன்னார். இம்மாதிரி வரி விதிக்கவில்லை என்றால் கணக்கு வைக்க வேண்டிய அவசியமில்லை. ஆகவே உண்மையான கணக்கு பொய்யான கணக்கு என்று சொல்லுவதற்கு இடமே இல்லை. வரி போடாமல் இந்த தேசத்தை நடத்த முடியும் என்று யாரும் சொல்ல முடியாது. ஆகவே வரி போட்டுத்தான் ஆக வேண்டியிருக்கிறது. ஆனால் வியாபாரிகள் எல்லாம் யோக்கியர்களாக இருக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. அதே மாதிரி வியாபாரிகளில் பலர் சரியான விதத்தில் கணக்கு வைத்துக் கொள்பவர்களும் இருக்கிறார்கள். எனக்கு பல வியாபாரிகளிடத்தில் அனுபவமும் தொடர்பும் உண்டு. ஆனால் சில வியாபாரிகள் கணக்குகளை எவ்வளவு தூரத்திற்கு மறைத்து காட்ட முடியுமோ அந்த அளவுக்கு கணக்குகளை மறைத்து வருகிறார்கள். இந்த நிலையில் மூன்று சதமானம் என்றிருப்பதை ஒரு சதமானம் என்று குறைத்தாலும்கூட சரியான முறையில் கணக்குகளை வைத்துக்கொண்டு அரசாங்கத்திற்கு வரி கொடுக்க தயாராகயில்லை. அந்த முறையில் நம்முடைய நாட்டிலுள்ள வியாபாரிகளுக்கு தேசாபிமானம் இல்லை என்றுதான் கூற வேண்டும். இதற்கு காரணம் நம்முடைய நாட்டில் ஒழுக்கமும், தேசாபிமானமும் கெட்டுவரக் கூடிய நிலையில் பல கிளர்ச்சிகளை பலர் நடத்திக்கொண்டிருப்பதுதான் காரணம். ஆகவே பொதுவாக நாட்டில் நல்ல பண்பாடும், தேசாபிமானமும், ஒழுக்கமும் வளரச் செய்வதற்கு எல்லா கட்சிகளும் ஒன்று சேர்ந்து பாடு பட வேண்டும். இதற்கு சட்டசபை அங்கத்தினர்களும் வெளியில் இருக்கின்ற கட்சிகளும் சேர்ந்து ஒரே முகமாக பாடுபட வேண்டும். அதோடு ஒழுக்கத்திற்கு மாறாகவும், நாணயமற்ற முறையில் நடக்கக் கூடிய அதிகாரிகள் பேரில் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். இதிலே சில அதிகாரிகள் தவறு செய்கிறார்கள். உண்மையாகவே சிலர் கணக்குக் காட்டினாலும்—மற்றவர்கள் இரண்டு கணக்குகள் வைத்துத் தவறுகள் செய்வதால், அந்த கண்ணோட்டத்தோடு அவர்களையும் பார்த்து—நியாயமாகக் கணக்குக் காட்டுகின்றவர்கள்மீதும், உண்மையாகக் கணக்குக் காட்டுகின்றவர்கள் மீதும், 50,000 ரூபாய்க்கு வியாபாரம் நடந்திருந்தால், அப்படியே 50,000 ரூபாய்க்கு வியாபாரம் நடந்திருக்கிறது என்று கணக்கில் காண்பித்தாலும், இரண்டு கணக்குகளை வைத்திருப்பவர்களுக்கு 25,000 ரூபாய் சேர்த்துப் போடுவதைப் போலவே அவர்களுக்கும் போடுகிறார்கள். சென்ற வருஷத்தில் நடந்த வியாபாரம் என்ன, இந்த வருஷத்தில் நடந்திருக்கிற வியாபாரம் என்ன, எங்கெங்கே வாங்கியிருக்கிறார்கள், அதற்கெல்லாம் ஒழுங்காக பில்களை வைத்திருக்கிறார்களா என்று பார்க்கும்போது, ஒழுங்காக பில்களை வைத்திருப்பவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாது. அந்த அளவில் இல்லாமல் அதிகாரிகள் இருப்பதால் தான் சரியான கணக்கு வைத்திருப்பவர்கள் கூட ஸேல்ஸ்-டாக்ஸ் என்றதும் பயப்படக் கூடிய நிலையில் இருக்கிறார்கள். கணக்கைத் தவறுதலாக வைத்திருப்பவர்களும், பயப்படுகிறார்கள், கணக்குச் சரியாக இல்லாத காரணத்தினால், நேர்மை இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன். நாம், நேர்மையாக, நியாயமாக, கணக்கு வைத்துக்கொள்ளும் வியாபாரிகளுக்கு நாம் பரிவு காட்டவேண்டியது மிக மிக அவசியம். எவ்வளவுதான் நேர்மையாகக் கணக்குக் கொடுத்தாலும் அதிகாரிகள் அதற்கு இரண்டு மடங்கு வரி போடுவதால்

11th February 1959] [Sri M. R. Kandaswami Mudaliyar]

தான் நாமும் அந்த மாதிரி எழுதி விட வேண்டும், நேர்மைக்குக் காலமில்லை என்று நேர்மையானவர்கள் கூடத் தவருகப் போக இடம் கொடுக்காமல் நல்ல முறையில் பரிசீலித்து உத்தரவு போட்டு, அவர்களுக்கு வீண் தொந்தரவு கொடுக்காமல் இருக்க வேண்டும் என்று அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு இன்னும் சில பொருள்களுக்கு—ஏறக்குறைய ஆடம்பரப் பொருள்களுக்கு—வரி போட்டிருக்கிறோம் 6 ரூபாய் என்று சோப் ஸ்நோ போன்றவைகளுக்கு. இவைகளுக்கு வரி போடுவதால், என்ன நஷ்டம்? பௌடர் முன்பு போட்டுக் கொண்டு இருந்தோமா ? பெண்கள் மஞ்சள் பூசிக் கொண்டிருந்ததற்குப் பதிலாக இப்போது பௌடர் பூசிக் கொள்கிருர்கள். இதன் மீது வரி போடுவதால் நம் நாட்டுக்கு ஏதும் பெரும் நஷ்டம் ஏற்பட்டு விடாது. இதனுல் ஜனங்கள் பாதகம் அடைய மாட்டார்கள். வியாபாரிகளை பாதிக்கிறது இந்த வரி என்று சொல்லுகிருர்களே, எந்த விதத்தில் வியாபாரிகளை பாதிக்கிறது என்று தெரியவில்லை. இந்த வரியைக் கொடுக்கக்கூடியவர் வியாபாரி அல்ல—கொடுக்கக்கூடிய வரிப்பணம் வியாபாரியின் சொந்தப் பணம் அல்ல. பொருள்களை வாங்கக் கூடிய தொழிலாளி கொடுக்கிருன் ; பொருள்களை உபயோகிப்பவர்கள் கொடுக்கிருர்கள்—வியாபாரி கொடுப்பது கிடையாது. அவர்களிடம் வாங்கக் கூடிய வரியை அப்படியே அரசாங்கத்திற்குச் செலுத்தாமல் மிச்சப் படுத்தப் பார்க்கிருர்கள் வியாபாரிகள். வரியைக் கொடுக்க கூடியது ஏழைத் தொழிலாளியோ அல்லது உண்ணக் கூடிய மற்றவர்களோ, விவசாயத் தொழிலாளியோ, அல்லது நெசவுத் தொழிலாளியோ அல்லது ஒரு பொருளை வாங்கி உபயோகிப்பவர்களோ தான். இந்த வரியை ஏழை என்று சொல்லக் கூடியவர்கள் யாரும் ஆட்சேபிப்பது கிடையாது. சாமான்களை வாங்கக்கூடியர்கள் யாரும் ஆட்சேபிப்பது கிடையாது. அவர்களிடத்தில் வரியை வாங்கி அரசாங்கத்திற்குக் கொடுக்கும் வியாபாரிகள் தான் ஆட்சேபிக்கிருர்கள். ஆகவே இந்த வரி முற்றிலும் நியாயமானது, ஒரு சிலருக்குக் கஷ்டம் ஏற்பட்டாலும் கூட, அரசாங்கம் நல்ல கருத்தோடு மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்ற நல்லெண்ணத்தோடு கொண்டு வருவதால், கொஞ்சம் பளுவாக இருந்தாலும் கூட, நாட்டு மக்களுக்கு நல்லது செய்வதற்காக இருப்பதால் இந்த வரியை ஆமோதித்து என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் சபாநாயகர் அவர்களே, சென்னை விற்பனை வரி மசோதாவைப் பற்றி ஒரு சில வார்த்தைகளைக் கூற நான் ஆசைப்படுகிறேன்.

வியாபாரிகள் பல கட்டத்தில் வரி போட்ட போது பாடுபட்டு, அதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டுமென்று பல மாநாடுகளைக் கூடி, பல வியாபாரிகள் எல்லோரும் ஒன்ருகச் சேர்ந்து தூது கோஷ்டி அமைத்து அமைச்சர்களைப் பார்த்து, ஒருவாருக ஒரு கட்டத்தில் பல பொருள்களுக்கு வரி வரக் கூடிய ஒரு வாய்ப்பை பெற்றிருப்பது உண்மையிலேயே போற்றத்தக்கது. பல்லாண்டு காலமாக பல கட்ட வரியினுல் கஷ்டப்பட்ட வியாபாரிகள் இதை எப்படியாவது மாற்ற வேண்டுமென்று கூச்சல் போட்டதை அமைச்சர் அவர்கள் உடனடியாக கவனித்து, சாதாரணமாக அதை விட்டு விடாமல் ஒரு நிபுணரை நியமித்து அதை ஆராய்ச்சி செய்யச் சொல்லி, அவரும் மிகவும் ஜனநாயக ரீதியில் ஊர் ஊராகச் சுற்றி, நேரடியாக வியாபாரிகளைச் சந்தித்து அவர்களுடைய சங்கடங்களையெல்லாம் கேட்டறிந்து, கடைசியில் அழகான ஒரு அறிக்கையைத் தந்தார். அந்த அறிக்கைப் படித் தயாரிக்கப்பட்ட மசோதா இந்தச்சபையினுல் யோசிக்கப்பட்டு இன்னும் ஏதாவது தவறுகள் இருந்தால், அவைகளைச் சீர்திருத்திக்கொள்ள வாய்ப்பு வேண்டுமென்று ஒரு பொறுக்குக் கமிட்டி போட்டு, அந்தப் பொறுக்குக் கமிட்டி நன்ருக யோசனை செய்து, இப்போது இந்தப் பொது விற்பனை வரி மசோதாவை அமைச்சர் அவர்கள் நம் முன் வைத்திருக்கிருர்கள். அப்படி இருந்தும் கூட ஒரு சிலருக்குப் பரிவு காட்டவில்லை, இன்னும் சிலருக்கு இரக்கம் காட்டவில்லை என்று சொல்லப்பட்டால் அதையும் இப்போது சீர்திருத்திக்கொண்டால் நல்லதாக இருக்கும்.

[Srimathi T. N. Anandanayaki] [11th February 1959

பல கட்ட வரி அரசாங்கத்திற்கு நல்லது. ஒரு வியாபாரி வரியை ஒரு கட்டத்திலே ஏமாற்றினாலும், அடுத்த கட்டத்தில் அந்தப் பொருள் மாட்டிக் கொள்ளாமல் இருக்க முடியாது. ஒரு கட்டத்தில் இல்லையென்றாலும், அடுத்த கட்டத்தில் வரி ஏமாற்றப் படுவதைத் தடுக்க வழி இருந்த காரணத்தினால், பல கட்ட வரியை அரசாங்கம் நல்லது என்று எண்ணு கின்றது. ஒரு கட்ட வரி என்று போடும்போது—அதாவது ஒரு முனையில் போடும் போது—அந்த இடத்தில் வரி கொடுக்காமல் வியாபாரி ஏமாற்றி விட்டால் அரசாங்கம் அந்த வரியை இழக்கும் என்ற பயம் இருக்கிறது. காரணம் என்னவென்றால் இப்போது ஒரே கட்டத்தில் போடப் போகிறோம், போடுகிற கட்டத்தில் அரசாங்கம் ஏமாந்து விட்டால், அரசாங்கத்தின் வருமானம் கட்டாயம் குறைந்து போகும். இப்போது ஒரு கட்ட வரி என்று போடும்போது பல கட்டங்களில் போடப்பட்டு வந்த வரியைச் சேர்த்து ஒரு கட்டத்தில் போடப் போகிறோம். அதை விடச் சற்று அதிகமாகவே போடப்போகி றோம். இப்படி அதிகமான வரியை ஒரே கட்டத்தில் போடும்போது அதை வசூலிப்பதில் ஏமாந்து விட்டால் அது அதிகமான நஷ்டத்திற்குக் கொண்டு போய் விடக்கூடும். இப்போது வியாபாரிகள் "கவலைப் படவேண்டாம், காமதேனு கறந்து வந்தது குறைந்து விடாது, என்றும் போலவே இந்த வரியைத் தருகிறோம்" என்று வாக்களித்திருக்கிறார்கள். வேண்டுமானால் ஒரு முறை பரீட்சித்துப் பாருங்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். இன்னும் சில மாகாணங்களில்—பம்பாய் ஒன்று என்று எண்ணுகிறேன்—இதை மாற்றி விட்டு, அரசாங்கத்திற்கு நிம்மதி இல்லை, சரியானபடி நடக்கவில்லையென்று மறுபடியும் மாற்றியிருப்பதாகத் தெரிகிறது. அது அமைச்சருக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். அந்த முறையில் வேறு மாநிலங்களில் செயல்படுவது கஷ்டமாக இருக்கிறது என்று கைவிடப்பட்டிருப்பதாகக் கூறுகிறார்கள். ஆனால், நாம் மிகத் தாராளமாக ஒரு முனை வரியை நம் மாகாணத்தில் புகுத்துகிறோம். இந்த ஒரு முனை வரி நீடிக்கவேண்டுமென்றால் வரி பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும், வருகின்ற வருமானம் பாதிக்கப்படாமல் இருக்கவேண்டும், இதற்குப் பொருப்பு பெரிதும் வியாபார மக்களைச் சார்ந்ததாக இருக்கிறது. அவர்கள் நியாயமாக, நேர்மையாக, இந்த வரியை எப்படியும் கொடுத்தாக வேண்டும் என்ற நல்ல எண்ணத்தோடு கூட அவர்கள் ஒத்துழைத்தால அவர்களுக்கும் சங்கடம் குறையும். அரசாங்கத்துக்கும் அனுகூலமாக இருக்கும். நல்ல திட்டங்களைப் போட்டு அரசாங்கம் வெற்றிபெறவேண்டுமானால், அதற்குப் பொருப்பானது மக்களைச் சேர்ந்தது. வியாபாரிகள் நல்ல முறையில் நேர்மையாக நடந்து கொள்ளவேண்டுமென்பதை இந்தச் சட்ட சபையின் மூலமாக அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஒரு முனை வரி போடுவதால் யாருக்கு எவ்வளவு போடுவது, எந்த வகையிலே குறைப்பது, எதிலே சலுகைகள் காட்டுவது என்ற பிரச்சனைகளையெல்லாம் நிபுணர் லோகநாதன் அவர்களும், இறுதியாக பொறுக்குக் கமிட்டியும் எவ்வளவு நன்றாக ஆலோசனை செய்திருக்கிறார்கள் என்பதை இப்போது கொடுத்திருக்கக்கூடிய அறிக்கையைப் படிக்கையில் தெரிந்து கொள்ளுகிறோம். உணவுப் பொருள்களுக்கு ½ சத வீதம் வரி போடவேண்டும் என்று டாக்டர் லோகநாதன் குறிப்பிட்டிருந்தார். பொறுக்குக் கமிட்டிக்குப் போவதற்கு முன்னால் சட்ட சபையில் கூறினோம், உணவுப் பொருள்களுக்கு மட்டும் வரி வேண்டாம், அது ஏழை மக்களை பாதிக்கக் கூடியதாக இருக்கும், ஆகவே உணவுப் பொருள்களுக்கு மாத்திரம் வரி போடாமல் இருந்தால் நல்லது என்று. என்ன காரணமோ தெரியவில்லை பொறுக்குக் கமிட்டி ஒரு சதவீதமாக அதை அதிகரித்திருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்றே புரியவில்லை. ½ சத வீதம் என்று போட்டதே தப்பு என்று சொன்ன பிறகு, பக்கத்தில் இருக்கக் கூடிய மாகாணங்களில் உணவுப் பொருள்களுக்கு விற்பனை வரி இல்லை என்பதைச் சுட்டிக் காட்டி, பெரிய தொந்தரவைப் பாமர மக்களுக்குத் தருவது போன்று அதை எதிர்க் கட்சிகள் பயன்படுத்திக் கொள்வதற்கு இடம் தருவதாக இருக்கிற காரணத்தினால், முடிந்தால் அதைக் குறைப்பது நல்லது என்று ஆளும் கட்சியின் சார்பாக

11th February 1959] [Srimathi T. N. Anandanayaki]

சொல்லக் கடமைபட்டிருக்கிறேன். அதிலும் ஒரு சலுகை நமக்குத் தந்திருக்கிறார்கள். அதாவது, முப்பதாயிரம் ரூபாய் ஆண்டுக்கு டர்னேவர் இருக்கிறவர்கள் இனிமேல் வரி கொடுத்தால் போதும் என்று. ஒரு சதவிகிதம் என்றிருப்பதை உடனடியாக நீக்க முடியவில்லையென்றால், முப்பதாயிரம் ரூபாய் டர்னேவர் என்றிருப்பதை ஐம்பதாயிரம் ரூபாய் என்ற அளவுக்கு உயர்த்தினால் ஒரு வேளை சிறு சலுகை கிடைக்கலாம் என்று நான் நினைக்கிறேன். 12-00 noon.

அடுத்தபடியாக கம்பவுண்டிங் விஷயம். கணக்கு வழக்கு சரியாக வைக்கத் தெரியாத காரணத்தாலே, கணக்கு வழக்கு சரியான வகையிலே வைத்தாலும், அதிகாரிகளுடைய மனதிற்கு ஏற்ற அளவிலே இல்லாததாலும், கணக்குப் புத்தகங்களை எடுத்துக்கொண்டு போய் நிற்கும் வியாபாரிகளுடைய வேதனையாலும், வரி பளுவைக்கூட வியாபாரிகள் அவ்வளவு பளுவாகக் கருதவில்லை, விற்பனை வரி ட்ரைப்யூனல் அதிகாரிகளிடத்தில் கணக்குப் புத்தகங்களைக் கொண்டுபோய் வைத்து, அவர்கள் எதிரிலே குற்றவாளிகள் மாதிரி கை கட்டி, வாய் புதைத்து நிற்கவேண்டிய நிலையில், எப்பொழுது கணக்கைச் சரி பார்க்கிறேன் என்று அவர்கள் சொல்கிறார்களோ அப்பொழுது கணக்குப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு போகும் நிலைமையும், அப்படி எடுத்துப் போனாலும், பொய்க்கணக்கு என்று சொல்லக்கூடிய நிலைமையும் ஏற்பட்டு மரியாதைக் குறைவான முறையில் சில இடங்களில் அதிகாரிகள் நடத்துவதினால் வியாபாரிகளுடைய மனத்திலே கொந்தளிப்பு ஏற்பட்டு, அதற்குப் பிறகுதான் ஏதாவது முடிவு கட்டவேண்டும் என்று வியாபார வர்க்கம் மிக மிகத் தீவிரமாக வேலை செய்தது. இருந்தபோதிலும், அந்தத் தீமையை முற்றிலும் விலக்க முடியாது. அதிகாரிகளிடத்தில் கணக்குகளைக் காட்டித்தான் ஆகவேண்டும். கணக்குப் புத்தகங்களைச் சரி பார்த்துத்தான் அவர்கள் வரி போட வேண்டிய நிலைமையில் இருப்பதால், சிறிய வியாபாரிகளுடைய தொல்லையைக் குறைப்பதற்கு வழி செய்ய வில்லை. பெரிய வியாபாரிகள் வேண்டுமானால் கணக்குப் பிள்ளைகளைப் போட்டுக்கொள்வார்கள்; அவர்களுக்குச் சாமர்த்தியமாக கணக்கு எழுதிக் கொடுக்கக் கூடிய திறமை உண்டு. ஆகவே, பெரிய வியாபாரிகளுக்குத் தொல்லை இருக்காது. சிறு வியாபாரிகளுக்கு கணக்குப் பிள்ளை போட்டுக்கொள்வதற்கு கையிலே சக்தி இருக்காது. அவர்களுக்கு கணக்கு வைத்துக்கொள்வதற்கேற்ற ஆற்றல் இருக்காது. சிறு வியாபாரிகளுக்கு கணக்கு வைத்துக்கொள்வதிலே அதிகத் தொல்லை இருப்பதால், கம்பவுண்டிங்கை 25 ஆயிரம் ரூபாய்க்கு மேலே சென்று 50 ஆயிரம் ரூபாய்க்கு வைத்தால் நலமாக இருக்கும். அதற்குமேலே வைக்க முடியுமானாலும் மிக நல்லது. 75 ஆயிரம் ரூபாய்க்குக்கூட உயர்த்தலாம்.

விவசாயிகளுக்கு கம்பவுண்டிங் வசதி கொடுத்திருக்கிறோம். அதையும் அதிகப்படுத்தவேண்டுமென்று கோரினோம். கணக்கு வைக்கத் தெரியாத சிறு வியாபாரிகளுக்குத் தொல்லையைக் குறைக்கவேண்டும் என்ற வகையில் கம்பவுண்டிங் வைத்து, "ஆண்டுக்கு இவ்வளவு கொடுத்துவிடு" என்று தொகையை நிர்ணயிப்பது நல்லது என்று நான் யோசனை தெரிவித்துக்கொள்கிறேன். அரசாங்கத்திற்கு வருமானம் குறையாது. அதே சமயத்தில் வியாபாரிகளுக்கும் சற்று தொல்லை குறையும் என்று நான் எண்ணுகிறேன். இதிலும் அமைச்சர் அவர்கள் ரொம்பவும் கவனம் செலுத்துவாரானால், இந்த சட்டம் பிறமாகாணங்களுக்கு வழி காட்டியாக அமையும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

விதிவிலக்கு அளிக்கப்பட்ட ஒரு சில பொருள்களிலே சீமை எண்ணெயும் சேர்க்கப்படவில்லை. சீமை எண்ணெய்க்கு 5 சத வீதம் வரி போட்டிருக்கிறார்கள். முதல் ஷெட்யூலில், 36வது "ஐட்டம்" ஆக அது குறிப்பிடப்பட்டிருக்கிறது. சீமை எண்ணெயை அதிகமாகப் பயன்படுத்துவது ஏழை மக்கள் தான். மின்சாரம் எவ்வளவு விறு விறுப்போடு விஸ்தரிக்கப்பட்டாலும், அது ஏழை மக்கள் வரையில் போவதில்லை. சீமை எண்ணெயை யார் அதிகமாகப் பயன்படுத்துகிறார்கள் என்று சொன்னால், பாட்டாளி மக்கள், தொழிலாளர் வர்க்கம் தான். அவர்களுக்கு அத்தியாவசியமாக தேவைப்படுகிற சீமை எண்ணெய்க்கு வரி போட்டு, அவர்களைப் பாதிக்கும்படிச் செய்வது நல்லது அல்ல. கையினால் நூற்கப்படுகிற நூலுக்

கும், கைத்தறிக்கும் விதிவிலக்கு அளித்திருக்கும் இந்த அரசாங்கம், சீமை எண்ணெய்க்குப் போட்டிருக்கும் வரியையும் எடுத்துவிட்டு, மூன்றாவது அட்டவணையில் இதையும் சேர்த்துவிடுவார்களேயானால் நன்றாக இருக்கும். மண்ணெண்ணெயையும், உணவுப் பொருள்களையும் மூன்றாவது அட்டவணையில் சேர்த்து விடவேண்டும். சாதாரண மக்களுக்கு வரி பளு அதிகமாகத் தோன்றாது என்ற காரணத்தினாலேதான் நான் அதைக் கூற விரும்புகிறேன்.

அது மட்டுமல்ல. மிகச் சிறந்த அம்சங்களை எல்லாம் நம்முடைய அரசாங்கம் இந்த மசோதாவிலே புகுத்தியிருக்கிறது. கணக்கு சரியாக பார்த்து வரி போடாவிட்டால், புதிதான தவறுகளுக்கு இதிலே வாய்ப்பு கொடுத்துவிட்டால், அரசாங்கத்திற்கு சேரவேண்டிய வரித் தொகை வராமல் போய்விடும். அது விஷயத்திலும் அதிகாரிகள் கண்காணிப்புடன் நடந்துகொள்ளவேண்டும்.

அப்பெல்லேட் ட்ரைப்யூனலிலே இருக்கிறவர்கள் “ **not below the rank of a District Judge** ” ஆக இருக்கவேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். நீதி வழங்கும் துறையிலே அனுபவம் உள்ளவராகப் போடுவது நல்லது என்று சொன்னோம். அந்த நல்ல அம்சத்தை ஏற்றிருக்கிறார்கள். இப்படியெல்லாம் சட்டத்தைப் பார்க்கும்போது, பல நல்ல அம்சங்கள் இருக்கின்றன. எங்கோ ஒரு சில தீமைகளும் தொங்கி நிற்கின்றன. அங்குமிங்கும் இருக்கும் சில தீமைகளை நீக்கிவிட்டு, நல்ல அம்சங்களை ஏற்று, இந்தச் சட்டத்தை மிகச் சிறந்த முறையில் அமுலுக்குக் கொண்டுவருவோமானால், இது உண்மையிலேயே மற்ற மாகாணங்களுக்கு வழிகாட்டியாக இருக்கும். ஆனால், இந்தச் சட்டம் வழிகாட்டியாக இருக்கவேண்டுமானால், நான் முன்னாலே சொன்னதுபோன்று, ஒரு முனை வரியின் மூலம் வரும்படியை எதிர்பார்த்திருக்கும் அரசாங்கத்தை எள்ளளவும் ஏமாற்றாமல், தங்களால் இயன்றவரை நல்ல எண்ணத்தோடு அரசாங்கத்தோடு ஒத்துழைத்து, ஒரு முனை விற்பனை வரியை ஒழுங்காகச் செலுத்தி, மாகாணத்திற்குப் பொருளாதாரத் துறையிலே நெருக்கடியைக் கொண்டுவராத நிலையில் வியாபாரிகள் இருப்பார்களேயானால், கட்டாயமாக அவர்கள் தொல்லையும் தீரும் ; நம்முடைய சட்டமும் எடுத்துக்காட்டாக இருக்கும்.

ஏதோ உருளைக் கிழங்குக்கும், கருணைக் கிழங்குக்கும் கருணை காட்டவில்லை, பாலுக்குப் பரிவு காட்டவில்லை என்று சிலர் சொல்லலாம். ஆனால், பாலுக்குப் பரிவு காட்டப்பட்டிருக்கிறது. “ **Milk foods (excluding fresh milk) but including milk powder** ” என்று முதல் அட்டவணையில் 25-வது ஐட்டமாகப் போட்டிருக்கிறார்கள். சுத்தமான பாலுக்கு வரி இல்லை. ஆனால், பவுடர் பாலுக்கு வரி உண்டு. அதற்குப் போடலாம். மில்க் பவுடரை பாலுக்குப் பதிலாகச் சாப்பிடுவது உடலுக்கு நல்லதல்ல. ஆனால் “ **fresh milk** ” குக்கு வரி இல்லை. அந்த அளவுக்கு பாலுக்குப் பரிவு காட்டப்பட்டிருக்கிறது, என்று எதிர்க் கட்சியினருக்குச் சொல்ல விரும்புகிறேன். பாலுக்குப் பரிவு காட்டவில்லை என்று மொத்தமாகப் பேசாமல், பரிவு காட்ட வேண்டிய பாலுக்குப் பரிவு காட்டப்பட்டிருக்கிறது, என்பதை உணர வேண்டும். அத்துடன், குழந்தைகளுக்கென வருகிற பால் உணவுப் பவுடர் விஷயத்திலும் அதிக பரிவு காட்ட வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். அதை நாம் ஓரளவு ஏற்றுக்கொள்ளலாம். அதற்கு வரிவிதிப்பிலிருந்து ஓரளவு விதி விலக்கு அளிக்கலாம். காரணம், சிறு குழந்தைகளுக்கு பால் பவுடர் டப்பாக்களின் விலை குறைவாக இருக்கவேண்டும். அவை கிடைப்பதும் அரிதாகப் போய்விட்டன. சுத்த பாலுக்கு வரி போடாமல் விதிவிலக்கு அளித்து அதற்குப் பரிவு காட்டியிருப்பதை வரவேற்க வேண்டும். அது தொடர்ந்து இருக்கவேண்டும். முடிந்தால், குழந்தைகளுக்கான பால் டப்பாக்களுக்கும் விலக்கு அளிப்பதற்கு அரசாங்கத்தார் சற்று கருணை உள்ளத்தைக் காட்டுவார்களானால் அது போற்றத் தக்கது. ஆனால், செய்ததைப் பாராட்டாமல் இருப்பது தவறு என்ற காரணத்தால், பாலுக்குப் பரிவு காட்டப்பட்ட அளவுக்கு அமைச்சர் அவர்களைப் பாராட்ட கடமைப்பட்டிருக்கிறோம். அரசாங்கம் மேலும் இது விஷயத்தில் பரிவு காட்டலாம் என்று கூறி, இந்த நல்ல சட்டத்தைக் கொண்டுவந்த அமைச்சர் அவர்களுக்கு நன்றியைத தெரிவித்துக்கொண்டு, இன்னும் இருக்கும்

11th February 1959] [Srimathi T. N. Anandanayaki]

ஒரு சில தவறுகளையும் நீக்கி, உயர்ந்த சட்டமாக சென்னை மாகாணத்திலே நாம் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு இந்த வாய்ப்பை அளித்ததற்கு நன்றியைத் தெரிவித்து, என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகின்றேன். வணக்கம்.

**Sri M. KALYANASUNDARAM:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதா மிக விரிவாக செலக்ட் கமிட்டியினுலே பரிசீலனை செய்யப்பட்டு சபை முன்பு வந்திருக்கிறது. என்னுடைய ஏழு வருஷ அனுபவத்திலேயே இந்த சட்டசபையில் வேறு எந்த மசோதாவும் இவ்வளவு விரிவாக ஆராய்ச்சி செய்யப்படவில்லை என்று நான் துணிந்து கூற முடியும். அனேகமாக ஒவ்வொரு பிரிவும் தனித்தனி உப கமிட்டிகள் வேறு போட்டு பரிசீலனை செய்யப்பட்டது. கருத்து வித்தியாசங்கள் இருந்தால், அந்தக் கருத்து வித்தியாசங்கள் என்ன என்ன என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிற விவரங்களை அறிக்கையிலே நன்றாகப் பார்க்கலாம். இந்த மசோதாவுக்குக் காரணமாக இருந்த அமைச்சரும், நம்முடைய நிதி அமைச்சரும் கூட அந்த செலக்ட் கமிட்டியில் இருந்தார்கள். வரி விகிதத்தைக் குறைப்பது தவிர, வருமானத்தைப் பாதிக்காமல் என்ன சீர்திருத்தம் சொன்னாலும் ஒப்புக்கொண்டார்கள். அது விஷயத்தில் அவர்கள் ரொம்ப தாராளமாக இருந்தார்கள். வரி விகிதத்தைக் குறைப்பதில் அனேகமாக விட்டுக் கொடுக்கவில்லை. இன்னும் எந்தப் பொருள்களுக்கு அதிகமாக வரி போடலாம் என்று யோசனை சொன்னாலும், வேண்டுமானால் அதை ஆலோசிப்பதற்கும் தயாராக இருந்தார்கள். இது அவர்களுடைய சங்கடமான நிலைமை என்று கருதுகிறேன்.

விற்பனை வரி நியாயமானதா, அநியாயமானதா என்பது விவாதத்திற்கு உரிய ஒரு விஷயம் அல்ல, விற்பனை வரியை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். வியாபாரி அந்த வரியைக் கொடுக்கவில்லை, பொது மக்கள் கொடுக்கிறார்கள். தனிப்பட்டவர்கள் நடத்தக்கூடிய பெரும் தொழில்கள், மொத்த வியாபாரம் இன்னும் சொத்துடைமை பூராவும் தனியார் ஆதிக்கத்தில் இருக்கும் சமுதாயத்திலே மக்கள் மீது சுமத்தக்கூடிய விற்பனை வரி, நியாயமான வரி என்று யாரும் ஒப்புக்கொள்ள முடியாது. ஆனால் நம்முடைய ராஜீய சர்க்கார் சம்பந்தப்பட்டமட்டில், விற்பனை வரியைத் தவிர வேறு வருமானம் கொடுக்கக் கூடிய வரிகளைப் போட சக்தி அற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்களைப்பற்றி பரிதாபப்படுவதா, கண்டிப்பதா என்று தெரியவில்லை.

நிதிக் கமிஷன் கொடுத்திருக்கும் யோசனையை இந்தச் சபை முன் வைத்து, அவற்றின் மீது விவாதம் நடத்தவேண்டும் என்று நான் வற்புறுத்தியிருக்கிறேன். அப்படி வற்புறுத்தியிருந்தால், நாம் இந்த ராஜ்யத்தின் நிதி நிலைமையைச் சீர்படுத்திக்கொள்ள யோசனைகளையும், இந்த வரிக்கு அப்பாற்பட்ட யோசனைகளையும் நாம் கொடுத்திருக்க முடியும், ஆலோசனை செய்திருக்க முடியும். அப்படிப்பட்ட யோசனைகளைக் கொடுக்க முடியாத காரணத்தால் அல்ல இந்த வரியைப்பற்றி குறை கூறியது. வேறு யோசனைகள் சொல்வதற்கு என்ன என்று கேட்டார்கள். நியாயமான கேள்வி. வேறு யோசனைகள் சொல்வதற்குச் சந்தர்ப்பம் இருக்க வேண்டிய இடத்தில் சொல்ல வேண்டியது தான். ராஜீய சர்க்காருக்கு வருமானம் கொடுக்காமல் பணத்தை அவர்கள் கையில் ஒப்படைக்காமல் செலவு செய்யவேண்டுமென்று எப்படி நாம் எதிர்பார்க்க முடியும்? எதிர்பார்க்க முடியாது. தேவையான பணம் கொடுக்கவேண்டும். ஆனால், வசூலிக்க வேண்டிய பணம் யாரிடமிருந்து வசூலிப்பது என்பது தான் பிரச்னை. இந்த வரி சம்பந்தப்பட்ட மட்டில், இது பொது மக்களிடமிருந்து தான் வசூலிக்கப்படுகிறது. உபயோகிக்கின்ற மக்கள் எந்த விதமான வித்தியாசமும் இல்லாமல் இந்த வரியைக் கொடுக்கிறார்கள் என்பதிலே எந்தவிதமான சந்தேகமும் வேண்டியதில்லை. ஆகையால், இந்த வரி சம்பந்தப்பட்ட மட்டில் தத்துவார்த்த ரீதியில் நியாயமா, அநியாயமா என்று விவாதிப்பதைவிட இந்த வரி சர்க்காருக்கு அவசியமாக ஆய்விட்டது. ஆகையால் தான் சர்க்கார் இதில் விட்டுக் கொடுக்க முடியாமல்,

[Sri M. Kalyanasundaram] [11th February 1959

இதை எப்படியும் விகிதங்களை விட்டுக் கொடுக்காமல், அளவையும் விட்டுக் கொடுக்காமல், வற்புறுத்த நேர்ந்துள்ளது எனபதை நான் சபையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். முதலில் அந்த விகிதம் பல கட்டத்தில் விதித்திருக்கக்கூடிய இரண்டு சத விகிதமாக விதித்திருக்கிறார்கள். அது செலக்ட் கமிட்டில் ஆலோசனைக்கு வந்தது. இந்த இரண்டு சத விகிதம் கூட அதிகமானதுதான் என்று செலக்ட் கமிட்டியில் பலர் அபிப்பிராயப்பட்டார்கள். அவர்களுக்கு கட்சிக்கட்டுபபாடு இல்லாமல் இருந்திருந்தால் அவர்கள் எல்லோரும் இதை ஆதரித்தே ஓட்டுச் செய்திருப்பார்கள். ஆனால் அவர்கள் பேசியபோது குறைக்க வேண்டும் என்று பேசினாலும் சர்க்கார் சொன்னதையே ஒப்புக்கொண்டு விட்டார்கள். ஓட்டுச் செய்வதற்கு அவர்களுக்கு கட்சிக்கட்டுப்பாடு இல்லாமல் இருந்திருந்தால் அவர்கள் இதற்கு ஒத்துக்கொண்டிருக்க மாட்டார்கள். உணவு பொருள்களுக்கு பூரணமாக விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்றும் மற்ற பொருள்களுக்கு இரண்டு சத விகிதம் இருக்கவேண்டும் என்றும் பேசினார்கள். மந்திரிகள் செலெக்ட் கமிட்டியில் இருந்ததால் அவர்கள் தங்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்ற முடியவில்லை. இரண்டு விகிதம் என்று சொன்னது அப்படியே இருக்கிறது. அப்படியே உணவு பொருள்களுக்கும் ஒரே சத விகிதம் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் உணவு பொருள்களுக்கு விதி விலக்கு அளித்திருக்கவேண்டும். அப்படி விதிவிலக்கு அளிக்கா விட்டாலும் கூட மற்றவைகளுக்கு விதித்திருக்கும் இரண்டு சத விகிதம் நியாயம் தானா அல்லது அவசியமா என்பதையும் பார்க்க வேண்டும்.

நாம் ஒரு நிபுணரை நியமித்தோம் அவரும் அவைகளைப்பற்றி விரிவாக பரிசீலனை செய்து தன்னுடைய அறிக்கையையும் சமர்ப்பித்திருக்கிறார். அவர் தன்னுடைய அறிக்கையில் உணவு பொருள்களுக்கு ½ சத விகிதம் தான் வைக்கவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அரை சத விகிதம் வசூலிக்க வேண்டுமென்று சொல்லும்போது கூட அவர் எப்படி அதை வசூலிக்கலாம் என்பதையும் சொல்லியிருக்கிறார். எவ்வித சந்தேகத்திற்கும் இடம் இல்லாமல் சொல்லியிருக்கிறார். இவர்கள் சொல்லலாம் ஒரு சத விகிதம் என்று வைத்தால் அதை வசூலிக்க கஷ்டம் அதிகமாக இருக்காது என்று சொல்லலாம். வியாபாரிகளுக்கும் இதை ஏமாற்ற வேண்டுமென்ற எண்ணம் இருக்காது என்றும் சொல்லலாம். அவர்களும் இதை உற்சாகமாகக் கொடுக்க முன் வருவார்கள் என்றும் சொல்லலாம். பல ராஜ்யங்களில் இதைப் பார்த்து பல ஆதாரங்களுடன் அவர் இதை எடுத்துக் காட்டியிருக்கிறார். டாக்டர் லோகநாதன் அறிக்கையைப்பார்த்தால் இது நன்றாகத் தெரியும். இப்பொழுதுள்ள வரி பொதுமக்களால் கொடுக்கப்பட்டாலும் ஆட்சேபணைகள் வருவதெல்லாம் வியாபாரிகளிடமிருந்துதான் வருகின்றன. அதற்குக் காரணம் இருக்கிறது. நல்ல வியாபாரிகள்கூட கெட்ட வியாபாரம் நடத்தக்கூடிய மனப்பான்மையில் போய் விடுகிறார்கள். இதன் மூலம் வியாபாரிகளுக்கு அதிகப்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. வியாபாரிகளில் நல்லவர்களும் இருக்கிறார்கள், கெட்டவர்களும் இருக்கிறார்கள். இந்த முறையில் நல்ல வியாபாரிகளும் கெட்டவர்களாக மாறி விடுகிறார்கள். கெட்ட வியாபாரிகள் வரி கொடுக்காமல் ஏமாற்றி தங்களுடைய வருமானத்தைப் பெருக்கிக்கொள்வதற்கு முயற்சி எடுத்துக்கொண்டு அதிகப்படியான வியாபாரம் செய்வதற்கு முற்படுகிறார்கள். இதைப்பார்த்து நல்ல வியாபாரிகளும் தங்களுடைய வியாபாரத்தை அதிகப்படுத்திக்கொண்டு லாபத்தை அதிகரித்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தில் கெட்ட வியாபாரத்தில் ஈடுபடுகிறார்கள். நியாயமாக கணக்கு வைத்துக்கொண்டு வியாபாரம் செய்கிறவர்கள் கூட கணக்கு வைத்துக்கொள்ளாமல் வரியைக் கட்டாமல் தப்பித்துக் கொள்வதற்கு முற்படுகிறார்கள். அதனால் அவர்கள் பல மோசடிகளில் இறங்குவதற்கு சந்தர்ப்பம் ஏற்படுகிறது. ஆகவே நேர்மையற்ற முறையில் போட்டிகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. வரியைக் கொடுக்க ஏமாற்றியாவது தங்களுடைய வியாபாரத்தை பெருக்கிக்கொள்ள முற்படுகிறார்கள். ஆகவே இந்த வரி அவர்களுடைய உண்மையான நடத்தையை குறைப்பதற்கு வசதியாக இருக்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

11th February 1959] [Sri M. Kalyanasundaram]

உணவு பொருள்களுக்கு வரி விதிவிலக்கு அளிக்க வேண்டும் என்பதையும் மற்ற பொருள்களுக்கு பல கட்டத்தில் வரி விதிக்கும் போது ஒரு பர் செண்ட் விதிக்கவேண்டும் என்றும் அபிப்பிராயத்தை தெரியப்படுத்துகிறேன். இதையே நான் வலியுறுத்த விரும்புகிறேன். அதற்காக கனம் மந்திரி அவர்களிடத்தில் ஒரு அபிப்பிராயத்தையும் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதாவது ஒரு வருஷத்திற்காகவாவது ஒரு பர் செண்ட்டை வைத்துப் பார்க்கலாம். அதில் எந்த அளவு அனுகூலம் ஏற்படுகிறது என்று பார்க்கலாம். அவற்றில் அனுகூலம் ஏற்படுகிறதா அல்லது பிரதிகூலம் ஏற்படுகிறதா என்பதைப் பார்த்து விட்டு பிரதிகூலம் ஏற்பட்டால் அதன் பிறகு அதை இரண்டு பர்செண்டாக உயர்த்திக்கொள்ளலாம். அதற்கு வேண்டிய அதிகாரமும் நமக்கு இருக்கிறது. அல்லது வருமானம் குறைந்தால் அதை சரிபடுத்திக்கொள்ள அதன் பிறகு உயர்த்திக்கொள்ளலாம். அதற்கு வேண்டிய அதிகாரமும் நமக்கு இருக்கிறது. இது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே பல கட்டத்திற்கு இரண்டு பர்செண்ட்டும் உணவு பொருள்களுக்கு விதி விலக்கும் அளித்துப் பார்க்கவேண்டும் என்றும் அதையும் பரிட்சார்த்தமாகப் பார்க்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். டாக்டர் லோகநாதன் அவர்கள் சிபாரிசுப்படி விதிப்பதானது பொருத்தமாக இருக்கும் என்பதையும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதைப்பற்றி செலெக்ட் கமிட்டியில் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் எடுத்துக்கொள்ளவில்லை. ஒருக்கால் சட்ட சபையில் வந்தபோது ஏதாவது விட்டுக்கொடுக்கலாம் என்ற அபிப்பிராயத்தில் அங்கே ஒப்புக்கொள்ளாமல் இருந்து விட்டு இங்கே யாவது விட்டுக்கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் விட்டுக்கொடுக்க முன் வர வேண்டும், அப்படி முன் வருவார்கள் என்றும் நினைக்கிறேன். ஆகவே சட்ட சபையில் காட்ட வேண்டிய சலுகையாக இதை வைத்துக்கொண்டு அதற்கு விதிவிலக்கு அளிக்க முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அம்மாதிரியாவது இப்பொழுது செய்யலாம், அதற்கு வேண்டிய சந்தர்ப்பமும் இருக்கிறது. உணவு பொருள்களுக்கு விதிவிலக்கு கொடுக்க வேண்டும் என்கிற கிளர்ச்சி பலமாக வந்திருக்கிறது. அண்டை ராஜ்யங்களாகிய கேரளா, மைசூர் போன்ற ராஜ்யங்களில் இதற்கு விதிவிலக்குக் கொடுத்திருக்கிறார்கள். அதைப்போலவே இங்கும் கொடுக்கவேண்டும். எழு, எட்டு வருஷங்களாகச் செய்த கிளர்ச்சியின் காரணமாக இப்பொழுது இதைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அண்டை ராஜ்யங்களில் உணவு பொருள்களுக்கு விதிவிலக்கு கொடுக்கப்பட்டிருக்கும் காரணத்தினால் இங்கேயும் அவற்றிற்கு விதிவிலக்கு அளிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அழிந்து போகும் பொருள்களுக்கு சலுகை தரவேண்டும் என்பதைப் பற்றியும் செலெக்ட் கமிட்டியில் விவாதம் வந்தது. முப்பது ஆயிரம் ரூபாய்க்கு வியாபாரம் செய்கின்றவர்களுக்கு சலுகைகள் கொடுத்திருக்கிறோம், விதி விலக்குக் கொடுத்திருக்கிறோம் என்று சொன்னார்கள். இந்தச் சலுகைகூட புஷ்பம், காய்கறி, பழங்கள், வாழையிலை, வெற்றிலை, போன்ற சாமான்களை மட்டும் வைத்துக்கொண்டு வியாபாரம் செய்கிறவர்,களுக்குத்தான் இந்தச் சலுகை கொடுக்கப்பட்டிருக்கிறது என்றும் சொன்னார்கள். ஆனால் மற்ற சாமான்களுடன் இவைகளையும் விற்றால் அவர்களுக்கு இப்படிப்பட்ட சலுகை கிடையாது. இதைபற்றி கேட்டால் முப்பது ஆயிரம் ரூபாய்க்கு உள்பட்டு விற்பனை செய்கிறவர்களுக்குத்தானே இந்த சலுகை என்று சொல்லி இது ஒரு பெரிய சலுகை என்றும் சொல்லுகிறார்கள். அதனால் கஷ்டம் ஒன்றும் இருக்காது என்றும் சொல்லுகிறார்கள். இதனால் முப்பது ஆயிரம் ரூபாய்க்கு உட்பட்டு வியாபாரம் செய்கிறவர்கள் அதற்கு மேல் வியாபாரம் நடக்கவில்லை என்று காட்டுவதற்கு கணக்கு வைக்கவேண்டியதாக ஏற்படும். அதனால் அவர்களுக்கு கணக்குகள் வைத்துக்கொள்ள வேண்டுமென்ற நிர்ப்பந்தம் ஏற்படும். இதையும் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். மற்ற பொருள்களுக்கும் இவைகளுக்கும் வித்யாசம் இருக்கின்றன. மற்ற பொருள்களுக்கு பில் போட்டு வியாபாரம் செய்யலாம். ஆனால் அவைகளுக்கு பில் போட்டு வியாபாரம் செய்வது என்பது முடியாது. காய்கறி, வாழையிலை, வெற்றிலை, புஷ்பம்

[Sri M. Kalyanasundaram] [11th February 1959

அவைகளை யார் வாங்குகிறார்களோ அவர்களுக்கு ‘பில்’ போட்டு விற்க முடியாது. நாலு நயாபைசா போட்டு வசூலிக்க அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடையாது. இது சலுகை என்றாலும் அது ஒப்புக்கொள்வதாக இல்லை. ஆகவே முப்பது ஆயிரம் ரூபாய்வரையில் சலுகை கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொல்வது ஒரு சரியான சலுகையாகாது. அதனால் அவர்களுடைய வியாபாரம் வெகு அளவில் பாதிக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம். உண்மையாகவே அவர்களுக்கு சலுகை அளிக்கவேண்டும் என்று கருதினால் அதற்கு நான் யோசனை சொல்வது என்னவென்றால், ஐம்பது ஆயிரம் ரூபாய் வரையிலாவது அவர்களுக்கு சலுகை கொடுக்கவேண்டும். அது வரையில் அவர்களுக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டும். அந்த அளவுக்கு அதை உயர்த்த வேண்டுமென்ற யோசனையை நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன். அப்படி உயர்த்தாவிட்டாலும் மற்ற பொருள் களுக்கு பத்தாயிரம் முதற்கொண்டு இருபத்தி ஐயாயிரம் வரையில் ஒட்டு மொத்தமாக வரி செலுத்தலாம் என்று வைத்திருப்பது போன்று இப்படிப் பட்ட பொருள்களுக்கும் முப்பதாயிரம் ரூபாய் முதற்கொண்டு எழுபதாயிரம் ரூபாய் வரையிலாவது ஒட்டு மொத்தமாக வரி கொடுக்கவேண்டும் என்ற முறையிலாவது சலுகை காட்டவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தினால உண்மையிலேயே அவர் களுக்கு சலுகை காட்டியதாக ஆகும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஏனென்றால் இப்பொழுது பத்தாயிரம் முதற்கொண்டு இருபதாயிரம் வரை யில் ஒட்டு மொத்தமாக வரி செலுத்தலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கனம் மந்திரி அவர்கள் எப்படியாவது இவைகளை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். எந்த முறையிலாவது வியா

12-20 p.m. பாரிகளுக்கு இருக்கக்கூடிய குறைகளைத் தீர்க்கவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடு சில பொருள்களுக்கு ஒரு முனை வரியா, பல கட்ட வரியா என்பதில் அபிப்பிராய பேதங்கள்—வித்தியாசம் ஏற்பட்டிருக்கலாம். விதிவிலக்கு இல்லாமல் ஒரு முனை வரி என்று இருந்தால் அது எல்லோரையும் பாதிக்கக் கூடும். ஒரு முனை வரியைக் காட்டிலும் பலமுனை வரியே தேவலை என்று நினைக்கக்கூடும்.

உதாரணமாக, பிண்ணாக்குக்கு ஒரு முனையில் வரி போடப்பட்டிருக்கிறது. பிண்ணாக்குக்கு வரி போடுவது நியாயமா இல்லையா என்பது ஒரு புறம் இருக்கட்டும். மாட்டிற்குத் தீனியாகப் பயன்படுகிறது, விவசாயத்திற்கு மிகவும் அவசியமானது. இதற்கு ஏன் வரி விதிக்கவேண்டும் என்று வாதிக்கலாம். இருந்தாலும் வரி விதிப்பது என்றால் எப்படி விதிப்பது ? இப்போது ஒரு முனை வரி விதிக்கிறார்கள். ஒரு முனை வரி என்று வைத்துவிட்டால் விலக்குக் கிடையாது. பலகட்ட முனை வரிக்கு பத்தாயிரம் ரூபாய்க்கு விலக்குக் கொடுத்திருக்கிறோம். ஆனால் இங்கே ஒரு சாதாரண வியாபாரி ஒரு செக்கை வைத்துக்கொண்டு எண்ணெயாட்டி வியாபாரம் செய்கிறான் என்றாலும் அவன் உற்பத்தி செய்கிற பிண்ணாக்குக்கு மொத்த மாக அவன் வரி கட்டியாகவேண்டிய சங்கடமான நிலை ஏற்படுகிறது. பல கட்ட வரி என்றாலும்கூட அவனுக்கு பத்தாயிரம் ரூபாய் வரையில் விலக்கு இருக்கிறது. ஆனால் இங்கே அவனுக்கு இந்தச் சலுகைகூடக் கிடையாது. மனிதர்கள் உண்ணக்கூடிய உணவு தானியத்திற்கே வரி வேண்டாம் என்கிறபோது—உணவையே அதிகம் உற்பத்தி செய்யக்கூடிய பிண்ணாக்கு, விவசாயத்திற்கு மிகவும் அத்யாவசியமான கால்நடைகளின் தீவனமான பிண்ணாக்குக்கு வரி போடாமல் விட்டிருந்தாலும் பரவாயில்லை. ஆகவே ஒரு கட்டத்தில் 3 சத விகிதம் என்று போடுவதனால் உண்டாகிற சங்கடத்தை நன்கு உணர்ந்து இதைப் பலகட்டத்தில் போடக்கூடிய வரியாக 1 சத விகிதம் வரி என்று விதித்தால்கூடக் கொஞ்சம் வசதியாக இருக்கும் என்பது என் அபிப்பிராயம். அதற்குத் தக்க திருத்தங்கள் செய்துகொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்னும் விதிவிலக்கு—பலகட்ட வரியைப் பொறுத்தவரையில் 10 ஆயிரம் ரூபாய் வரையில் என்று செலக்ட் கமிட்டியில் செய்திருக்கக்கூடிய திருத்தம்—தொழிற்சங்கங்களை நடத்திப் பழக்கப்பட்ட—முதலாளிகளோடு பழகி அவர்கள் மனோபாவத்தை நன்கு தெரிந்துகொண்டிருக்கக்கூடிய அனுபவம் உள்ள நமது தொழில் அமைச்சர் அவர்கள் தம் அநுபவத்

11th February 1959] [Sri M. Kalyanasundaram]

திலேயே கையாண்டிருக்கக்கூடிய தந்திரங்களிலே இது ஒன்று என்று சொல்லிவிடலாம். அதுதான் என் அபிப்பிராயமும். ஏற்கெனவே வியாபாரிகளிடமிருந்து நமக்கு என்ன கோரிக்கை வந்திருக்கிறது ? 25 ஆயிரம் ரூபாய் வரையில் விதிவிலக்குக் கொடுக்க வேண்டுமென்று கோரியிருக்கிறார்கள். தொழிலாளிகள் சம்பளம்கூட வேண்டுமென்று கேட்டால் உடனே முதலாளிகள் கையாளுகின்ற தந்திரம் ஆள்குறைப்பு செய்கிறோம் என்பதுதான். ஆள் குறைப்பு என்றவுடனே தொழிலாளிகளும் இறங்கி வந்துவிடுவார்கள். அதுபோல இன்றைக்கு 25,000 ஆயிரம் வரையில் விலக்கு அளிக்கவேண்டும் என்று அவர்கள் கோரியதற்கு லிமிட்டை ஐயாயிரம் என்று குறைக்கிறேன் என ஆரம்பித்தவுடனே பத்தாயிரம் போதும் என்று அவர்கள் இறங்கி வரும்படி செய்துவிட்டார்கள். இந்தத் தந்திரத்தைக் கையாண்டு அவர்கள் வெற்றி கண்டும்விட்டார் என்பது என் அபிப்பிராயம்.

பத்தாயிரம் என்பது நியாயமான வரம்பு அல்ல. இன்னும் அதிகப் படுத்த வேண்டிய சந்தர்ப்பம் இருக்கிறது. 25 ஆயிரம் ரூபாய் வரைக்கும் கணக்குக் காட்டாமலே வாங்கிய பொருளுக்கு மட்டும் கணக்குக் காட்டினால் போதும் என்று வாக்குறுதி கொடுத்தார்கள். அதாவது கொள்முதல் செய்தது எவ்வளவு, விற்பனை செய்தது எவ்வளவு என்று பூரா நிர்ப்பந்தமும் இல்லாமல் கொள்முதல் செய்த பொருள்களுக்கு மட்டும் கணக்குக் கொடுத்து அந்த அடிப்படையில் 25 ஆயிரம் ரூபாய் வரைக்கும் கம்பவுண்டு பண்ண வாக்குறுதி கொடுத்தது நடைமுறைக்கு வர வேண்டும் என்பது என் அபிப்பிராயம். அதே சமயத்தில் அந்த விகிதாசாரப்படியே விலக்குக் கொடுப்பதற்கும் பாதியாகக் குறைத்தால் ஓரளவு ஏற்றுக்கொள்ளக்கூடிய முறையில் அமையும் என்பது என் அபிப்பிராயம். அதையும் கனம் அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும்.

இந்த மசோதாவில் பல புதிய பாதுகாப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. முன்பு இருந்த நிலைமை அல்ல. இது ஒரு சங்கடமான வரி வசூலிக்கும் முறை. வரியையும் வசூலித்தாகவேண்டும். ஏமாற்றுகிறவர்களுக்கும் இடம் கொடுக்கக்கூடாது. ஏமாற்றுகிறவர்களையும் தண்டிக்க வேண்டும். அவ்வளவு சங்கடமான நிலையில் வரி வசூலிக்கவேண்டுமானால் நாம் அதிகாரிகளுக்குக் கொஞ்சம் அதிகாரம் கொடுக்கத்தான் வேண்டும். அதோடு வரி கொடுக்கக்கூடிய நபர்களின் எண்ணிக்கை அதிகம். ஏமாற்று வதற்கும் பல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன.

உதாரணமாக, பாண்டிச்சேரியில் டீசல் ஆயிலுக்கு வரி இல்லாத காரணத் தினாலும் நம் ராஜ்யத்தில் அதற்கு வரி போட்டிருக்கிற காரணத்தினாலும் முன்பு அந்த ராஜ்யத்தில் டீசல் ஆயில் எவ்வளவு விற்பனையாகி வந்தது, இப்போது எவ்வளவு விற்பனை ஆகிறது என்று பார்த்தால் தெரியும். அங்கிருந்து வாங்கி இங்கே தென்னாற்காடு, சேலம், திருச்சி ஜில்லா வரைக்கும் போகிறதென்பதை அமைச்சர் அவர்கள் கவனிக்கவேண்டும்.

நாம் என்ன செய்தாலும் ஏமாற்றுகிறவர்கள் ஏமாற்றுகிறார்கள். மண் எண்ணெக்கு இவ்வளவு கிராக்கி ஏற்பட்டதன் இரகசியம் என்ன ? பர்மாஷெல், ஸ்டாண்டர்ட் வாகுவம் ஆயில், கால்டக்ஸ் போன்ற இந்த மூன்று அந்நிய கம்பெனிகளும் வேண்டுமென்றே ஒரு நிர்ப்பந்தமான நிலையை சிருஷ்டித்து, இதன் காரணமாக பல சலுகைகளைப் பெறவேண்டும் என்கிற நோக்கத்தில் செய்கிற காரியங்களை இந்தச் சந்தர்ப்பத்தில் விவாதிக்க முடியாது. ஆனால் மண் எண்ணெ எந்த எந்த வகையில் எல்லாம் துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது என்பது நமக்குத் தெரியாதது அல்ல. டீசல் ஆயிலோடு இதைக் கொட்டிக் கலந்து நான்கு டின் ஆயிலே 5 டின்னாக—டீசல் ஆயில் விலைக்கு—கலப்பு எண்ணெயை விற்கிறார்கள். தென்னாற்காடு, சேலம் போன்ற ஜில்லாக்களில் இப்படி நடப்பது அதிகாரி களுக்கும் தெரியும். நமக்கும் தெரியாதது அல்ல.

வியாபாரத்தில் இப்படிப்பட்ட சூதுகள் நடப்பதைக் தடுக்கவேண்டு மென்றால் அதிகாரிகளின் கையைப் பலப்படுத்தத்தான் வேண்டும். இன்னொரு உதாரணம். திருச்சி ஜில்லாவில் உள்ள கம்பெனி தொடர்ந்து

அமோனியம் சல்பேட் மூட்டையை எப்படி விற்பனை செய்து வருகிறார்கள் என்பதைக் கவனிக்கவேண்டும்? நான்கு மூட்டையை பிரித்து தூத்துக்குடியிலிருந்து உப்பளத்தில் உள்ள கருப்பு கட்டிகளை வாங்கிவந்து இதோடு கலந்து மெஷின் தையல் போலவே நல்ல தையல் கலையில் வல்லவர்களைக் கொண்டு நான்கு மூட்டை அமோனியம் சல்பேட்டை ஐந்து மூட்டை, ஆறு மூட்டையாகத் தைத்து விற்று வருகிறார்கள். கேட்டால் அவருக்குக் கொஞ்சம் சொந்த நிலம் இருக்கிறது. தன் நிலத்திற்கு உரமிடுவதற்காகக் கலந்து வைத்திருப்பதாகச் சொல்கிறார். எல்லா அதிகாரிகளுக்கும் தெரியும். இது விஷயம் 1½ வருஷமாக அடிபடுகிறது.

இப்படிப்பட்ட கள்ளத்தனத்தைக் கட்டுப்படுத்த அதிகாரிகளுக்குப் போதுமான அதிகாரம் நாம் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் இந்த அதிகாரத்தைக் காட்டி அதிகாரிகள் லஞ்சம் வாங்கக்கூடிய நிலைமை வளர்ந்துவிடாதவாறும் நிர்வாகத்தில் கண்காணிப்பாக இருக்க வேண்டும். பொதுவாக சட்டத்தினால் மட்டும் இதற்குப் பரிகாரம் காண முடியாது. நிர்வாகத்தின் திறமை எப்படி இருக்கிறது, ஒழுங்கு எப்படி இருக்கிறது, நேர்மை எப்படி இருக்கிறது என்பதைப் பொருத்த விஷயமே தவிர சட்டத்தினால் பரிகாரம் காணமுடியாது என்பது என் அபிப்பிராயம். ஓரளவு பொதுஜன அபிப்பிராயம்தான் இதைத் தடுக்க, முடியும். திருச்சி நகரத்திற்காக ஒதுக்கப்பட்ட மண்ணெண்ணையை திருட்டுத்தனமாக பக்கத்து ஜில்லாவிற்கு லாரியில் கடத்தப் போகிறார்கள் என்பது தெரிந்து எந்த லாரியாக இருந்தாலும் வழிமறிப்பது எனத் தொழிலாளர்கள் தீர்மானம் செய்தவுடனேதான் அந்த வியாபாரிகள் இறங்கிவந்தார்கள். கலெக்டரிடத்தில் நான்கணாவுக்கு விற்கிறோம் என்று கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார்கள். ஆகவே இப்படி பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டித்தான் இந்தக் கள்ள வியாபாரத்தை ஒழிக்க முடியும்.

மேலும் இதை நிர்வகிக்கக்கூடிய முறையில் ஜில்லா மட்டிலும், ராஜ்யம் மட்டிலும் ஆலோசனைகள் கூறுவதற்கு ஆலோசனைக் குழுக்கள் இருந்து வருகின்றன. அந்த ஆலோசனைக் குழுவை பலப்படுத்தி—எப்படி நிர்வாகம் திறம்பட நடக்கலாம், இதிலுள்ள குறைபாடுகள் என்ன என்பதைப் பற்றியெல்லாம் யோசனை கேட்கப்படவேண்டும். அதற்காகவே இந்தக் குழுவை விரிவுபடுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது தான் சிறந்த முறையாகவும் இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். மேலும் இந்த மசோதாவுக்கு நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தங்களையும் பரிசீலனை செய்து சர்க்கார் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

12-30 p.m. *SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விற்பனை வரி மசோதாவானது பொறுக்குக் கமிட்டியில் சரியாக விவாதிக்கப்பட்டு சட்டசபை முன்பு வைக்கப்பட்டிருக்கிறது. டாக்டர் லோகநாதன் அவர்களால் செய்யப்பட்ட சிபார்சுகளில் முக்கியமான சிபார்சுகள் விவாதத்திற்கு வந்து மறுபடியும் பொறுக்குக் கமிட்டிக்கு சென்று வந்திருப்பது அங்கத்தினர்கள் எல்லோருக்கும் தெரியும்.

எனக்கு முன் பேசிய பலர் சில முக்கியமான விஷயங்களைப்பற்றி எடுத்துச் சொன்னார்கள். அதில் முக்கியமாக விதிவிலக்கு அளித்திருப்பது சில ஐடங்களுக்குத்தான். உணவுப் பொருள்களுக்கு கண்டிப்பாக விதி விலக்கு அளிக்கவேண்டும். அப்பொழுதுதான் ஜனங்களின் கஷ்டம் நீங்கும். தவிர விலைவாசிகள் ஏறிக் கொண்டிருப்பதன் காரணமாக இந்த விலக்கை அவர்கள் கேட்கிறார்கள்.

டாக்டர் லோகநாதனின் அறிக்கையில் என்ன சொல்லியிருக்கிறதென்றால் உணவுப் பொருள்களுக்கு ½ சத விகிதம் கொடுக்கவேண்டும் என்பது மற்றப் பொருள்களுக்கெல்லாம் பல கட்டவரி கொடுக்கும்போது ஒரு சத

விகிதம் இருக்கவேண்டும் என்று கூறப்பட்டிருக்கிறது. டாக்டர் லோக நாதன் அவர்கள் அறிக்கையில் கண்டிருப்பவைகள் எல்லாவற்றையும் சர்க்கார் அங்கீகரிக்கவில்லை. அவர்கள் சொன்ன முக்கியமான கட்டத்தில் என்ன ஏற்பட்டிருக்கிறதென்றால் இம்மாதிரியாக வரிபோடும்போது சர்க் காருக்கு நிறைய தொகை வருவாய் இருக்கவேண்டும்.

முக்கியமாக பால், அழுகக்கூடிய பழம் முதலிய பொருள்களுக்கும், புஷ்பம் போன்றவைகளுக்கும் விதிவிலக்கு அளிக்கவேண்டும். அடுத்தபடி யாக விதிவிலக்கு பத்தாயிரம் ரூபாய் இருக்கவேண்டுமென்று வரம்பு செய் தால் சிறிய வியாபாரிகள் இதனால் மிகவும் பாதிக்கப்படுவார்கள். முக்கிய மாக காய்கறி சிறு வியாபாரிகள் பெண் பிள்ளைகளாக இருப்பதினால், அவர்கள் அன்றாடம் சம்பாதிப்பது 20, 30 ரூபாய்க்குமேல் இருக்காது. அவர்கள் பெண்களாதலால் வரி கொடுப்பதற்கும் முக்கியமாக கணக்கு வைத்துக் கொள்வதற்கும் கஷ்டப்படுவார்கள். ஆகவே அவர்கள் எல்லோ ருக்கும் விதிவிலக்கு 25,000 ரூபாய் வரை கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். காம்பவுண்ட் ரேட் 25,000 ரூபாய் வரை கொடுச் கப்பட்டிருக்கிறது. கணக்குக் கொடுப்பதில் மிகவும் கஷ்டங்கள் இருக்கின் றன. ஆகவே அநியாயமாக வியாபாரிகள் மிகவும் கஷ்டத்திற்குள்ளா வார்கள். காம்பவுண்ட் ரேட் 25,000 என்பதை 50,000 என்று மாற்றலாம்.

நாற்பத்தைந்தாவது செக்ஷன் கீழுள்ள சிறைச்சாலை என்ற முக்கிய மான பகுதியில் குற்றம் செய்தவர்களுக்கு கடுமையான தண்டனை மாத் திரம் விதித்துவிட்டு அவர்களை இலவசமாக விட்டுவிடக்கூடாது. அவர் களுக்கு அபராதம் போட்டு அவர்களிடமிருந்து பணம் வசூலிக்கவேண்டும். இதனால் சர்க்காருக்கு அதிகப்படியான வருமானம் கிடைக்கும். இந்த விஷயத்தில் யாருக்கும் மாறுதலான அபிப்பிராயம் இருக்காது என்று நினைக்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நாற்பத்தைந்தாவது பிரி வில் கிருமினல் சட்டத்தைப்பற்றிக் கூறுகிறது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : அப்படி தண்டிக்கப்படுவதி னால் லட்சக்கணக்கான ரூபாய் அரசாங்கத்திற்குக் கிடைக்கும்.

ஐம்பத்தொன்பது செக்ஷன்படி சர்க்கார் இன்றைக்கு அதிகாரம் எடுத்துக்கொண்டிருக்கிறது. அதிகாரிகளுக்கு இவ்வளவு அதிகாரம் அவ சியம் இல்லை. சர்க்கார் இதை சிந்தித்துப் பார்த்து முடிவு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது ஒரு சத விகிதம் விதி விலக்கு அளிக்கப்படுகிறது. அரை சத விகிதம் என்று ஏற்படுத்தவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

கம்யூனிஸ்ட் தலைவர் ஸ்ரீ கல்யாணசுந்திரம் அவர்கள் சொன்னார்கள் புண்ணாக்குக்கு வரிக்கு விதிவிலக்கு அளிக்கவேண்டுமென்று. இதானது முக்கியமாக கால்நடைகட்கும், விவசாயிகளுக்கும் அவசியமாக இருக்கிறது. இதற்கு வரி விதித்தால் விவசாயிகள் அதிகமாக பாதிக்கப்படுவர்.

அப்பீல் செய்கிறவர்கள் சர்க்காருக்கு வருமானம் வரக்கூடிய அளவில் அவர்களின் அப்பீலை அனுமதிக்கும் முறை இருக்கவேண்டும். பின்னிட்ட கணக்குகள் சரியாக இருப்பதைப் பார்க்கும் அதிகாரிக்கு ஐந்து வருஷம் வரை டயம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை இரண்டு வருஷமாக மாற்றி னால் நல்லபடியாக இருக்குமென்று யோசனை கூற விரும்புகிறேன்.

அஸிஸ்டண்டு அப்பலேட் கமிஷனர் இப்பொழுது கீழ் இருப்பது அவ் வளவு உசிதம் அல்ல. இது ட்ரிபுனல் கீழ் இருக்கவேண்டும். அப்படி இருப்பதுதான் நல்லது. வரி விதிப்பதன் காரணமாக எவ்வளவு ஆதார பூர்வமான பரிசீலனை செய்யவேண்டுமோ அவ்வளவும் செய்து, போது மான வரம்போடு உணவு பண்டங்களின் மீது விதிவிலக்கு அளித்து வரி கொடுப்பதற்கு எந்தவிதமான கஷ்டமும் இல்லாமல் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

12-40 p.m. **THE HON. SRI R. VENKATARAMAN**: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவாதம் எனக்கு மிகவும் உபயோககரமாக இருந்தது என்று சொன்னால் அது ஏதோ சம்பிரதாயமாக சொல்லப்படுகிற வார்த்தையல்ல. உண்மையாகவே இதில் பங்கெடுத்துக்கொண்ட அங்கத்தினர்கள் எல்லோரும் பல ஷரத்துக்களையும் நன்கு அலசிப் பார்த்து அனுபவம் வாய்ந்த ஆலோசனைகள் பல கூறியிருக்கிறார்கள். இந்த விற்பனைவரி இலாகாவை எவ்வளவுதான் திறமையாக ஒரு மந்திரி நிர்வகித்தாலும் அது, மக்களால் அவ்வளவு (பாப்புலராக) ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்க முடியாதென்று சொல்வது, என் அபிப்பிராயம் அல்ல, "டாக்ஸேஷன் என்கொயரிக் கமிட்டியின்" அபிப்பிராயம் அது. எந்த ஒரு வரி விதிப்பும் திறமையான நிர்வாகம் மூலம் ஜனசம்மதமாக இருக்கும்படி செய்ய முடியாதென்று அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதை ஓரளவு பொய்ப்பிக்கும் வகையில் இருக்கிறது. இன்று சென்னை சட்டசபையிலே இதன் விவாதத்தின் மேல் பங்கெடுத்துக்கொண்ட அங்கத்தினர்கள் எல்லோரும் ஒன்றிரண்டு விஷயங்களில்தான் குறைபாடு இருக்கிறதே தவிர மற்ற எல்லா ஷரத்துக்களும் ஓரளவு திருப்திகரமாக இருக்கிறது என்று சொன்னதானது எனக்கு மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது. இன்னும் இதை எந்த அளவுக்கு திருத்த முடியுமோ அதையும் ஆலோசனை செய்ய சர்க்கார் எப்பொழுதும் தயாராயிருக்கிறது. அனுபவத்தையொட்டி என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பொதுவாக சில முக்கியமான அம்சங்களைப் பற்றித்தான் இப்பொழுது பதில் சொல்ல முடியும். ஏனெனில் இந்த மசோதாவானது ஆரம்ப காலத்திலிருந்து இதுவரையில் என்னென்ன முறையிலே மாற்றப்பட்டிருக்கிறது என்பதையெல்லாம் நான் முதலிலேயே இப்பிரேரணையைச் செய்யும் காலத்தில் எடுத்துச் சொல்லிவிட்டேன்.

(Sri R. Subramaniam in the Chair)

சில அங்கத்தினர்கள் ஒரு முனை வரியானது நல்லதென்றும் பலமுனை அல்லது பல கட்ட வரி பல கஷ்டங்களை விளைவிக்கும் என்றெல்லாம் பேசிக்கொண்டிருப்பது எனக்கு சற்று ஆச்சரியத்தை விளைவித்திருக்கிறது. ஒரு முனை வரி சில பண்டங்களுக்குப் பொருந்தும், சில பண்டங்களுக்குப் பொருந்தாது. பல முனை வரி சில பண்டங்களுக்குப் பொருந்தும், சில பண்டங்களுக்கு பொருந்தாமலிருக்கும். ஒருமுனை வரி விதிப்போமானால், ஒரு ரூபாயிலிருந்து எவ்வளவு ரூபாய்க்கு வியாபாரம் செய்தாலும் அதற்கு ஒருமுனை வரி கட்டவேண்டும். பல கட்ட வரி விதிக்கும்போது 10,000 ரூபாய்க்கு மேற்பட்ட பண்டங்களின் விற்பனைக்குத்தான் அவ்வரியை விதிக்கிறோம். உதாரணமாக, கனம் அங்கத்தினர் செல்வராஜ் அவர்கள் சொன்னார்கள், ஏன் விறகு, காய்கறி முதலியவைகள் எல்லாம் ஒரு முனை வரியிலிருந்து பல கட்ட வரிக்கு மாற்றப்பட்டதென்று. இதனால் மக்கள் பாதிக்கப்படுவார்களே என்றும் சொன்னார்கள். ஒருமுனை வரி இருந்தால் தான் மக்கள் பாதிக்கப்படுவார்கள் என்று பரிசீலனை கமிட்டி பல கட்ட வரியாக அதை மாற்றியது. காரணம், சிறு கடைகள் வைத்துக் கொண்டிருப்பவர்கள் கூட, 10,000-க்கு குறைவாக விற்பனை செய்கிறவர்கள் அந்த வரியிலிருந்து இப்பொழுது பல கட்ட முறையில் வைத்தால் கட்ட வேண்டியதில்லை என்றும், ஒரு கட்ட முறை வைத்தால் கட்டவேண்டுமென்றும் இருப்பதால் அவர்களுக்கு சலுகை காட்ட வேண்டுமென்று பல கட்ட முறைக்கு மாற்றப்பட்டது. இன்னும் வர்த்தகத் துறையை எடுத்துக் கொண்டால் தகடுகள், ப்ராஸ் ஷீட்ஸ், ஸிங்க் ஷீட்ஸ் முதலியவைகளை வைத்து பாத்திரங்கள் போன்ற சமான்கள் செய்கிறவர்கள் ஒரு கட்ட வரி எங்களுக்கு வேண்டியதில்லை என்றும் இதனால் எங்கள் தொழில் கஷ்டப்படுமென்றும், அதனால் நாங்கள் பல கட்ட வரியைத்தான் ஆதரிக்கிறோம் என்று வர்த்தகர்கள் வந்து சொன்னதால் அவற்றை பல கட்ட வரி முறையில் மாற்றியமைத்திருக்கிறோம். ஆகவே அந்தந்த பண்டங்களின் இயல்பை நன்கு பரிசீலனை செய்து எது ஒரு கட்ட முனை வரியாக இருந்தால் மக்களுக்கு அதிகக் கஷ்டம் கொடுக்காது, எது பல கட்ட முனை வரியாக இருந்தால் மக்களுக்கு அதிகமான கஷ்டம், தொல்லை, தொந்தரவு

கொடுக்காது என்று பார்த்து இந்த ஷரத்து தயார் செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றும் நன்கு அலசிப் பார்க்கப்பட்டு, அதை யொட்டிய வர்த்தகர்களின், வியாபாரிகளின் அபிப்பிராயங்களைக் கேட்டுத்தான் செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே யாராவது டாக்டர் லோகநாதன் அவர்கள் 75 பண்டங்கள் மீது ஒரு கட்ட வரி போடச் சொன்னார்கள், ஆனால் சர்க்கார் இதை 68 ஆக மாற்றிவிட்டார்கள் என்று சொன்னால் அப்படி சர்க்கார் மாற்றவில்லை, வியாபாரிகளே தங்களுடைய நலனுக்காக, தங்கள் வியாபாரம் தழைத்தோங்குவதற்காக, நம் வியாபாரம் நம் ராஜ்யத்தை விட்டு பிற ராஜ்யங்களுக்கு ஓடிவிடாமல் இருக்க அவர்கள் செய்த சிபார்சின் மூலம் அவர்களுடைய விண்ணப்பத்தின் பேரில்தான் இது செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே அதைப்பற்றி யாரும் அதிகமாக குறை கூற மாட்டார்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். மிக முக்கியமாக குறை கூறப்பட்டதெல்லாம் உணவுப் பொருள்கள் மீது இப்பொழுது ஒரு சத விகித வரி விதிக்கப்பட்டிருப்பதானது, மக்களுடைய அத்தியாவசியமான பண்டங்கள் மீது வரி விதிக்கப்பட்டிருப்பது கடுமையான, சொல்லப்போனால் கொடுமையான வரியாக இருக்கிறது என்று சொன்னார்கள். இந்த வாதத்தை நாம் சற்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். நமது ராஜ்யத்தில் உற்பத்தியாகிற உணவுப் பொருள்களில் 80 சத விகிதம் விற்பனையாவதில்லை. உணவுப்பொருள்களை உற்பத்தி செய்கிறவர்கள் அவர்களே தங்களுடைய சொந்த செலவிற்கும் தங்கள் பண்ணையாட்களுக்கும், கூலிகளுக்கும் கூலி கொடுப்பதிலும் இவ்விதமாக உபயோகித்து வருகிறார்கள். நகரங்களுக்கு வந்து விற்கக்கூடிய அளவை எடுத்துப் பார்ப்பீர்களானால் அரிசியை எடுத்துக் கொண்டால் 20 சத விகிதம் கூட அப்படி விற்பனைக்கு வரவில்லை. ஆகவே இந்த ராஜ்யத்தில் உள்ள உணவுப் பொருள்கள் எல்லாவற்றின் மீதும் வரி விதிக்கப்படுகிறது என்றும் அதை உட்கொள்ளுகிற எல்லோரும் வரி கொடுத்து கஷ்டப்படுகிறார்கள் என்று சொன்னால் அது சரியல்ல. இதைக் கொடுப்பவர்கள் எல்லாம் நகரங்களில் வசிக்கிறவர்கள்தான். அவர்கள்தான் இந்த வரி கொடுக்க வேண்டி வருகிறது. தவிர கிராமாந்திரங்களில் உள்ள மக்கள் இந்த வரிக்கு ஆளாவதில்லை. (ஸ்ரீ என். கே. பழனிசுவாமி: எல்லோரும் அரிசிதான் சாப்பிடுகிறார்கள்.) எல்லோரும் அரிசி சாப்பிட்டாலுங்கூட கிராம மக்கள் அதை விலை கொடுத்து வாங்காததால் அவர்கள் அதற்கு விற்பனை வரி கொடுக்கவில்லை. எல்லோரும் அரிசிதான் சாப்பிடுகிறார்கள் என்பதை நான் முழுவதும் ஒப்புக்கொள்ளுகிறேன்.

(Mr. Speaker in the Chair.)

ஆங்காங்கு உற்பத்தியாவதை அவர்களும், அவர்களது குடும்பத்தாரும், அவர்களுடைய பண்ணையாட்கள், கூலியாட்கள் போன்றவர்களுக்கு, கூலிச் செலவு போன்றவைகளுக்கும் அவர்கள் முழுதும் உபயோகப்படுத்துகிறார்கள். ஆதலால் அவர்கள் அதற்கு வரி கொடுக்க வேண்டிவருவதில்லை. நகரங்களில் மட்டுந்தான், அது விற்பனையாகும்போது ஓரளவு விற்பனைவரி போடும் நிலை இருக்கிறது. ஆகவே இம்மாகாணத்திலுள்ள எல்லோரும் அதற்காக வரி கொடுக்கிறார்கள், அதனால் பாதிக்கப்படுகிறார்கள் என்று சொல்வது சரியல்ல. இரண்டாவதாக, இப்பொழுது நாம் விதிக்கும் இந்த வரி குறைவானதுதான். இரண்டு கை மாறுவதாக வைத்துக்கொண்டாலும் சரி, அல்லது வாதத்திற்காக மூன்று கைகள் மாறுவதாக வைத்துக் கொண்டாலும் சரி கனம் அங்கத்தினர் வேதரத்தினம் பிள்ளை அவர்கள் எடுத்துக் காட்டியதுபோல் மூட்டை 20 ரூபாய்க்கு வாங்கினாலும் 100 ரூபாய்க்கு மூன்று ரூபாய்தான் வரி ஆகும். 100 ரூபாய்க்கு ஐந்து மூட்டை நெல் கிடைக்கும். ஐந்து மூட்டை அரிசி என்பது 250 படி. ஆக, 300 நயா பைசா என்று சொன்னால் படிக்கு ஒரு நயா பைசாதான் இந்த வரியினால் அதிகரிக்கிறது என்று தாழ்மையுடன் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். நாட்டிலே உணவுப் பொருள்களின் விலை உயர்வது விற்பனை வரி காரணமாக அல்ல என்பதை நான் திட்டவட்டமாக எடுத்துக் கூற விரும்புகிறேன். வேறு காரணங்களினால்தான் இன்று உணவுப் பண்டங்களின் விலைவாசி உயர்ந்துகொண்டு போகிறதேயல்லாமல் விற்பனை வரி விதிப்பதின் மூலம் உணவுப் பண்டங்களின் விலை அதிகரித்தல்

விடுகிறது என்றும், ஆகவே அதைக் குறைக்க வேண்டுமென்று சொல்கிற வாதம் அவ்வளவு சரியல்ல என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன். முதலாவதாக 100-க்கு 80 பேர்கள் இதைக் கொடுக்கவில்லை. இரண்டாவதாக பாக்கியிருக்கிற 100-க்கு 20 பேர்கள் மிகக் குறைவான ஒரு தொகைதான் கொடுக்கிறார்கள். அவர்கள் படிக்கு ஒரு நயா பைசாவிற்கு மேல் இல்லாமல் கொடுக்கிற காரணத்தினால் இந்த பளு மிக அதிகமான பளு அல்ல என்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

12-50 p.m. மூன்றாவதாக, பக்கத்தில் இருக்கிற கேரள ராஜ்யத்தில் இந்த வரி விதிக்கப்படவில்லை, மைசூர் ராஜ்யத்தில் விதிக்கப்படவில்லை, ஆனால் ஆந்திர ராஜ்யத்தில் மூன்று சதவிகிதம் விதிக்கின்றார்கள். சென்னை ராஜ்யத்தில் இன்றைக்கு ஓரளவிற்கு போதுமான அரிசி இருக்கிறது. நாம் வைத்திருக்கிற தென் மண்டல ரீதியிலே கேரள ராஜ்யத்திலுள்ளவர்கள் நம்மிடத்திலிருந்து வாங்கக்கூடும். ஆகையால் அவர்கள் வாங்கி எடுத்துச் செல்லுகின்ற அளவிற்கு நம் பற்றாக்குறையை நாம் ஈடு கட்டவேண்டுமென்று சொன்னால், மைசூரில் வாங்குவதற்கு அரிசி இல்லை, ஆந்திராவில்தான் வாங்கவேண்டும். அப்படி வாங்கும்பொழுது 3 சதவிகிதம் வரி கொடுத்துத்தான் நம் ராஜ்யத்திற்கு வாங்கிக் கொண்டு வரவேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : அது எப்படி ?

THE HON. SRI R. VENKATARAMAN : This is not one of the declared goods. ஆகையினாலே 3 சதவிகிதம் விற்பனை வரி கொடுத்துத்தான் நம்முடைய ராஜ்யத்திற்கு நாம் வாங்கிக்கொண்டு வரவேண்டும். நம்முடைய ராஜ்யத்திலிருந்து வரியே இல்லாமல் பிற மாகாணங்களுக்குச் செல்லுகிறது என்று சொல்லும்பொழுது, இதனுடைய பயன்பூராவும் நம் ராஜ்யத்தில் நம்மிடம் வாங்குகிறவர்களுக்கு கிடைக்குமே ஒழிய, நம்முடைய ராஜ்யத்திலிருக்கிற மக்களுக்கு கிடைக்காது. இதை நாம் சற்று ஆராய்ந்து பார்த்து தெரிந்து கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சென்னைக்கு, தஞ்சாவூர் அரிசி கொண்டு வருவதைவிட, நெல்லூர் அரிசி கொண்டு வருவது சுலபம். நெல்லூர் சென்னையின் அருகாமையிலிருக்கிறது. இங்கு இருப்பவர்கள் அதிக விலை கொடுத்து வாங்கிச் சாப்பிடத் தயாராக இருக்கிறார்கள். அரிசியும் நன்றாக இருக்கிறது என்ற நிலைமையில், அங்கே 3 சதவிகிதம் வரி கொடுத்து வாங்கிக்கொண்டு வரும்பொழுது, நம்முடைய ராஜ்யத்தில் வரி இல்லை என்று சொன்னால், நம்முடைய ராஜ்யத்திலிருந்து வாங்கிக்கொண்டு போகக்கூடிய பிற ராஜ்யங்களுக்கு சலுகை காட்டியவர்களாவோமே ஒழிய, நம்முடைய ராஜ்யத்து மக்களுக்கு எந்தவிதமான சலுகையும் காட்டியவர்களாகமாட்டோம். இதில் பெரிய நன்மையும் இல்லை. இதனால் பெரிய நஷ்டமும் ஏற்பட்டுவிடவில்லை. இதனால் விலைவாசியும் அதிகமாக உயர்ந்து மக்களுக்கு பெரிய கஷ்டமும் உண்டாகவில்லை. ஆகவேதான் இதை நாம் ஒரு சதவிகிதமாக வைத்துக்கொண்டிருக்கிறோம். இது நன்மையானது. முன்பு 2 சதவிகிதம் இருந்ததை இப்பொழுது ஒரு சதவிகிதமாக குறைத்திருக்கிறோம். ஆகவே இதையும் மாறுதல் செய்வதற்கு பெரிய காரணங்கள் ஒன்றுமில்லை என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதுமாத்திரமல்ல. இந்த வரி ஒரு படிக்கு ஒரு நயா பைசா வீதம் வசூல் செய்யப்பட்டாலும், மொத்தத்தில் நமக்கு வருகின்ற வருமானம் 40 லட்ச ரூபாய் வரையிலும் வரும். அப்படி 40 லட்ச ரூபாய் வருமானம் வருகின்றபொழுது, அதை நாம் யாருக்கும் பயன் அளிக்காத முறையில் விட்டுக்கொடுத்தால், ராஜ்ய சர்க்காருக்கு நன்மை இல்லை. அந்த 40 லட்ச ரூபாயைக் கொண்டு 4 கம்யூனிடி பிராஜக்ட்களை நிறைவேற்றலாம். மக்களுக்கு நன்மை ஏற்படும். அல்லது 4 ரோடுகள் போடலாம். அதனால் நன்மை ஏற்படும். வேறு எந்தத் துறையில் செலவழித்தாலும் நன்மை ஏற்படும். அல்லது கனம் வேதரத்னம் பிள்ளை அவர்கள் சொன்னதுபோல இதைக் காட்டி மத்திய சர்க்காரிடம் "நாங்கள் இவ்வளவு தொகை எங்களுடைய ராஜ்யத்தில் எழுப்புகிறோம் 'டெவலப்மெண்டு ப்ரொகிராமுக்காக',

11th February 1959] [Sri R. Venkataraman]

அவ்வளவு நீங்களும் கொடுக்க வேண்டும்" என்று சொல்லி இன்னொரு 40 லட்ச ரூபாய் மத்திய சர்க்காரிடம் வாங்குவதற்கு உபயோகமாக இருக்கும். இதையெல்லாம் ஒட்டித்தான் நான் பரிசீலனை கமிட்டியில் நான் சொன்னேன். இரண்டாவதாக ஐந்து வருட திட்ட காலத்தில், நமக்கு எந்த அளவுக்கு அதிகமாக உபரி வருமானம் வருகிறதோ அந்த அளவுக்கு நன்மை கிடைக்கிறது. இந்தத் தொகைக்கு ஒப்பாக மத்திய சர்க்காரிடமிருந்து கிராண்டு முதலியவைகள் கிடைக்கின்றன. ஆகவே தான் இரண்டாவது ஐந்து வருட திட்ட காலத்திற்காவது இந்த வரியை போட்டாக வேண்டுமென்று நான் சொன்னேன். அதையும் சரி என்று அங்கத்தினர்கள் ஏற்றுக்கொண்டு, இதை ஒத்துக்கொண்டார்களே யல்லாமல், கனம் கலியாணசுந்திரம் அவர்கள் சொன்னது போல் நிதி அமைச்சரும், இந்த இலாகா அமைச்சரும் அங்கே உட்கார்ந்துகொண்டிருந்ததால் அவர்கள் ஒத்துக்கொண்டு விட்டார்கள் என்று சொல்லுவதற்கு இல்லை.

அடுத்தபடியாக, மிகவும் வன்மையாக கண்டிக்கப்பட்ட வரி காய்கறி, புஷ்பம் போன்ற பொருள்களின் மீது விதிக்கப்பட்டிருக்கும் வரி தான். அதுவும் கனம் கருணாநிதிகூட எச்சரிக்கை செய்துவிட்டார். புஷ்பக்காரர்களெல்லாம் வரி போட்டால் இனிமேல் உங்களுக்கு மாலை போடமாட்டார்கள் என்று. என்னைப் பொறுத்த அளவில் அதை நான் வரவேற்கிறேன். இந்தப் பண்டங்கள் அழுகிப் போகின்றன ; அதனால் அதற்கு வரி விலக்கு கொடுக்க வேண்டுமென்று சொல்லுவது அவ்வளவு பொறுத்தமல்ல. அப்படி அழிந்து போகக்கூடிய பண்டங்கள் பல இருக்கின்றன. இந்தப் பண்டங்களுக்கு விதி விலக்கு கொடுத்தால், ஹோட்டலுக்கு விதி விலக்கு கொடுக்கவேண்டும். ஏனென்றால், காய்கறி, பழம், புஷ்பம் இவைகளைவிட இன்னும் சீக்கிரம் ஹோட்டல் பண்டங்கள் கெட்டுவிடும். (ஒரு குரல் : அவர்கள் விற்றுவிடுவார்கள்). வேறு ரூபத்தில் மாற்றி விற்கலாம். ஆகவே, இது அவ்வளவு சரி அல்ல. இதனால் வர்த்தகம் பாதிக்கப்படுமா, வியாபாரிகள் கஷ்டப்படுவார்களா என்பதைத்தான் நாம் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். ஓரளவு சிறு சிறு வியாபாரிகள், கூடைக்காரிகள் இவர்களெல்லாம் வரி கொடுக்கவேண்டுமென்ற நிலைமை ஏற்படுமேயானால், அதை நிச்சயமாக சர்க்கார் ஏற்றுக் கொள்ளாது. சர்க்கார் அதைச் செய்ய தயாராகவும் இல்லை. அது அவர்களுடைய நோக்கமும் இல்லை. அதற்காகத்தான் 25,000 ரூபாய் வரை விற்பனை செய்கின்றவர்களுக்கு வரி விலக்கு கொடுக்கிறோம் என்று இந்த மசோதாவில் போட்டிருந்தோம். அதன் பிறகு பரிசீலனைக் கமிட்டி அதை யோசனை செய்யும்பொழுது 25,000 ரூபாயை ரூ. 30,000 ஆக உயர்த்தவேண்டுமென்று சொல்லி, 30,000 ரூபாய்க்கு உயர்த்தி யிருக்கிறோம். 30,000 ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்கிறவர்கள் கணக்கு வைத்துக்கொள்ளாமல் இருப்பது அவ்வளவு நியாயமல்ல. உண்மை யாகவே 30,000 ரூபாய்க்கு மேல் வியாபாரம் செய்கிறவர்கள் இந்த நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் இருப்பதை போக்குவதற்காகவாவது ஒரு குமாஸ்தாவை வைத்துக்கொண்டு கணக்கு வைத்துக்கொள்ள வேண்டும். 30,000 ரூபாய்க்கு குறைவாக வியாபாரம் இருக்கிறதா என்பதைக் காட்டுவதில் சில கஷ்டங்கள் இருப்பது உண்மைதான். அதற்காக சில கணக்குகள் வைத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால், ரூ. 10,000, 15,000 இப்படி வியாபாரம் செய்பவர்களை 30,000 ரூபாய்க்கு வியாபாரம் செய்கிறார்கள் என்று சாதாரணமாகச் சொல்லிவிடுவது சுலபம் அல்ல. அவர்கள் எப்படி கணக்கு வைத்துக்கொள்ளவேண்டுமென்பதற்காக பிரத்தியேகமாக விதிகளெல்லாம் தயாரிக்கப்படும். தொழிலுக்கு தகுந்த மாதிரி விதிகளை மாற்றி அமைக்க நாம் சட்டத்தில் அதிகாரம் பெற்றிருக்கிறோம். ஆகவே, என்னென்ன பண்டங்களில் வியாபாரம் செய்கிறவர்கள் என்னென்ன கணக்குகளை எந்த மாதிரி வைத்துக்கொள்ள வேண்டும் என்பதற்கு சரியான முறையிலே விதிகள் அமைக்கப்பட்டு, அவர்களுக்கு அதிகமான தொந்தரவுகள், தொல்லைகள் இல்லாத முறையிலே செய்ய வேண்டுமென்பதுதான் சர்க்காரின் நோக்கம். இன்னும் இந்த விலக்கு இருப்பதை ரூ. 50,000-க்கு உயர்த்திவிட்டால் நல்லது என்று கனம்

[Sri R. Venkataraman] [11th February 1959

கலியாணசுந்திரம் அவர்களும், எதிர்க்கட்சித் தலைவர் அவர்களும் வற்புறுத்திச் சொன்னார்கள். இப்படிச் செய்வதில் ஒரு பெரிய கஷ்டம் இருக்கிறது. இந்த வரம்பை 50,000 ரூபாய் வரையில் உயர்த்திவிட்டால், உடனே லட்ச ரூபாய்க்கு வியாபாரம் செய்கின்றவர்கள் ஒரு கடையை இரண்டு கடையாக பிரித்துவிடுவார்கள். அவர்களிடத்திலிருந்து ஒரு தம்படி வரிகூட நாம் வசூல் செய்ய முடியாது. சாதாரணமாக, இரண்டாவது கடை வைக்கவேண்டுமென்று சொன்னால், 25 ரூபாய் வாடகை கொடுக்க வேண்டும், ஒரு வருஷத்திற்கு 300 ரூபாய் வாடகை கொடுக்க வேண்டுமென்றால், 30,000 ரூபாய்க்கு வியாபாரம் நடக்கவேண்டும். ஆகையால், 30,000 ரூபாய்க்கு வியாபாரம் நடக்கும்வரையில் அவர் இரண்டாவது கடை வைக்கமாட்டார். ஏனென்றால் இதில் சர்க்காருக்கு கட்டுகின்ற வரியைவிட இரண்டாவது கடை வைப்பதில் செலவு அதிகம். அதற்கு மாறாக 50,000 ரூபாய் வரையில் விதி விலக்கு என்று சொல்லி விட்டால் நிச்சயமாக வியாபாரிகள் 60,000, 70,000 ரூபாய்க்கு வியாபாரம் ஆனவுடனேயே, அதாவது 10,000 ரூபாய் அதிகமான உடனேயே இன்னொரு கடையை தன் அண்ணன், தம்பி, மாமன், மச்சான் இம்மாதிரி யாராவது சொந்தக்காரர் பெயரில் வைத்துவிடுவார்கள்.

SRI M. KALYANASUNDARAM: 25 ரூபாய்க்கு இப்பொழுது எங்கு வாடகைக்கு இடம் கிடைக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN: சராசரியாகத்தான் சொல்ல முடியும். இன்னொரு இடத்தில் கடை வைப்பதற்கு வாடகை கொடுப்பதற்கு எவ்வளவு செலவாகுமோ அந்த அளவுக்கு குறைவாகக் கொடுக்கவேண்டிய வரி இருக்குமானால், வரியைக் கொடுப்பார்கள். அதற்கு மேல் இருந்தால், இன்னொரு கடை வைத்துவிடுவார்கள். "எக்ஸெம்ப்ஷன் லிமிட்டை" மேலும் மேலும் உயர்த்திக்கொண்டே போனால், கடைகளை பிரிப்பதற்குதான் அனுகூலமாக இருக்குமே அல்லாமல் வரி வசூலிப்பதற்கு அனுகூலமாக இருக்காது. ஆகவே, இந்த வரி விலக்கு வரம்பை மேலும் உயர்த்தவேண்டாம் என்று நான் தாழ்மை யுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மேலும், பொதுவாக 10,000 ரூபாய் வரையில்தான் வரி விலக்கு கொடுத்திருக்கிறார்கள். அது போதாது, 25,000 ரூபாய் வரையிலும் விலக்கு கொடுக்கவேண்டுமென்று கூறினார்கள்.

இதற்கு சான்றாக 1939-வது வருடத்தில் 10 ஆயிரம் என்று இருந்தது என்று பலர் சொன்னார்கள். இப்போது இருக்கின்ற விலைவாசிகள் காரண மாக இதை 25 ஆயிரம், அல்லது 30 ஆயிரம் என்று ஏன் உயர்த்தக் கூடாது என்று பலர் கேட்டார்கள். வாஸ்தவம்தான், ஆனால் அரசாங்கத் திற்கு வருகின்ற வரி 1939-ல் கிடைத்ததை போன்று கிடைத்துக் கொண்டிருந்தால் போதுமானதாக இருக்குமா என்பதையும் பார்க்க வேண்டும். அந்த நிலையில் இப்போதும் வருமானம் வந்துகொண்டி ருந்தால் 25 ஆயிரத்துக்கு உயர்த்திவிடலாம். இப்போதுள்ள நிலையில் வருகின்ற வருமானத்தைக்கொண்டு 1939-ல் கொடுத்துக்கொண்டிருந்த சம்பளத்தைபோன்று, இப்போது அதிகாரிகளுக்கு கொடுக்க முடியாது. அதே போன்றுதான் மற்றுள்ள செலவினங்களும் உயர்ந்திருக்கின்றன. ஆகவேதான் 10 ஆயிரம் என்று கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது.

அடுத்தபடியாக கணக்குகள் வைத்திருக்கின்ற விஷயத்தைப்பற்றி பல அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். இதில் ஒரு விஷயம் என்னவென்றால் தற்போதைய அனுபவத்தை வைத்துக்கொண்டுப் பார்த்தால் கணக்குவைத்திருப்பது கஷ்டமாகத் தோன்றலாம். ஆனால் இதில் நாம் பெரிய மாறுதல்களை செய்திருப்பதையும் நாம் கவனிக்க வேண்டும். அதாவது 25 ஆயிரம் ரூபாய் வரை காம்பௌண்டிங் டாக்ஸ் கொடுத்தால் போதும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால் பல, கிராமங்கள் வெகுவாக தீர்ந்துவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

11th February 1959] [Sri R. Venkataraman]

இதற்கு முன்னால் சென்னை ராஜ்யத்தில் இருந்து வந்த கணக்குகளை அதிகாரி பார்வையிடுவது என்றால் ஒருவருடைய கணக்கில் 13,500 ரூபாய் வரைக்கும் டர்ன் ஓவர் ஆகியிருக்கிறதா அல்லது 13,500-க்கு மேல் 13,502-ஆக டர்ன் ஓவர் ஆகியிருக்கிறதா என்பதை துருவிப் பார்க்க வேண்டும். ஏனென்றால் குறிப்பிட்ட தொகையிலிருந்து இரண்டு ரூபாய் கூட அதிகமாக டர்ன் ஓவர் ஆகியிருக்கிறது என்றால் நான்கு பைசா கூடுதலாக வருமானம் கிடைக்கிறது என்கிற எண்ணத்தோடு அதிக கவனத் தோடு பார்த்தாக வேண்டியிருந்தது. அதற்கு தகுந்த முறையில் கணக்கு வைக்க வேண்டிய நிலைமையில் வியாபாரிகளும் இருந்தார்கள். ஆனால் இப்போது அதிகாரி எதை பார்ப்பார்களென்றால் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் இருக்கிறதா என்பதை பார்த்துவிட்டு அதன் பின்னால் 15 ஆயிரம் ரூபாய் வரைக்கும் டர்ன் ஓவர் ஆகியிருக்கிறதா என்பதைதான் பார்ப் பார்கள். ஆகவே இதில் கணக்கு வைத்துக்கொள்வதற்கு சிறு வியாபாரி களுக்கு கஷ்டமாகயிருக்கின்றது என்று சொல்வது சரியல்ல என்பதைத்தான் நான் சொல்ல ஆசைப்படுகிறேன். இப்போது அதிகாரிகள் பார்ப்பது 14,500, ரூபாய்க்கு டர்ன் ஓவர் ஆகியிருக்கிறதா அல்லது 15,000 ரூபாய்க்கு டர்ன் ஓவராகியிருக்கிறதா என்பதைதான் அதிகாரிகள் கணக்கை துருவிப் பார்ப் பார்களே தவிர மற்றபடி 12 ஆயிரம் ரூபாயாக இருந்தாலும் சரி, 13 ஆயிரம் ரூபாயாக இருந்தாலும் சரி, 14 ஆயிரம் ரூபாயாக இருந்தாலும் சரி அதைப்பற்றியெல்லாம் அவ்வளவு உன்னிப்பாக பார்க்கவேண்டிய அவசியம் அதிகாரிகளுக்கு இல்லை. ஆகவே இதற்கும் கணக்கு வைத் திருக்க வேண்டிய அவசியமில்லை என்று சொல்வது சரியல்ல, இதனால் அவர்களுக்கு பெரிய கஷ்டங்கள் ஏற்படும் என்று சொல்வதும் சரியல்ல.

அடுத்தபடியாக சில ஷரத்துக்களைப்பற்றி சில அங்கத்தினர்கள் சில யோசனைகளை தெரிவித்தார்கள். முக்கியமாக எதிர்கட்சித் தலைவர் அவர் கள் 45-வது பிரிவில் இந்த சட்டங்களை அனுசரிக்காதவர்களுக்கு சிறை தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது, அது அவ்வளவு சரியல்ல என்பதைப் பற்றி சொன்னார்கள். இதில் 45-வது பிரிவில் என்ன குற்றத்திற்காக சிறை தண்டனை கொடுக்கப்படும் என்று சொல்லியிருக்கிறது என்பதைப்பற்றி பார்த்தால்

"Any person who wilfully submits an untrue return or fraudulently evades the payment of tax or dishonestly objects to notice being issued to him or wilfully acts in contravention of any of the provisions of the Act."

எதெது சிறை தண்டனைக்குரிய குற்றங்களாக பீனல் கோடில் சொல்லப் பட்டிருக்கிறதோ அதைத்தான் இதிலும் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற படி தவறு செய்கின்றவர்களுக்கு சிறை தண்டனை விதிக்கப்படவில்லை. மேலும் 45-வது பிரிவில் உட்பிரிவு 3-ல் யாராவது ஒரு அதிகாரியையோ அல்லது இது சம்பந்தமாக பரிசோதனை செய்ய வருகின்றவர்களையோ தடை செய்தால் அது குற்றமாக கருதப்படும், அதற்குரிய தண்டனையும் கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுவும் பப்ளிக் ஸெர் வன்ட்டை தடை செய்வது குற்றம் என்று கருதப்படுகிற குற்றத்தை சேர்ந்ததாகும். இது தவிர வேறு எதற்கும் சிறை தண்டனை விதிக்கப்பட வில்லை.

மேலும் 59-வது பிரிவில் சட்டசபையை கூட்டாமலேயே சில பொருட்களின் மீது திடீரென்று வரி போடுவதற்கு "டாரிப் ஆக்ட் நோட்டிபிகேஷன்" அதிகாரத்தை அரசாங்கம் எடுத்துக்கொண்டது என்று பலர் குறை சொன் னார்கள். இந்த மசோதாவை பிரேரேபிக்கின்ற நேரத்திலேயே நான் இதைப்பற்றி தெளிவாக எடுத்துச் சொன்னேன் அதா வது மத்திய சர்க்காரில் Provisional collection of taxes என்று தனியாக இருக்கிறது. இதன் பிரகாரம் எப்போதாவது திடீரென்று ஏற் படக்கூடிய நிலைமையை கட்டுப்படுத்த முடிகிறது. அந்த விதத்தில் கடந்த வருடத்தில் ஒரே ஒரு முறை நமது நாட்டுக்கு ஏற்பட்டது. அதா வது துணி, புகையிலை, சிகரெட் போன்றவைகளுக்கு மத்திய சர்க்கார்

அடிஷனல் எக்ஸைஸ் டாக்ஸ் விதித்த போது நமக்கு ஒரு நிர்பந்தமான நிலைமை ஏற்பட்டது. அதாவது அந்த சமயத்தில் நமது ராஜ்யத்தில் ஸ்டாக் எவ்வளவு இருக்கின்றது என்று தெரியாமல் அதன்பேரில் ஒன்றும் செய்ய முடியாத நிலைமை நமக்கு ஏற்பட்டது. அதன் பின்னால் அதை நிவர்த்தி செய்வதற்கு ஆர்டினன்ஸ் பிறப்பிக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டது. அந்தமாதிரியான ஆர்டினன்ஸ் பிறப்பிக்கும் போது அது எந்த தேதியிலிருந்து பிறப்பிக்கப்படுகிறதோ அந்த தேதியிலிருந்து நடவடிக்கை எடுக்க முடியும். அதற்கு முன்னால் இருந்த காலத்திற்கு வேறு முறையில் நடவடிக்கை எடுக்க வேண்டிய நிலைமை தான் இருந்தது. இந்த மாதிரியான விசேஷ அதிகாரம் இருப்பதினால் எந்தவிதமான தீமையும் ஏற்பட்டு விடாது என்பதை திட்டவட்டமாக சொல்ல ஆசைப்படுகிறேன். மேலும் இந்த அதிகாரம் ராஜ்ய நிர்வாகத்தின் நலனுக்காகத் தான் உபயோகப்படுத்தப்படும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். அவசரமான ஒரு நிலைமை ஏற்படுகின்றபொழுது நமக்கு அதிகாரம் இல்லாமல் இருக்கவேண்டிய அவசியமில்லை என்பதற்காக இந்த அதிகாரத்தை அரசாங்கம் வைத்துகொண்டிருக்கிறது. மேலும் நோட்டிபிகேஷன் மூலம் கொண்டுவரப்பட்ட முடிவை சட்டசபை கூட்டத்தில் அதைப் பற்றி தெரிவிக்கும்போது அதை கண்டிப்பதற்கு சட்டசபைக்கு எல்லாவிதமான உரிமையும் இருக்கிறது. ஆகவே தான் இதில் எந்தவிதமான அச்சம் கொள்ளுவதற்கும் அவசியமில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக இரண்டொரு பண்டங்களின் மீது போடப்பட்டிருக்கின்ற வரிகளைப்பற்றி கனம் அங்கத்தினர்கள் எடுத்துச்சொன்னார்கள். முதலாவதாக அதைப் பற்றி குறிப்பிட்டுவிட்டு மற்ற விஷயங்களை பின்னால் சொல்ல விரும்புகிறேன். புண்ணாக்கு (ஆயில் கேக்)-இன் பேரில் இப்பொது ஒரு முனை வரியாக மூன்று சதவீதம் போடப்பட்டிருக்கிறது. இவ்விதம் விதித்திருப்பதின் காரணமாக சிறு செக்குகள் வைத்து நடத்துகின்றவர்கள் வரி கொடுக்கவேண்டிய நிலைமை ஏற்படுகின்றது. இதனால் பலவிதமான கஷ்டங்களும் ஏற்படுகின்றன என்று பல அங்கத்தினர்களும் எடுத்துச் சொன்னார்கள். இதைப்பற்றி சர்க்கார் பரிசீலனை செய்து பார்த்து, இதில் நியாயம் இருக்கின்றது என்று உணர்ந்து, அங்கத்தினர்கள் சொன்ன குறைகளை ஏற்றுக்கொண்டு இதில் ஒருமுனைவரியாக மூன்று சதமானம் என்று விதித்திருப்பதை மாற்றி பலமுனை வரியாக இரண்டு சதமானம் என்று மாற்றுவதற்கு அரசாங்கம் தயாராக இருக்கிறது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். இதற்கான திருத்தம் கொடுக்கப்படும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பனை நார் சம்பந்தமாக, இதனால் பல தொழிலாளர்களும் பாதிக்கப்படுகின்றார்கள் என்பதை பல அங்கத்தினர்கள் எடுத்துக் காட்டினார்கள். அதை சர்க்கார் நன்றாக பரிசீலனை செய்து பார்த்து ஒருமுனை வரியாக மூன்று சதமானம் என்று போட்டிருப்பதை மாற்றி ஒருமுனை வரியாக இரண்டு சதமானம் என்று திருத்துவதற்கும் சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறது. இதற்கும் வேண்டிய திருத்தத்தையும் கொடுக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். இதர விஷயங்களில் சர்க்கார் எந்த விதமாக வரி விதித்திருக்கிறது என்பதைப்பற்றி கனம் அங்கத்தினர் மாதா கவுடர் அவர்கள் காரசாரமாக பேசினார்கள். தேயிலையிலிருந்து இரண்டு முறையில் வரி கொடுக்கவேண்டியிருக்கிறது என்றும் இதனால பல கஷ்டங்கள் ஏற்படும் என்றும் தெரிவித்தார்கள். தேயிலையை எடுத்துக்கொண்டால், இன்றைக்கு அதில் இருக்கின்ற நிலைமை என்னவென்றால் பெரிய பாக்டரிகள் வைத்திருப்பவர்கள் பிற இடங்களில் தங்களது ஏஜெண்டுகளை நியமித்து வைத்துக்கொண்டு தேயிலையை விற்று வருவதால் இங்கே வரி கொடுப்பதிலிருந்து தப்பித்துக்கொள்ளக்கூடிய நிலைமை இருக்கின்றது. ஆகையால் தொழிற்சாலையில் உற்பத்தியாகிற தேயிலைக்கு மட்டும் வரி போடுவதற்கில்லை. வரி இலையின்பேரில் போட்டிருப்பதன் காரணம், பெரிய தொழிற்சாலை வைத்திருப்பவர்கள் இலையை வாங்கித்தான் அவர்கள் செய்யவேண்டியிருக்கிறது.

11th February 1959] [Sri R. Venkataraman]

இன்னும் உருளைக் கிழங்கு சம்பந்தமாகச் சொன்னார்கள். உருளைக் கிழங்கு, இங்கு வாங்கி பிற ராஜ்யங்களுக்கு ஏற்றுமதி சொய்யப்படுகிற ஒரு பொருளாக இருப்பதால் அதை நாம் முதலில் யார் வாங்குகிறார் களோ அவர்களிடம் வசூலிக்கத் திட்டம் கொண்டு வந்திருக்கிறோம். இத ளுல் உற்பத்தி செய்கிறவர்களுக்குக் கஷ்டம் இருக்காது. முதலில் வாங்கு கிறவர்களுக்குத் தான் வரி இருக்கும்.

தோல் சம்பந்தமாக டாக்டர் லோகநாதன் அவர்கள் என்ன சிபாரிசு செய்தார்களோ அதைத் தான் போட்டிருக்கிறோம். தோல் வாங்கி கடைசி யாக பதனிடுபவர்களிடத்தில் 2 சதவீதம் வரிவாங்கப்படும். டிரெஸ்டு ஸ்கின்சு மீது 1 சதவீதம் வரி வாங்கப்படும். டாக்டர் லோகநாதன் அவர்கள் நன்றாகப் பரிசீலனை செய்து இந்த விதமாகத்தான் வரி விதிக்கவேண்டு மென்று சொன்னார்கள். அதை ஏற்றுக்கொண்டு அதே முறையில் வரி விதிப்பைச் செய்திருக்கிறோம்.

இன்னும் மற்றபடி தேங்காயைப் பற்றிச் சொன்னார்கள். அது ஆயில் லிட்ஸில் வருவதால், 2 சதவீதம் ஒருமுனையில் தான் வாங்கப்படும்.

ஒவ்வொன்றாகப் பல பண்டங்களைப் பற்றிப் பேசிக்கொண்டு போகலாம். முக்கியமாக எதைப்பற்றி அங்கத்தினர்கள் குறை சொன்னார்களோ அதில் எந்த விதத்திலும் தவறுகள் இல்லை என்பதை எடுத்துக் காட்டுவதற் காகத்தான் சிலவற்றைப் பற்றிச் சொன்னேன். அந்த அளவுக்குத் தவறுகள் இல்லை என்பதையும் நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இதை நிர்வாகம் செய்கிற முறையிலே நல்ல மாறுதல்களைச் செய்தி ருக்கிறோம். இப்போது சர்க்கார் அப்பீல் செய்தவற்கும், ஒரு அஸெஸீ அப்பீல் செய்வதற்கும் வித்தியாசம் இல்லாமல் செய்திருக்கிறோம். அஸெஸீ அப்பீல் செய்ய, அதற்கு மேல் அஸிஸ்டெண்ட் அப்பெல்லெட் கமிஷனருக்கும், அஸிஸ்டெண்ட் அப்பெல்லெட் கமிஷனரிடத்திலிருந்து அப்பெல்லெட் டிரிப்யூனலுக்கும், அதிலிருந்து ஹைக்கோர்ட்டுக்கு ரிவிஷ னுக்குப் போகவும் அதிகாரம் கொடுத்திருக்கிறோம். அதிகாரிகள் ரிவிஷன் செய்ய டெபுடி கமிஷனரிடத்தில் இருந்து அப்பெல்லெட் டிரிப்யூனலுக்குப் போக அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. போர்ட் ஆப் ரெவின்யூ தலை யிட்டு ரிவிஷன் செய்து, ரிவிஷனிலே நேரடியாக அப்பீலுக்குக் போக உரிமையைக் கொடுத்திருக்கிறோம். இந்த விதமான பாதுகாப்பு அளித் திருப்பதால் இனி அஸெஸ்மெண்ட் ஆபீஸர்கள் தங்கள் இஷ்டப்படிச் செய்வார்கள் என்று பயப்படுவதற்கு இடமில்லை. அஸெஸ்மெண்ட் ஆபீ ஸர்கள் செய்யக்கூடியது பல வித அப்பீல்களுக்கு உட்படுவதால், தவறு கள் இருந்தால் அதைத் திருத்திக்கொள்ள வசதிகள் செய்யப்பட்டிருக் கின்றன.

அடுத்தபடியாக கோவாபரேடிவ் சொஸைடிகள் எல்லாவற்றிற்கும் விதி விலக்குக் கொடுக்கவேண்டும் என்று ஒரு நண்பர் வெகு பலமாகச் சொன் னார்கள். ஆனல் இந்தச் சட்டம் கோவாபரேடிவ் சொஸைடிகளை வளர்ப் பதற்காகக் கொண்டு வரப்பட்ட ஒரு சட்டம் இல்லை. கோவபரேடிவ் சொஸைடிகள் வளருவதற்குப் பண வசதிகளைச் செய்து கொடுக்கவேண் டும். அதற்கான வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டும். கோவாபரேடிவ் சொஸைடிகளை வளர்ப்பதற்கு விற்பனை வரியில் சலுகை காட்டினால் இதே துறையில் ஈடுபட்டுள்ள வியாபாரிகளுக்குப் பாதகம் விலைவிக்குமாதலால், வியாபாரத் துறையில் ஈடுபட்டுள்ள கோவாபரேடிவ் சொஸைடிகளுக்கு எந்த வித சலுகையும் கொடுக்கவில்லை. இருந்த சலுகைகளைக் கூட இந்தச் சட்டத்தில் எடுத்துவிடுவதாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

கனம் அங்கத்தினர்கள் சொன்ன எல்லாக் கருத்துகளுக்கும் ஓரளவு பதில் சொல்லிவிட்டேன் என்பது என்னுடைய தாழ்மையான அபிப் பிராயம்.

[11th February 1959

SRI M. KARUNANITHI : கனம் அங்கத்தினர் அனந்தநாயகி அவர்கள் பாலுக்கு வரி கிடையாதே என்று எடுத்துக் கூறினார்கள். அது சரிதானு என்று அமைச்சர் விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கி றேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : அது சட்டத்திலேயே இருக் கிறது. படித்துப் பார்த்தவர்களுக்கு நன்ருகத் தெரியும். அதனல், இதற்கு விமர்சனம் சொல்லத் தேவையில்லை என்று நினைக்கிறேன். (குறுக்கீடு) பாலுக்கு வரி உண்டு. ஒரு சதவீதம் வரி உண்டு. சாதாரணமாக பால் காரர்களை இது பாதிக்காது என்று எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். 10,000 ரூபாய் வியாபாரம் இருந்தால் தான் வரி செலுத்தவேண்டும். அநேகமாக கோவபரேடிவ் சொஸைடிகள் தான் இந்த வரியைக் கொடுக்க வேண்டியிருக்கும். வேறு யாரும் கொடுக்கவேண்டியிருக்காது. இதனல் ஏதோ ஒன்றிரண்டு மாடுகள் வைத்திருப்பவர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று சொல்வது சரியல்ல. கண்டிராக்டர்கள் பாதிக்கப்படலாம். அவர் கள் மாட்டுக்காரர்களிடமிருந்து சப்ளை செய்யலாம். ஹாஸ்பிடல் முதலிய வைகளுக்குச் சப்ளை செய்பவர்கள் பாதிக்கப்படலாம். அவர்கள் இந்த வரியைக் கொடுக்கலாம். டெண்டர் எல்லாம் போட்டு லாபம் அடைகிருர் கள். அதிகமாக லாபம் வருகிற முறையில் தான் டெண்டர்கள் இருக் கின்றன. ஆகையால் இது சாதாரண பால்காரர்களை பாதிக்காது.

SRI S. M. ANNAMALAI : ஆன் எ பாயின்ட் ஆப் இன்பர் மேஷன், ஸார், அமைச்சர் அவர்கள் பேசுகிற போது அதிகமாக அரிசி வாங்குகிறவர்கள் நகரப் புறங்களில் தான் இருக்கிருர்கள் என்று சொன் ஞர், ராகி, கம்பு போன்ற தானியங்களை நாட்டுப்புற மக்கள் வாங்கு கிருர்களே, அதற்கு அமைச்சர் அவர்கள் என்ன பதில் சொல்லுகிருர்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது ராகி, கம்பு முதலி யன சாப்பிடுவது ரொம்ப நின்று விட்டது. உண்மையாகவே இந்த ராஜ் யத்திலே................(குறுக்கீடு) நான் தஞ்சையிலிருந்து வருகிற வன். அங்கு ராகி, கம்பு முதலியவைகள் சாப்பிடுவது நின்றுவிட்டது. வியாபாரத்திற்கு வரவில்லை என்று முக்கியமாக எடுத்துக்காட்டினேன். பொதுவாக அங்கங்கே உற்பத்தி செய்யப்படுவதை உற்பத்தி செய்கிறவர் களே உட்கொள்ளுகிருர்கள். ஆகவே இது பாதிக்கப்படவில்லை என்று சொல்ல விரும்புகிறேன்.

SRI S. LAZAR : 45-வது பிரிவைப் பற்றி அமைச்சர் அவர்கள் பேசுகிற போது இவைகளெல்லாம் ஏற்கெனவேயே கிரிமினல் குற்றங்கள், ஆகவே இதில் தவறில்லை என்று எடுத்துக்காட்டினர்கள். அப்படியானல் ஏற்கெனவே இண்டியன் பீனல் கோட் பிரகாரம் குற்றம் என்று சொன்னல், தனியாக 45-வது பிரிவுப்படி குற்றம் என்று அமைக்க வேண்டியதன் அவசியம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் லாஸர் அவர்கள் ஒரு வக்கீல். அவருக்கு இது நன்ருகத் தெரியும். இண்டியன் பீனல் கோடில் இருக்கிற குற்றங்களுக்கும் விற்பனை வரிக் குற்றங்களுக்கும் தனித் தனியாக சட்டம் இயற்றுவதில் தவறில்லை. இதில் வேண்டுமென்றே ஒரு கணக்கைக் கொடுக்காமல் இருப்பது, புத்தகத்தைக் காட்டவேண்டு மென்று சொல்லும்போது கொடுக்காமல் இருப்பது உத்தியோகஸ்தர் வேலை செய்வதைத் தடுப்பது போன்றவைகளையெல்லாம் குற்றங்களாகச் செய் திருக்கிறோம். இவ்வாறு செய்வது இந்தியன் பினல் கோடிலே இருப்பது போன்ற குற்றம் என்று சொன்னேனே தவிர வேறில்லை.

MR. SPEAKER : Has the Hon. Minister finished his speech? Unless he has finished his speech no member can ask for any clarification. If he does not yield, the members cannot ask for clarification.

THE HON. SRI R. VENKATARAMAN : I have finished.

SRI M. KALYANASUNDARAM : He is very obliging.

11th February 1959]

MR. SPEAKER : May be, but he is not the only person concerned here. The Speaker is also concerned.

SRI J. MATHA GOWDER : On a point of personal explanation.

MR. SPEAKER : He never attacked the hon. Member. Why does he bother?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆகவே, நான் இப்போது சந்தேகங்கள் இருந்ததைக்கூட ஓரளவு விளக்கியிருக்கிறேன். ஆகவே இந்த மசோதாவை பிரிவு வாரியாக விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : I shall now put the motion to vote. The question is—

"That the Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958) as amended by the Select Committee be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

MR. SPEAKER : During the next three days, 12th, 13th and 14th, we shall discuss the Bill clause by clause. I now adjourn the House to meet again at 9 a.m. tomorrow.

The House then adjourned.

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A.—Statutory Orders, Rules and Notifications.*

82. *Notification issued with G.O. Ms. No.* 4162, *Revenue, dated* 17*th November* 1958, *regarding the reorganization of Orathanad taluk (Tanjore district) consequent on the introduction of settlement.*

83. *Notification issued with Memo. No.* 101261 *J*-3/58-2, *Revenue, dated* 8*th December* 1958, *amending the Revenue Department Notification S.R.O. No. A*-4675 *of* 1958, *dated the* 12*th June* 1958, *under section* 22 *of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act,* 1948. *(Laid on the table of the House under section* 67 (4) *of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Act,* 1948 *(Madras Act XXVI of* 1948).

### *B.—Reports and other papers.*

19. *Short review of the activities of the Madras State Electricity Board during the first half of* 1958–59.

## APPENDIX I.

[*Vide* answer to starred question No. 202 asked by Sri K. Sattanatha Karayalar at the meeting of the Legislative Assembly held on 11th February 1959, page 77 *supra*.]

*Steps taken by the Agriculture Department to supply good quality " Seed Potatoes " to potato growers in this State.*

The Agriculture Department is taking every effort to supply good qualities of potato seeds in this State especially in the district of the Nilgiris which is the only district where the major crop is potato. After making research in the Agricultural Research Station, Nanjanad, on the potato seeds, it has been found that the existing potato stocks are all disease-affected. It has also been found that fresh imported seeds of " Great Scot " and " President" varieties are capable of giving increased yields of more than 50 per cent over the old generation seeds of these varieties produced locally. The department therefore introduced these two varieties after testing them in the Agricultural Research Station, Nanjanad and released to the ryots for further multiplication. But it is observed that over a period of years these imported varieties deteriorate due to virus diseases which results in low yields. From the experimental data available at the Agricultural Research Station, Nanjanad, it is found that the deterioration of the fresh imported seeds can be controlled to a certain extent up to five years by making the ryots rogue the crop. So supply of fresh waves of seeds from imported material once in five years is quite necessary.

2. As the State Seed Farms play a very important role in the multiplication and distribution of seeds the department have earmarked certain State Seed Farms in the Nilgiris district for the sole purpose of multiplication of good quality potato seeds. There are already six State Seed Farms in this district and eight more farms are proposed to be opened in the current year. With the aid of these State Seed Farms, it may be possible to cover about 200 acres of village seed farm from where it is possible to distribute seeds to ryots to cover the whole area. The Government are therefore making arrangements for the import of 120 tons of seed potato from the United Kingdom. If these are imported, it is expected that the first year's cropping would produce 300 tons which will be further multiplied. A scheme for the development of potatoes in the Nilgiris district has also been formulated by the Director of Agriculture, Madras, and the same is under consideration of the Government.

## APPENDIX II.

[Vide answer to starred question No. 207 asked by Sri K. Sattanatha Karayalar, at the meeting of the Legislative Assembly held on 11th February 1959, page 80 supra.]

[SUBJECT.—*Places where guineaworm disease is prevalent.*]

(*a*) The endemic districts and the ranges of infection are as follows :—

| Serial number and name of the district. (1) | Number of endemic ranges. (2) | Number of villages including hamlets affected. (3) |
|---|---|---|
| 1 North Arcot .. .. | 7 | 101 |
| 2 South Arcot .. .. | 8 | 288 |
| 3 Tiruchirappalli .. .. | 10 | 150 |
| 4 Coimbatore .. .. | 6 | 47 |
| 5 Madurai .. .. .. | 4 | 53 |
| 6 Salem .. .. .. | 4 | 20 |
| 7 Tanjore .. .. .. | 2 | 29 |
| 8 Ramanathapuram .. | 1 | 36 |
| 9 Chingleput .. .. | 1 | 2 |
| Total .. | 43 | 726 |

TAMIL NADU LEGISLATIVE ASSEMBLY
TRUTH ALONE TRIUMPHS

(*b*) The following steps are taken to control the disease :—

(1) Wherever step-wells are the source of drinking water, they are converted into draw-wells.

(2) In villages where ground water is potable, draw-wells are provided under the Rural Water-supply and Local Development Schemes.

(3) In villages where the sources of drinking water-supply are ponds and tanks, such water sources are protected by barbed wire fencing in order to prevent the people from stepping into them. Simultaneously, marginal draw-wells or piped water supply are provided under Local Development Scheme.

(4) Chemical methods like superchlorination of water and D.D.T. and Gammexane D. 120 treatment of water aimed at the destruction of infected cyclops in water are carried out.

[11th February 1959

APPENDIX III.

[Vide answer to starred question No. 231 asked by Sri K. Sattanatha Karayalar at the meeting of Legislative Assembly held on 11th February 1959, page 88 supra.]

*Particulars regarding the number of tractors sold and available under the Hire-Purchase and Hiring Schemes.*

(*a*) Number of tractors sold by the Agriculture Department under the Tractor Hire-Purchase Scheme (from 1st April 1951 to 30th June 1958)—151.

(*b*) Number of tractors available in each district under the Tractor Hiring Scheme as on 1st December 1958 :—

| | | |
|---|---|---|
| 1 | North Arcot | 10 |
| 2 | Chingleput | 13 |
| 3 | South Arcot | 15 |
| 4 | Tanjore | 17 |
| 5 | Tiruchirappalli | 13 |
| 6 | Madurai | 10 |
| 7 | Ramanathapuram | 14 |
| 8 | Tirunelveli | 7 |
| 9 | Salem | 10 |
| 10 | Coimbatore | 18 |
| 11 | The Nilgiris | 12 |
| 12 | Kanyakumari | 1 |
| 13 | Tindivanam (Agricultural Research Station.) | 2 |
| | Total | 142 |

APPENDIX IV.

[Vide answer to starred question No. 240-A asked by Sri N. K. Palanisami, at the meeting of the Legislative Assembly held on 11th February 1959, page 88 supra.]

*Particulars relating to supply of tractors to ryots on hire.*

(*a*) Number of tractors with the Agricultural Department in 1958—142.

(*b*) Number of units in working condition as on 31st December 1958—75.

(*c*) Hire charges levied—

| Type of work and type of tractor. | Rate of hire charges. |
|---|---|
| | RS. |
| Ploughing (all types) | 12 per acre. |
| Harrowing (shallow ploughing) | 7 ,, |
| Levelling with bull dozers— | |
| D-7 | 17 per hour. |
| D-6 | 16 ,, |
| T.D. 14 | 16 ,, |
| T.D. 9 | 13 ,, |
| T.D. 6 | 12 ,, |
| D-4 | 13 ,, |
| T-6 | 12 ,, |

(*d*) and (*e*) Additional tractors purchased during 1957—Nil.